| | | |
|---|---|---|
| இரண்டாம் பதிப்பு | : | ஜூன் - 2015 |
| முன் அட்டை | : | **அருள்மிகு அங்காளம்மன்,** மேல்மலையனூர் |
| பின்அட்டை | : | **அருள்மிகு சஞ்சீவிராயர்,** இராவுத்தநல்லூர் |
| உள் அட்டை | : | **அருள்மிகு லட்சுமி நரசிம்மர்,** பூவரசங்குப்பம் |
| அச்சிடுவோர் | : | பிரின்ட் ஆக்சுவல்ஸ், ராயப்பேட்டை, சென்னை-14. |
| பக்கங்கள் | : | 312 |
| விலை | : | 150/- |
| உரிமை | : | ஆணையர்,<br>இந்து சமய அறநிலையத்துறை,<br>தமிழ்நாடு அரசு |

## அமைதி - வளம் - வளர்ச்சி



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

புரட்சித் தலைவி **அம்மா** அவர்கள்

**ஆர். காமராஜ்**
உணவு, இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.

# வாழ்த்துச் செய்தி

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்ற வைரவரிகளுக்கு இலக்கணமாக தமிழகத்தை தனிப்பெருந் தன்மையோடு ஆட்சி செய்து கொண்டிருக்கும் தெய்வத்தாய் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் பொற்கால ஆட்சிக் காலத்தில் விழுப்புரம் மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளியிடுவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

விழுப்புரம் மாவட்டத்தில் சைவ, வைணவ திருக்கோயில்கள் பல அமைந்துள்ளன. அத்திருக்கோயில்களுக்கு **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் ஆட்சிக் காலத்தில் பல்வேறு திருப்பணிகள் செய்யப்பட்டு பொலிவுடன் காணப்படுகின்றன. இத்தகைய திருக்கோயில்களை கண்டு களிப்பதற்கும், தரிசிப்பதற்கும் இம்மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் மிகுந்த பயன் உள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

தொண்டைநாடு என்று போற்றப்படும் விழுப்புரம் மாவட்டத்தில் அருளாளர்கள் பலர் அவதரித்துள்ளனர். "தொண்டை நாடு சான்றோர் உடைத்து" என்னும் முதுமொழியால் இதனை அறியலாம். இத்தகைய அருளாளர்களின் அவதாரத் தலங்களை சென்று தரிசிப்பதற்கும் இவ்வழிகாட்டி நூல் மிகவும் பேருதவியாக இருக்கும்.

"திருக்கோயில்கள் நம் பண்பாட்டின் கலைக் களஞ்சியங்களாக" விளங்குகின்றன. திருக்கோயில்களில் காணப்படும் கலைநயமிக்க சிற்பங்களை படத்தொகுப்பின் மூலம் பதிக்கப்பட்டுள்ளது கண்டு இன்புறத்தக்கதாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த விழுப்புரம் மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூலை மிகவும் நேர்த்தியான முறையில் உருவாக்கிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

(ஆர். காமராஜ்)

முனைவர். ரா. கண்ணன் இ.ஆ.ப
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை - 9.
தொலைபேசி : 044 - 2567 0820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"
திருக்கோவிலில்லாத திருவிலூர்"

"......ஊரல்ல அடவி காடே"

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ள துணியும் போது ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கி பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோவிலைப் பார்க்கும் போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டைய ஓவியங்கள் என அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இல்லர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக் காலத்தில் இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன. உதாரணமாக திருநெல்வேலி மாவட்டத்தின் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றால சித்ரசபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால் அதிகாரபூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிக்காட்டி நூல், செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு உள்நாட்டு சுற்றுலாப் பயணிகள் குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய கலாச்சாரத்தை அறியவும் தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும்.

மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத் துறையினரால் வெளியிட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும் மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பது அவ்வை பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவைகளைப் பண்பு களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலை சிற்பங்களையும், ஒவிய கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேருவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோயிலின் தொன்மை கருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாறக் கண்டு நெக்குருகி நின்று நினைந்தேத்தி வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

இக்கையேடு வெளியிடுவதற்கு தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/07/2014

(முனைவர். ரா. கண்ணன்)

முனைவர் **மா. வீர சண்முக மணி,** இ.ஆ.ப.
ஆணையர்
இந்து சமய அறநிலையத் துறை




119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.
அலுவலகம் : 044 - 2833 4815
நிகிரி : 044 - 2833 4818
மின்னஞ்சல் :tn.endowments@tnhrce.org

# வாழ்த்துரை

கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞானமார்க்கம் என்ற மூன்றினில் பக்தி மார்க்கம் ஒன்றே வெகு எளிதாக யாவராலும் பின்பற்றக் கூடியது. உலக வாழ்க்கையில் நமக்குத் தேவையான ஆயுள், ஆரோக்கியம், மனஅமைதி இவற்றை அளிப்பதோடு மீண்டும் பிறவாப் பேறு எளிதில் அளிக்க வல்லது பக்தி மார்க்கம். இதில் அவரவர் வாழ்வியல் வேட்கையினால் அவர் அடைந்த பாவ புண்ணியத்தை எளிதில் கணக்கிட இயலாது. தன்னால் காண இயலாத வாழ்வின் சூக்குமங்களை உணரவும், புண்ணியங்களைத் தேடி புனிதத்தலங்களை நாடவேண்டிய கட்டாயமும் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டுள்ளது.

அரிதரிது மானிடராய் பிறத்தலரிது என்பதற்கிணங்க எடுத்த பிறவியை பயனுள்ளதாக்கி கொள்ள வேண்டும். அதற்கானத் தேடல்களை உருவாக்க வேண்டும்.

இறைவனின் நாமம் ஆற்றல் மிக்கது; அத்தகைய நாமங்கள் பல கொண்டுள்ள கடவுளரை வேண்டி கடுந்தவம் புரிந்து அவனது கருணைக்கு பாத்திரமானவர்களைப் பற்றிக் கேட்டும் படித்தும் தெரிந்து கொண்டிருக்கிறோம். இத்தகைய தவம் சாதாரண மக்களாகிய நமக்கு எளிதாகக் கைகூடாது. புத்தியைக் கொண்டு இறைவனை அறிதலும் சாத்தியமானதன்று. கடவுளரின் அருளாசி பெற திருத்தல வழிபாடு ஒன்றே எளிதான வழி.

யோகங்கள் பயின்று முத்தியை நாடுபவர் வெகு சிலரே. அது மிகவும் கடினமான பாதை. கர்மயோகம் பயின்று ஞானம் பெறலாம். அதன் பின்னர் ஞானயோகம் பயின்று முக்திக்கு வழிதேடலாம். இதனை அடைய எத்தனையோ சோதனைகளைக் கடந்து வரவேண்டியுள்ளது. நடைமுறையில் திருத்தல வழிபாடே காலத்தற்கேற்ற எளிதான வழி. இதற்கு இந்நூல் பெரிதும் வழிகாட்டும். இந்நூல் வெளியிட உறுதுணையாய் இருந்த அத்துனை அலுவலர் மற்றும் ஆன்மிக அன்பர்களுக்கும் வாழ்த்துகள்.

(முனைவர் **மா. வீர சண்முக மணி,** இ.ஆ.ப.)

# முகவுரை

நமது நாட்டை ஆலயங்களின் தேசம் என்றே சொல்லலாம். எல்லை தெய்வக்கோவில்கள், நடுகல் கோவில்கள் தொடங்கி வானளாவிய கோபுரங்கள் கொண்ட கோவில்கள் வரை பல்லாயிரக்கணக்கில் ஆலயங்கள் பரவிக் கிடக்கின்றன. பழமையும், பெருமையும் வாய்ந்த பிரம்மாண்டமான கோவில்கள் அக்கால மன்னர்களால் அமைக்கப்பட்டவையே பக்தியைக் கொண்டாடவும், வெற்றியின் காணிக்கையாகவும் ஆலயங்களை அமைத்த மன்னர்கள், அதைக் கோட்டையாக அமைத்து பாதுகாப்பு அரணாகவும் பயன்படுத்தினர்.

கடவுள் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார் தானே, பின் ஏன் கோவிலுக்கு செல்ல வேண்டும் வீட்டிலேயே கடவுள் படம் உள்ளதே, வீட்டிலேயே கடவுளை வணங்கலாமே என்று பலர் நினைப்பதுண்டு, சூரிய ஒளி என்பது இந்த பூமி முழுவதும் இருக்கும். ஆனால் அதே சூரிய ஒளி ஒரு லென்ஸ்ன் கீழ் குவியும்போது போது அபரிமிதமான ஆற்றலை கொடுக்கும். அதே போல் இறைநிலை எல்லா இடங்களிலும் இருந்தாலும் கோவில்களில் அதிகப்படியான ஆற்றல் குவியும் வண்ணம் சிலையை பல சடங்குகளை செய்து பிரதிஷ்டை செய்து உள்ளார்கள். அங்கே சென்று வழிபடுவதால் இறை ஆற்றல் முழுமையாக கிடைக்கும். மேலும் சம்பிரதாயம் என்னும் பெயரில் பல அறிவியல் பூர்வமான சடங்கு முறைகளை அங்கே வைத்து நம் உடலில் உள்ள நோய்களை போக்குவதற்கும் மனம் ஒருநிலை படுவதற்கும் பல சடங்கு முறைகளை ஏற்படுத்தி உள்ளனர். இதனால்தான் உடம்பினை கோயிலுடன் தொடர்புபடுத்தி

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரனார்க்கு வாய்கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே”

என்கிறார் திருமூலர். நம் முன்னோர்கள் இயற்கையை, இயற்கையின் தன்மையை உணர்ந்து, வென்று சிவத்தையடைந்த மனிதர்களை (சித்தர்களை) வழிபட்டு இருக்கின்றனர். ஆகையால் அவர்கள் நமக்கு விட்டுச்சென்ற கோவில்கள் அனைத்தும் நமது உடம்பேயன்றி வேறொன்றும் இல்லை என்பதை உணர்ந்து பேணிக்காத்து செயல்பட்டால் மிகச் சிறப்பு.

மற்ற இடங்களில் இறைவனை நினைத்துத் தியானிப்பதாலும், துதிப்பதனாலும், வழிபடுவதினாலும், வினைகள் வெதும்புகின்றன. கோயிலில் இறைவனை வழிபட்டால் வினைகள் வெந்து, எரிந்து, கருகி, நீறாகி விடுகின்றன.

"மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரண் எனத் தொழுமே"

என்பது சிவஞானபோதம். நமது திருக்கோயில்களில் உள்ள திரு உருவங்கள், தேவர்களாலும், முனிவர்களாலும், நால்வர்கள், ஆழ்வார்கள் போன்றவர்களாலும் நிறுவப்பபட்டு, துதிக்கப்பட்ட காரணத்தால் மேன்மை பெற்று, வழிபடுவோருடைய வல்வினைகளை அகற்றி வரங்களை அளிக்கின்றன. இத்தகைய தனிச்சிறப்பைப் பெற ஆலயத்துக்குச் சென்று வழிபடுவதே மிக உயர்ந்ததாகும்.

வாழ்வில் ஒருமுறையேனும் சென்று தரிசிக்க வேண்டிய சிறப்புகள் மிக்க பல திருக்கோவில்கள் விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ளன. தொண்டை நாட்டிற்கும் - சோழ நாட்டிற்கும் நடுவில் இருப்பதால் இம்மாவட்டத்தை 'நடுநாடு' என்றனர்.

நாயன்மார்கள் அருளிய தேவாரத் திருப்பதிகங்களும், வைணவ திவ்விய தேசங்களும் நடுநாட்டிலுள்ள கோயில்கள் எனச் சில கோயில்களைப் பகுத்துக் காட்டுகின்றன. மொத்தமுள்ள 40 நடுநாட்டு சிவத்தலங்களில் 13ம், மங்களாசாசனம் செய்யப்பட்ட 1 வைணவ திருத்தலமும் இம்மாவட்டத்தில் அமைந்துள்ளன.

இவை மட்டுமின்றி சிறப்பு பெற்ற மேல் மலையனூர் அங்காளம்மன் கோயில், மயிலம் முருகன் கோயில், திருநங்கைகள் கூடும் கூவாகம் கூத்தாண்டவர் கோயில், சிங்கவரம் ரங்கநாதரின் ஒற்றை கற்கோயில், அழகிய மரக்காணம் கடற்கரை அருகே அமைந்துள்ள பூமீஸ்வரர் கோயில், மிப்பெரிய வடிவுடன் பள்ளிக்கொண்டுள்ள ரங்கநாதரின் ஆதி திருவரங்கம் கோயில், ஒரே நேர்க்கோட்டில் அமைந்த பரிக்கல் மற்றும் பூவரசன்குப்பம் இலட்சுமி நரசிம்மர் கோயில்கள், சிற்பக்கலைக்கூடங்களாகத் திகழும் எண்ணாயிரம் அழகிய நரசிங்கர் கோவில் மற்றும் சேந்தமங்கலம் ஆபத்சகாயீஸ்வரர் கோயில் என வழிபட வேண்டிய திருக்கோயில்களின் பட்டியல் நீளமானது.

சிவபெருமானின் திருவடிகள் பூமியில் பதிந்த தலங்கள் இரண்டு ஒன்று நாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள திருவேள்விக்குடி, திருமணஞ்சேரியில் இறைவனுக்கும் இறைவிக்கும் நடக்கவுள்ள திருமணத்தினை முன்னிட்டு திருமண வைதீக சடங்குகளை திருவேள்விக்குடியில் முடித்துக்கொண்டு தேவர்கள், பூதகணங்கள் சூழ அங்கிருந்து இறைவன் திருமணஞ்சேரிக்கு நடந்து வந்தார். இரண்டாவது எங்கள் விழுப்புரம் மாவட்டத்திலுள்ள திருவெண்ணெய் நல்லூர் வயோதிக உருவத்தில் வந்து மணம் தவிழ்ந்த புத்தூரில் சுந்தரருக்கு நடைபெறவிருந்த திருமணத்தினை அடிமை ஓலைகாட்டி தடுத்து நிறுத்தி, அதன் உண்மைத்தன்மையை நிரூபிக்க சுந்தரருடன் பஞ்சாயத்தாரையும் அழைத்துக்கொண்டு திருவெண்ணெய் நல்லூருக்கு நடந்து வந்தார். ஈசன் அருட்டுறை ஆலயத்தில் ஐக்கியமாகும் முன் கருவறைக்கு முன்பாக கழற்றி வைத்த பாதுகைகள் இத்தலத்தில் உள்ளன. சுந்தரருக்கும், கிழவனாக வந்த ஈசனுக்கும் பெரியோர்கள் முன்னிலையில் பஞ்சாயத்து நடந்த மண்டபம் இன்றும் உள்ளது. பரமன் நின்று சாய்ந்திருந்த தூணில் வெதுவெதுப்பாக உஷ்ணம் உள்ளதை இன்றும் உணரலாம். மேலும் பரமன் அடி வைத்த இத்தலத்திலிருந்து சிறிதளவு மண்ணை எடுத்துச் சென்று பூஜையில் வைத்து பூஜிப்பவர்களும் உண்டு.

தன்னையும் சிவனையும் உணர்ந்த சுந்தரரிடம் என்னைப் பற்றி பாடு என்று பரமன் கேட்க, எப்படி பாடுவது என்று சுந்தரர் மருகி நிற்க என்னைப் பித்தா என்று திட்டினாயே அதையே பாடு என்று இறைவன் அடியெடுத்துக் கொடுத்தார்.

....... அன்பின் பெருகிய சிறப்பில் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொல்தமிழ் பாடுக என்றார் தூமறை பாடும்வாயார்

(216)

(தூமறை = தூய்மைமிக்க வேதங்கள்)
முன்பு எனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலாலே
என் பெயர் ‘பித்தன்’ என்றே பாடுவாய்

(219)

என்ற தமிழ் மொழியின் சிறப்புரைக்கும் இறைமை சார்ந்த அழகியவரிகளும்.

“பித்தாபிறை சூடிபெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால் வெண்ணெய்நல்லூர்
அருட்டுறையுள்
அத்தாஉனக் காளாய்இனி அல்லேன் எனலாமே”

என்ற திருவருட் குறிப்பு மொழிகளும் இத்திருக்கோயில் வரலாற்றில் இடம் பெற்றுள்ளன.

சைவத்துக்கு முதன்மையான தலமான திருவெண்ணெய்நல்லூர் இம்மாவட்டத்திற்கு சிறப்பு சேர்ப்பது போல வைணவத்திற்கு சிறப்பு சேர்க்கிறது திருக்கோவிலூர்.

முதலாழ்வார்களான பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் இத்தலத்து பெருமாளைத்தான் முதன்முதலாகப் பாடினர். இதுவே நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தின் துவக்கமாக அமைந்துள்ளது. ஒருமுறை இம்மூவரும் பல தலங்களை தரிசித்துவிட்டு திருக்கோவிலூரை அடைந்தனர். இவர்களை ஒன்று சேர்க்க நினைத்த பெருமாள், பெரும் மழையை பெய்விக்கச் செய்தார். முதலில் வந்த பொய்கையாழ்வார், மிருகண்டு மகரிஷியின் ஆஸ்ரமத்தை அடைந்து தங்குவதற்கு இடமுண்டா எனக் கேட்டார். அதற்கு முனிவர் ஒரு இடத்தை சுட்டிக்காட்டி அவ்விடத்தில் ஒருவர் படுக்கலாம் என கூறி சென்றார். சிறிது நேரத்தில் அங்கு வந்த பூதத்தாழ்வார் தனக்கு இடமுண்டா என வினவினார். அதற்கு பொய்கையாழ்வார் ஒருவர் படுக்கலாம் இருவர் அமரலாம் என்று கூறி அழைத்துக் கொண்டார். இன்னும் சிறிது நேரம் கழித்து பேயாழ்வார் அங்கு வந்தார். தனக்கும் உள்ளே இடம் வேண்டும் என கேட்க, ஒருவர் படுக்கலாம், இருவர் அமரலாம், மூவர் நிற்கலாம் எனக்கூறி அவரையும் உள்ளே அழைத்துக் கொண்டார். இப்படியாக மூவரும் நின்று கொண்டிருக்கையில், நாலாவதாக ஒருவர் வந்து மூவரையும் நெருக்குவது போன்ற உணர்வு ஏற்பட்டது. “இதென்ன விந்தை!” என அவர்கள் ஆச்சரியப்பட்ட போது மின்னல் ஒளியில் பெருமாள் தன் திருமேனியை மூவருக்கும் காட்டியருளினார். அதைக்கண்டு

வையந்தகளியா வார்கடலே நெய்யாக

- என்று பொய்கையாழ்வாரும்

அன்பேதளியா ஆர்வமே நெய்யாக

- என்று பூதத்தாழ்வாரும்

திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்

- என்று பேயாழ்வாரும் பாடி மங்களாசாசனம் செய்துள்ளனர். சைவத்திற்கும் வைணவத்திற்கும் மட்டும்தானா? அம்பிகைக்கு சிறப்பு சேர்க்கும் தலங்கள் இல்லையா எனக் கேட்போருக்கு "என்னிடம் வாருங்கள்! இன்னல்கள் தீர்க்கிறேன்" என்று அபயக்கரம் நீட்டி அழைக்கிறாள் மேல்மலையனூரில் குடிகொண்டிருக்கும் அங்காளம்மன்.

சிவனையே பிடித்த தோஷத்தை நீக்கிய அன்னை பில்லி, சூனியம், வைப்பு, ஏவல், காட்டேரி, சேட்டைகள் ஆகியவற்றால் பக்தர்களுக்கு ஏற்படும் துன்பங்களையும் நீக்குகிறாள். சிவபெருமான் மேல்மலையனூர் வந்து தங்கிய அன்றைய இரவே சிவன்ராத்திரி என்று அன்று முதல் அழைக்கப்படுகிறது. மறுநாள் பூரண அமாவாசை தினத்தில் அங்காளி ஆவிகளுக்கும் ஆன்மாக்களுக்கும் உணவை சூறையிடும் 'மயானக் கொள்ளை' நிகழ்ச்சி நடத்தப்படுகிறது. ஒவ்வொரு மாதமும் அமாவாசையன்று இரவு நடைபெறும் அங்காள பரமேஸ்வரியின் ஊஞ்சல் விழாவினைக் காண பல்வேறு மாவட்டங்களில் இருந்தும் பெங்களூர் போன்ற வெளிமாநிலங்களில் இருந்தும் லட்சோப லட்சம் பக்தர்கள் குவிகின்றனர்.

உங்களுக்கு இங்கிலாந்து கல்லூரி தெரியும், எண்ணாயிரம் கல்லூரி தெரியுமா? சிலேடைகள் பாடுவதில் வல்லவரான கவி காளமேகப் புலவரின் ஊர் எண்ணாயிரம் என்று காஞ்சி வரதராஜப்பெருமாள் கோவில் இராஜகோபுரத்தில் உள்ள 17-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றின் மூலம் புலப்படுகிறது

இராஜராஜ சதுர்வேதி மங்களம் என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்படும் இவ்வூரில்தான் 1000 வருடம் பழமையாக ராஜராஜன் கட்டிய அழகிய நரசிங்கப் பெருமாள் கோவில் உள்ளது. கை, கால், கண் என உடலின் பாகங்கள் படும் அனைத்து இடமெல்லாம் இடைவெளியின்றி முழுக்க முழுக்க கல்வெட்டுகள் சுவரிலும் படிகளிலும் தூண்களிலும் நிறைந்து காணப்படுகின்றன. ராமானுஜர் இக்கோவிலுக்கு இருமுறை

வந்து, இங்கிருந்த எண்ணாயிரம் சமணர்களை வைணவர்களாக மாற்றி இருக்கிறார். முதலாவது இராஜேந்திரன் (கி.பி. 1018-1054) காலத்தில் இந்தக் கிராமத்தில் வேதக் கல்லூரி இயங்கியது. இந்த கல்லூரியின் நிர்வாகத்தை அரசோ, பல்கலைக்கழகமோ, நகராட்சியோ மேற்கொள்ளவில்லை. ஊரின் கிராம சபையே ஒழுங்குடன் இதனை பராமரித்து வந்துள்ளது. ஆண்டு தோறும் இந்த செலவை ஈடுகட்ட இந்த வருவாயை தரவல்ல 45 வேலி நிலத்தினை கிராம சபையினர் இந்த கோயிலுக்கு கொடையாக வழங்கியுள்ளனர். இன்றைக்கு வங்கிக்கணக்கில் வைப்பு நிதி பெறுவது போல, இந்த நிலம் வைப்பு நிதியாகக் கொள்ளப்பட்டு விளையும் விளைச்சல் கல்லூரியின் செலவுகளை ஈடுகட்டும் வட்டியாக பெறப்பட்டுள்ளது. "அடடா, எப்படி வாழ்ந்திருக்கிறார்கள் மனிதர்கள், என்ன ஒரு நிர்வாகத்திறமை??"

இவைமட்டுமல்ல!! மத ஒற்றுமைக்கும் நல்லிணக்கத்துக்கும் உதாரணமாக விளங்குகிறது. சின்னாபாபுசமுத்திரத்திலுள்ள ஸ்ரீசிவஸ்ரீ சத்குரு மகான் படே சாஹிப் சித்தர் அவர்களின் ஜீவசமாதி பீடம்.

எத்தனையோ மகான்கள் இம்மண்ணில் அவதரித்து மக்களின் நலன் ஒன்றையே தமது குறிக்கோளாகக் கொண்டு உழைத்திருக்கின்றனர். தம்மை நாடி வரும் மக்களின் வல்வினைகளைப் போக்கி வாழ்வு சிறக்க வகை செய்திருக்கின்றனர். அப்படிப்பட்ட மகான்களில் ஒருவர் சிவ ஸ்ரீ படே சாகிப். இம்மகானின் புனித வரலாறு மதம் கடந்து மனிதம் போற்றுவதாய் உள்ளது. நதிமூலம் ரிஷிமூலம் பார்க்கக் கூடாது என்பார்கள். அதுபோல இம்மகான் எங்கு, எப்போது தோன்றினார் என்பது குறித்து அறிய இயலவில்லை. ஆனால் பல வெளிநாடுகளில் வசித்து பின்னர் தமிழகத்தை நோக்கி வந்து கண்டமங்கலம் அருகே உள்ள சின்னபாபு சமுத்திரம் பகுதியை தனது இருப்பிடமாக அமைத்துக் கொண்டார்.

இஸ்லாமிய சமூகத்தைச் சேர்ந்தவர் என்றாலும், இறை நிலையின் அற்புதமான பேராற்றலை உணர்ந்த பின் எல்லா அடையாளங்களையும் துறந்தார். விபூதி கொடுத்தே பலரது நோய்களைக் குணமாக்கினார். 'சாஹிப்' என்றால் உயர்ந்தவர் என்பது பொருள். 'படே' என்றால் பெரிய என்பது பொருள். தன் பெயருக்கேற்றவாறு மிகப் பெரிய சித்தயோகியாக, தவ புருஷராக விளங்கி வந்தார். இமயமலையில் தாம் தவம் செய்து

கொண்டிருந்த காலத்தில் பல ஆண்டுகளாக, பல அடிகள் ஆழத்தில் புதைந்திருந்த உளி படாத "நிஷ்டதார்யம்" என்னும் கல்லை தனது ஆழ்நிலை தியானத்தின் மூலம் கண்டறிந்து, அதனை இறையருளால் வெளிக் கொணர்ந்து அழகிய லிங்கமாக உருவாக்கி, தம்மை நாடி வரும் மக்கள் வழிபடுவதற்காக, தாம் வசித்த இடதத்திற்கு அருகிலேயே அருணாச்சலேஸ்வரர் ஆலயமாகப் பிரதிஷ்டை செய்தார்.

இவரது ஜீவசமாதியில் செவ்வாய்கிழமை மற்றும் ஆயில்ய நட்சத்திர தினங்களில் வழிபாடு விசேஷமாக இருக்கும். மகானின் அருளாசி வேண்டி இந்து, முஸ்லிம், கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்த அனைவரும் இங்கு வந்து செல்கிறார்கள். பிஸ்கெட், சாக்லெட், மிகவும் உகந்த நைவேத்தியம், விபூதியும், துளசி தீர்த்தமும், மயிலிறகு ஆசீர்வாதமும் பிரசாதங்கள், இன்றைக்கும் தன் ஜீவ சமாதி தேடி வரும் பக்தர்களின் பிணியை – அபூர்வ மருத்துவராக இருந்து தீர்த்து வருகிறார் படே சாஹிப். இவரது தரிசனத்தால் பலன் பெற்றவர்களே இதற்கு சாட்சி.

இப்படி தமிழுக்கும், திருவருளுக்கும், கலை மற்றும் பண்பாட்டு கலாச்சாரத்திற்கும், வரலாற்றுக்கும், மதசார்பின்மைக்கும் பெருமைகள் சேர்க்கும் பல திருக்கோயில்கள் நிறைந்த விழுப்புரம் மாவட்டத்தில் திருக்கோயில்களின் தரிசனத்திற்காக வருகை தரும் உங்களை இதயம் கனிந்த அன்புடன் வரவேற்கிறேன். இந்த வழிகாட்டிப்புத்தகம் தங்களை சிறப்பாக வழிநடத்தும் என்று உளமாற நம்புகிறேன்.

இப்புத்தகத்திற்கு வாழ்த்துரை வழங்கிய மாண்புமிகு உணவு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் திரு. **ஆர். காமராஜ்** அவர்களுக்கும், சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறையின் அரசு கூடுதல் தலைமைச்செயலாளர் முனைவர் திரு. **ரா. கண்ணன், இ.ஆ.ப.,** அவர்களுக்கும், இந்த புத்தகத்தினை மிகவும் சிறப்பாக வெளியிடுவதற்கு எல்லா வகைகளிலும் ஆலோசனைகளை வழங்கி ஊக்கப்படுத்திய இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் முனைவர் திரு. **மா. வீர சண்முக மணி, இ.ஆ.ப.,** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

மேலும், இந்த திருக்கோயில்கள் வழிகாட்டிப் புத்தகம் வெளிவர உதவிகள் புரிந்த விழுப்புரம், இந்து சமய அறநிலையத்துறை, உதவி

புத்தகத்திற்கு திருக்கோயில்கள் பற்றிய செய்திகளை வழங்கிய செயல் அலுவலர் மற்றும் ஆய்வர்களுக்கும் எனது நன்றிகள். இப்புத்தகத்தினை எழிலுற வடிவமைத்து அச்சிட்ட சென்னை, அட் ஆக்சுவல்ஸ் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள் உரித்தாகுக.

“வான்முகில் வழாது பெய்க, மலிவளம் சுரக்க,
மன்னன் கோன்முறை அரசு செய்க,
குறைவிலாது உயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க,
மேன்மை கொள் தெய்வ நீதி விளங்குக உலகமெல்லாம்.”

(இரா. செந்தில்வேலவன்)
இணை ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை,
விழுப்புரம்

# பொருளடக்கம்



பக்கம்

பக்கம்

பக்கம்







# ஆலயம்

ஆலயம் என்பதை ஆ + லயம் என்று பிரிக்கலாம். ஆ என்பது ஆன்மா என்றும் லயம் என்பதற்கு சேருவதற்குரிய இடம் என்றும் பொருள், ஆகவே கடவுள் திருவடியில் ஆன்மா லயித்திருப்பதற்குரிய இடம் என பொருள். ஆலயத்தை கோயில் என்றும் சொல்லுவது மரபு. கோ+இல்= கோயில். கோ என்பது கடவுள். இல் என்பது வீடு கடவுள் வாழக் கூடிய இடத்திற்கு கோயில் என்று பெயர்.

பொதுவாக ஆலய அமைப்பில் கருவறை, (கர்ப்பக்கிரஹம்) அந்தராளம், அர்த்த மண்டபம், பிரகாரம், வாகனம், பலி பீடம், கொடிமரம், பரிவார ஆலயம், (சிறு கோயில்கள்) கோபுரம், திருக்குளம், திருமதில் ஆகிய அங்கங்கள் அமையப் பெற்றதாக இருக்கும்.

கோயில்கள் நமது உடம்பின் வடிவிலே அமைக்கப்பட்டிருக்கின்றன. அதாவது மனித உடம்பில் உள்ள பாதங்கள் கோபுரமாகவும் முழங்கால் ஆஸ்தான மண்டபமாகவும், மார்பு மகா மண்டபமாகவும், கழுத்து அர்த்த மண்டபமாகவும், தலை கர்ப்பகிரகமாகவும் அமையப்பெற்றுள்ளது.

## கருவறை:

கருவறையை மூலஸ்தானம் என்றும் கர்ப்பகிரஹம் என்றும் சொல்வதுண்டு. இறைவன் எழுந்தருளி இருக்கும் இடத்திற்கு கருவறை என்று பெயர். கருவறையை சதுரமாகவும் நீண்ட சதுரமாகவும் எண் பட்டமாகவும், ஆறு பட்டமாகவும் விருத்தமாகவும் (வட்ட வடிவத்துடன்) அமைக்கலாம். இக்கர்ப்பக்கிரகத்தில் அடங்கும் உறுப்புகள் முறையே உபபீடம், அதிஷ்டானம், பாதம், பிரஸ்தாரம், விமானம் ஆகியவை, கருவறையின் உட்புறத்தில் அமையும் மூல விக்ரகத்தை பதவின்யாச முறைப்படி பிரதிஷ்டை செய்தல் வேண்டும். அதாவது விநாயகராக இருப்பின் நான்காவது பதத்திலும் மற்றும் சிவன், பிரம்மா, விஷ்ணு போன்ற கடவுள்களை அவரவர்களுக்குரிய பதத்திலும் அமைத்தல் நன்று.

## அந்தராளம்:

கருவறையையும் அர்த்த மண்டபத்தையும் (முகமண்டபம்) இணைக்கும் பகுதிக்கு அந்தராளம் என்று பெயர்.

## அர்த்த மண்டபம்:

அந்தராளத்திற்கு அடுத்து அமையும் மண்டபம் அர்த்த மண்டபம் ஆகும். குறிப்பாக இம்மண்டபம் இறைவனிடம் அருகில் சென்று வணங்குவதற்காகவே அமைக்கப்பட்டது என்று கூறலாம். இம்மண்டபமானது கருவறையின் அளவில் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படும், இதனையே முன்மண்டபம் என்றும் கூறுவதுண்டு.

## சாவகாச அந்தராளம்:

அர்த்த மண்டபத்தையும் மகா மண்டபத்தையும் இணைக்கும் பகுதிக்கு சாவகாச அந்தராளம் என்பர். இத்தகைய சாவகாச அந்தராளத்தில் வாயில் அமைப்பதும் உண்டு.



## மகா மண்டபம்:

அர்த்தமண்டபத்தினை அடுத்து அமைவது மகா மண்டபம் ஆகும். இம்மண்டபத்திற்கு அடுத்தாற்போல் நிருத்த மண்டபம், சோபன மண்டபம், வாகன மண்டபம் போன்ற மண்டபங்கள் அமைப்பதுண்டு. கோயில்களில் அமையும் இம்மண்டபத்தில் பல வகைகள் உண்டு. நான்கு கால் மண்டபம், எட்டு கால் மண்டபம், 16 கால் மண்டபம், 1000 கால் மண்டபம் ஆகியன கும்ப தூண்களைக் கொண்டும், யாளித் தூண்களைக் கொண்டும் அமைப்பதுண்டு. இம்மண்டபங்களில் உபபீடம், அதிஷ்டானம், பாதம், பிரஸ்தாரம் என்ற அலங்கார உறுப்புகள் மிகவும் அழகுடன் அமைக்கப்படும். பாதம் என்று சொல்லப்படும் தூண்கள் மிக அழகிய வேலைப்பாடுகள் கொண்டதாக அமையும்.

## பரிவார கோயில்கள்:

திருக்கோயிலின் உட் பிரகாரத்தில் அமைக்கப்படும் சிறு கோயில்களுக்குப் பரிவாரக்கோயில்கள் என்று பெயர். பிரதான மூலமூர்த்திற்கு ஏற்ற தெய்வங்களின் சன்னதிகள் இங்கு அமைக்கப்படும்.

## பிரகாரம்:

கருவறையைச் சுற்றி வலம் வரும் இடத்திற்கு பிரகாரம் என்று பெயர். இப்பிரகாரத்தையே ஏழு பிரகாரமாக செய்வதுண்டு. இத்தகைய பிரகாரங்களில் கோபுரங்கள் அமையப்பெறும்.

முதற்பிரகாரம் அந்தர், இரண்டாம் பிரகாரம் அந்தர் ஹாரை, மூன்றாம் பிரகாரம் மத்ஹாரை, நான்காம் பிரகாரம் பாஷ்யஹாரை, ஐந்தாம் பிரகாரம் மர்யாத, ஆறாம் பிரகாரம் மஹாமர்யாத, ஏழாம் பிரகாரம் பிரவேசம் என்று அழைக்கப்படுகிறது. இத்தகைய பிரகாரத்தில் பரிவார மூர்த்திகளையும், மண்டபங்கள் போன்றவைகளையும் அமைப்பதுண்டு. பிரகாரங்களை கருவறை அளவின் அடிப்படையிலும், பதவின்யாச அடிப்படையிலும் அமைப்பது மரபு.

## வாகனம்:



மூலமூர்த்திக்கு ஏற்ற வாகனங்கள் அமைப்பதுண்டு. விஷ்ணு கோயிலாக இருப்பின் கருடனையும், சிவன் கோயிலாக இருப்பின் ரிஷபத்தையும், சக்தி கோயிலாக இருப்பின் சிம்மத்தையும் மற்றும் விநாயகர் கோயிலாக இருப்பின் மூஷிகத்தையும் மேலும் சுப்ரமணியர் கோயிலுக்கு மயிலையும் அமைப்பதுண்டு.

## பலிபீடம்:

வாகனத்திற்கு அடுத்ததாக அமைக்கப்படுவது பலிபீடமாகும். இப்பலி பீடத்தை தீபநாதர் என கூறுவதுண்டு. இப்பலிபீடத்திற்கு உபபீடம், அதிஷ்டானம் போன்ற அழகியவர்க்கங்களை அமைத்து அதன்மேல் பலிபீடத்தை நிர்மாணித்தல் வேண்டும்.

## கொடிமரம்:

கொடிமரத்தின் அடிபாகத்தை கருங்கற்களைக் கொண்டு உறுதி செய்தல் வேண்டும். கொடிமரம் சந்தனம், தேவதாரு, வில்வம், மகிழம் போன்ற மரங்களால் செய்வது உத்தமம். கொடி மரத்தை அமைப்பதன் நோக்கம் அசுரர்களை அகற்றுவதன் பொருட்டும், தேவர்களை அழைப்பதன் பொருட்டும், கோயில்களைக் காப்பாற்றுவதன் பொருட்டும் இது நிர்மாணிக்கப்படுகிறது.

கொடி மரமானது 33 கணுக்கள் கொண்டதாக அமைக்கப்படும். இதன் உயரமானது கருவறை விமான உயரத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படும். இக்கொடி மரத்தைச் சுற்றி கருங்கல்லால் உபபீடம், அதிஷ்டானம் போன்ற சோபை தரக்கூடிய வர்க்கங்களை அமைத்து உறுதி செய்தல் வேண்டும். அந்தந்த மூலமூர்த்தியின் வாகனத்தைக் கொடி மரத்தின் உச்சியில் அமைக்கப்படுவது உண்டு.



## கோபுரம்:

“கோபுர தரிசனம் கடவுளின் பாத தரிசனம்” என்று கூறுவார்கள். கோபுரங்கள் 3 நிலை முதல் 16 நிலைகள் வரை அமைப்பதுண்டு. அக்கோபுரத்தின் அளவு மூலஸ்தான அளவின் அடிப்படையில் அமைக்கப்படும். மேலும் கோபுரத்தின் உச்சியில் அமைக்கப்படும் ஸ்தூபி என்கிற கலசமானது 5, 7, 9 போன்ற எண்ணிக்கை கொண்டதாக அமையும்.



# 1. அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில்

மேல்மலையனூர், செஞ்சி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | தாண்டேஸ்வரர் |
| இறைவி | : | அங்காளம்மன் |
| தீர்த்தம் | : | அக்னி தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம், மயில்கொன்றை |

*அமைவிடம்:*

*திருவண்ணாமலையிலிருந்து அவலூர்பேட்டை வழியாக 35 கிலோமீட்டர் தூரத்திலும், செஞ்சியிலிருந்து வளத்தி வழியாக*

வடக்கே 20 கிலோ மீட்டர் தூரத்திலும், சென்னையிலிருந்து திண்டிவனம் வழியாக 160 கிலோ மீட்டர் தூரத்திலும் உள்ளது மேல்மலையனூர்.

## தலவரலாறு :

போளூர், திருவண்ணாமலை, ஆரணி, செஞ்சி, திண்டிவனம், விழுப்புரம் போன்ற நகரப் பகுதிகளை உள்ளடக்கிய மிக பரந்த பரப்பையே ஆதியில் தண்டகாருண்யம் என்று அழைத்தனர். தண்டகாருண்யத்தின் மையப் பகுதியான இடமே இன்றைய மேல்மலையனூர் ஆகும். தண்டகாருண்ய பகுதிகளே சோழமண்டலத்தில் தொண்டைமண்டலம் மற்றும் நடுநாடுப் பகுதிகளாக கடையேழு வள்ளல்களால் ஆளப்பட்டன. கடையேழு வள்ளல்களின் பாரம்பரியத்தில் வந்த ஒரு சிறந்த சிற்றரசனே “மலையன்” என்பவராவார். இவர் தண்டகாருண்யத்தின் மையப்பகுதியான பூங்காவனத்தை ஆட்சி புரிந்துள்ளார். தண்டகாருண்ய பகுதிகள் பெரும்பாலும் பூமிக்குமேல் மலைப்பகுதியை கொண்டதாகும். மேல்மலைப்பகுதியை ஆண்ட மலையன் என்பாரின் பெயராலேயே மலையன் ஊர் மலையனூர் என்ற காரணப்பெயரானது. மேல்மலையனூரில் மலையன் ஆட்சிபுரிந்த காலத்தில் ஏற்படுத்திய கோட்டை கொத்தளங்களின் அடிச்சுவடுகள் இருந்தன. இன்றும்





மேல்மலையனூரில் ஒரு தெருவின் பெயர் கோட்டை மேட்டுத்தெரு என்று இருப்பது இதற்கு சான்றாக அமைகிறது.

ஒரு கால கட்டத்தில் மேல்மலையனூர் அங்காளம்மனை பூங்காவனத்தாள் என்றே அழைத்து வழிபாடு செய்துள்ளனர். இதற்கு சான்றாக பதிற்றுப்பத்தில் பத்து பாடல்கள் கொண்ட பதிகப்பாடலில் “பூங்காவில் ஊனுழலுரை ஓங்கார சக்தியே பூங்காவனத் தாயே” என்று ஒவ்வொரு பாடல் முடிவிலும் அமைகிறது. மேல்மலையனூரின் வடகிழக்கு பகுதியில் அடிகள் மிகவும் பழமை வாய்ந்த “அக்னி தீர்த்தம்“ என்ற திருக்குளம் அமைந்துள்ளது.

## புராண வரலாறு

ஆதிகாலத்தில் சிவபெருமானைப்போன்று பிரம்மனுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. தோற்றத்தில் சிவபெருமானைப்போன்று இருந்த அவன் ஒருசமயம் கயிலைக்குச் சென்றான். வந்திருப்பது தனது பதியே என நினைத்த பார்வதி தேவி, பிரமனை வணங்கி அவனுக்குப் பாதபூசை செய்தாள்.

அவ்வமயம் சிவபெருமான் வந்து சேர்ந்திட, பார்வதி தனது தவற்றை உணர்ந்தாள். பின்பு பிரம்மனுக்குத் தண்டனை அளிக்க உறுதிகொண்டு பெருமானை வணங்கி, சுவாமி இவன் தங்களைப்போன்று உள்ளான். அறியாமல் நான் செய்த பூஜைக்கு இவன் மறுப்பேதும் தெரிவிக்கவில்லை.

அதற்குக் கழுவாயாக இவனது ஒரு தலையைக் கொய்துவிட வேண்டும் என்று வேண்டி பணிந்தாள். பெருமான், பிரமனின் ஒரு தலையைக் கிள்ளியெறிந்தார். இதனால் அவரைப் பிரம்மஹத்தி தோஷம் பற்றிற்று. கீழே விழுந்த தலை



சிவபெருமானின் கையில் ஒட்டிக்கொண்டது. தனது கணவனின் நிலையறிந்த சரஸ்வதி தேவி கோபமுற்று, பிரம்மஹத்தி தோஷத்தால் மயானந்தோறும் அலைந்து திரிவீராக என்று பெருமானைச் சபித்து தனது கணவனின் தலையைக் கொய்திடக் காரணமாயிருந்த பார்வதியை நோக்கி நீ செடி கொடிகளை அணிந்து கோரரூபமாய் கானகத்தில் அலைந்து திரிக என்று சபித்தாள். பிரம்மஹத்தியினால் பீடிக்கப்பட்ட பெருமானின் கையில் விழும் உணவை பிரம்மகபாலம் புசிக்கத் துவங்கியது. இதனால் உண்ண ஏதும் கிடைக்காமல் இறைவன் பசி, தாகத்தால் காடு மலையெல்லாம் அலைந்து திரிந்தார். மயானங்களுக்குச்சென்று சாம்பலை உடலில் பூசிக்கொண்டார்.

பார்வதி தேவி, திருமாலிடம் சென்று முறையிட்டு சாப விமோசனத்திற்கான வழியைக் கேட்டறிந்தாள். பின்னர் சிவபெருமானுடன் சென்று தண்டகாருண்யத்தை அடைந்து அங்குள்ள மயானத்தினருகில் ஒரு தீர்த்தமுண்டாக்குமாறு கூறினாள். பெருமான் தனது சூலாயுதத்தால் ஒரு தீர்த்தமுண்டாக்கினார் அத்தீர்த்தம் அக்னி தீர்த்தம் என்று வழங்கப்படுகிறது. அங்கு தேவி உணவு வகைகளைத் தருவித்து மயானத்தில் சூறையிட்டாள். அந்த உணவையருந்த பெருமானின் கையைப் பற்றியிருந்த பிரம்மகபாலம் கீழே இறங்கியது. கபாலம் இறங்கியதும் பெருமான் தீர்த்தத்தில் நீராடி தோஷம் நீங்கப்பெற்றார். அப்போது கபாலம் பார்வதி தேவியைப் பற்றிக் கொண்டது. தேவி பேருருவங்கொண்டு தனது காலால் கபாலத்தை மிதித்து பின்பு அதனையெடுத்து மாலையாகக் கழுத்தில் அணிந்துகொண்டாள். அப்போது தேவியின் கோர உருவம் அவளைவிட்டு விலகியது. அந்த திருவுருவமே அருள்மிகு அங்காளம்மன் ஆகும்.

கபால மாலை தரித்து கோபத்துடன் விளங்கிய அங்காளம்மனைச் சாந்தம் செய்து மதியில்லாத காரிருள்

நாளில் உனதருள் வேண்டி மக்கள் வருவர். நீ இவ்விடத்தே எழுந்தருளியிருந்து அவர்களுக்கு அருள்செய்து வருக என்று பார்வதி தேவி கூறியருளினாள். அதன்படி அங்காளம்மனும் பிரம்மஹத்தி தோஷத்தைத் தாண்டிய பெருமான் தாண்டேசுவரர் எனும் திருப்பெயருடனும் அவ்விடத்து எழுந்தருளியிருந்து அங்கு வந்து வணங்கும் உயிர்களுக்குக் கருணை செய்து வரங்களை அருளி வருகின்றனர்.

பிரம்ம ஹத்தி தோஷம் கொண்ட சிவன், பூங்காவனத் தாயின் இருப்பிடமான மலையனூருக்கு வந்து இரவில் தங்கியதால்அந்த இரவே மகா சிவராத்திரி என்று அழைக்கப்படுவதாக கூறுவர்.

### தனிச்சிறப்பு :

மகாசிவராத்திரிக்கு மறுநாள் பூரண அமாவாசை தினம் இந்நாளில் அனைத்து வித மூலசக்திகளான 63 சக்திகளும், 9 நவசக்திகளாகி, 7 சப்த சக்திகளாகி, 5 பஞ்ச சக்திகளாக திகழ்ந்து, முப்பெரும் தேவியராக விளங்கி ஒன்று திரண்டு எழுந்த மூல முழு சக்தியாக விளங்கிடும் நாள். சிற்சக்தி என்ற ஒரே சக்தியாக, ஓம் சக்தி என்ற ஓங்கார சக்தியாக, ஆவிகளுக்கும் ஆன்மாக்களுக்கும் பொதுவாக சூறையிடுவதாக, உணவு வழங்குவதாக கருதப்படுகிறது. ஆகையால் ஓம் சக்தி என்ற சிற்சக்தியான அங்காளியால் இறைக்கப்படும் உணவை சாப்பிட ஆவிகளும், ஆன்மாக்களும் கீழே இறங்கும்போது அங்காளியானவள் ஆவி ஆன்மாக்களைக் தலைகளாக கருதி அவற்றை ஒவ்வொன்றையும் எலுமிச்சைப்பழத்தை ஊசியில் கோர்த்து மாலையாய் அணிவிப்பதை போன்ற தலைகளால் மாலையாக கோர்த்து தலை மாலைச் சூடிய ஆங்காரி அங்காளியாக விளங்குகிறாள்.




மும்மூர்த்திகளில் முதல் மூர்த்தியான சிவபெருமானுக்கே பிடித்திருந்த பிரம்மஹத்தி நீங்கிய இடமாக கருதப்படுவதால் அமாவாசை தோறும் தொடர்ந்து மூன்று முறை வருகை தந்தால் அவர்களை பிடித்துள்ள பிணிகள், தோஷங்கள், வைப்பு ஏவல், பில்லி, சூன்யம், காட்டேரி, சேட்டை, எதுவாயினும் அம்மன் திருவருளால் தானாக விலகுகிறது.

குலதெய்வ வழிபாடு செய்ய மக்கள் வெள்ளி (ம) ஞாயிற்றுக்கிழமைகளில் இத்திருக்கோயிலுக்கு வந்து மொட்டையடித்து, காதணி விழா செய்வது, பொங்கல் வைத்து பூஜை செய்வது, அபிஷேக ஆராதனை செய்வது, கஞ்சுலி, கபால வேஷம், வேப்பஞ்சீலை, மஞ்சள் ஆடை அணிந்து வந்து வேண்டுதல் செய்வது இத்திருக்கோயிலின் சிறப்புகளாகும். இத்திருக்கோயிலுக்கு ஒரு முறை வருகை தந்து தங்கள் எண்ணத்தை அம்மனிடம் வேண்டி கொண்டால் வேண்டியது வேண்டியபடி நடக்கிறது.




இத்திருக்கோயில் இளங்கோயில் வகையை சேர்ந்தது. முற்கால சோழர்களால் மூலவர் அம்மன் திருமேனி வடிவமைக்கப்பட்டுள்ளது. சுயம்பு புற்று அம்மன் சுமார் 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக கருதப்படுகிறது. இத்தலத்தின் பெருமை குறித்து மதங்க முனிவர், சன்னு முனிவரால் பாடப்பட்டுள்ளது.

### திருவிழாக்கள்

அமாவாசைதோறும் நள்ளிரவு 12 மணிக்கு அங்காளம்மன் ஊஞ்சல் உற்சவம் வெகுசிறப்பாக நடத்தப்படுகிறது. மாசி மாதம் மகாசிவராத்திரியன்று தொடங்கி 7ம் நாள் தேரோட்டத்துடன் கூடிய பிரம்மோற்சவமும் நடக்கிறது.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 100 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறுது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 4.00 மணி | உஷாக்காலம் |
| மாலை 4.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும், அமாவாசை தினங்களில் நாள் முழுவதும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

திருவண்ணாமலை, விழுப்புரம் மற்றும் செஞ்சியிலிருந்து பேருந்துகள் உள்ளன. சென்னையிலிருந்து நேரடி பேருந்து வசதியும் உண்டு. அவலூர்பேட்டை மற்றும் வளத்தியிலிருந்து ஆட்டோ வசதியும் உள்ளது.

## தங்கும் வசதி

திருக்கோவிலுக்கு சொந்தமான தங்கும் அறைகள் மற்றும் மேல்மலையனூரில் தனியார் தங்கும் விடுதிகளும் உள்ளன.

தொடர்பு முகவரி

உதவி ஆணையர் , செயல் அலுவலர்
அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில்,
**மேல்மலையனூர், செஞ்சி வட்டம்,**
**விழுப்புரம் மாவட்டம்.**

Phone : 04145 - 234229, 234291
Mobile: 9962560369
E-mail : angalammantemple@gmail.com
Website: www.melmalayanurangalammantemple.tnhrce.in

## பதினாறு வகை தீபங்கள்

தீபங்களில் மொத்தம் 16 வகை உண்டு. அவை 1. தூபம், 2. மஹாதீபம், 3. அலங்கார தீபம், 4. நாக தீபம், 5. விருட்சப தீபம், 6. புருஷா மிருக தீபம், 7. ஓல தீபம், 8. கமடதி தீபம், 9. கனு தீபம், 10. வியான்யர தீபம், 11. இம்ம தீபம், 12. துவஜ தீபம், 13. மயூர தீபம், 14. ஐந்தட்டு தீபம், 15. நட்சத்திர தீபம், 16. மேரு தீபம்.

### நவ அபிசேகங்கள்

இந்து சமயத்தில் இறைவனுக்குச் செய்யப்படும் அபிசேகங்கள் ஒன்பது வகைப்படுகின்றன. அவை 1. பஞ் சாமிருதம் 2. பால், 3. தயிர், 4. நெய், 5. தேன், 6. சர்க்கரை, 7. சந்தனம், 8. மங்களோதகம் (மஞ்சள் குங்குமம் கலந்தது), 9. சுத்தோகம்(மகாபிசேகம்). இவை நவ அபிசேகங்கள் எனப்படுகின்றன.

### பஞ்சோபசார பூசை

இறைவனை விக்கிரகத்திலோ அல்லது திருவுருவப்படத்திலோ எழுந்தருளச் செய்து 1. சந்தனம் வைத்தல், 2. மலர்களால் அர்ச்சனை செய்தல், 3. தூபம் போடுதல், 4. தீபாராதனை காட்டுதல், 5. நைவேத்தியம் படைத்தல் எனும் ஐந்து விதங்களில் வழிபடும் பூசை பஞ்சோபசார பூசை எனப்படுகிறது.



# 2. அருள்மிகு சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில்

திருவக்கரை, வானூர் வட்டம்.


அருள்மிகு வடிவாம்பிகை சமேத அருள்மிகு சந்திரமௌலீஸ்வரர்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | சந்திரமௌலீஸ்வரா் |
| இறைவி | : | அமிா்தாம்பிகை, வடிவாம்பிகை |
| தீா்த்தம் | : | சூாிய தீா்த்தம், சந்திர தீா்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*திண்டிவனத்திலிருந்து மயிலம் வழியாகப் பாண்டிச்சேரி செல்லும் சாலையில் பெரும்பாக்கம் என்னுமிடத்தில் இறங்கி தெற்கு நோக்கி 7 கி.மீ. தூரம் சென்றால், திருவக்கரையை அடையலாம். விழுப்புரத்திலிருந்து திருக்கனூர் வழியாக பாண்டிச்சேரி செல்லும் சாலையில் திருக்கனூரில் இறங்கி வடக்கு நோக்கி 5 கி.மீ சென்றும் திருவக்கரையை அடையலாம்.*

## தல வரலாறு



திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற சிவத் தலங்களுள் திருவக்கரையும் ஒன்று. தொண்டை நாட்டிலுள்ள 32 சிவத்தலங்களுள் இது 30வது ஸ்தலமாகும்.

## புராண வரலாறு

வக்கிராசூரன் என்னும் அரக்கன் சிவ பெருமானை தனது கண்டத்தில் (தொண்டையில்) வைத்து பூஜை செய்தான். தனது தவ வலிமையால் சாகா வரம் பெற்றான். தான் பெற்ற வரத்தைக் கொண்டு தேவர்களை கொடுமை செய்து வந்தான். அவன் செய்கைகளை தாங்க முடியாத தேவர்கள் சிவனிடம் சென்று முறையிட்டனர். சிவபெருமான் மகாவிஷ்ணுவை அழைத்து வக்கிராசூரனை வதம் செய்யும்படி கூற அவரும் சூரனுடன் போரிட்டு தனது சக்கரத்தை வக்கிராசூரன் மீது பிரயோகம் செய்து அவனை அழித்தார்.

வக்கிராசூரன் தங்கையான துன்முகியும் தன் அண்ணனைப் போலவே கொடுஞ்செயல் புரிந்து வந்தாள். அரக்கியான அவளை வதம் செய்ய சிவபெருமான் பார்வதியிடம் கூற பார்வதி தேவியும் துன்முகியை வதம் செய்யச் சென்றாள். ஆனால் அப்போது துன்முகி கருவுற்றிருந்தாள்.



சாஸ்திரமுறைப்படி கர்ப்பிணியையோ அல்லது சிசுவையோ வதம் செய்யக்கூடாது. எனவே பார்வதி தேவி துன்முகியின் வயிற்றை கிழித்து அவள் வயிற்றிலிருந்த சிசுவை தனது வலது காதில் குண்டலமாக அணிந்து கொண்டு அரக்கியான துன்முகியை வதம் செய்தாள். வக்கிராசூரனின் தங்கையை அழித்ததால் வக்கிரகாளியாக அங்கேயே அமர்ந்து விட்டாள்.

## வரலாற்று பின்னணி:

இத்திருக்கோயில் ஆதித்ய சோழனால் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன் செங்கற்களால் கட்டப்பட்டது. முதலாம் பராந்தக சோழனின் மகனான இராஜாதித்த சோழனால் நிதி அளிக்கப்பட்டு அவனுடைய தம்பியான கண்டராதித்த சோழனால் (கி.பி 950–957)திருக்கோபுரம் கட்டுவிக்கப்பட்டு அவரது பெயரிலேயே ‘கண்டராதித்தன் திருக்கோபுரம்‘ என்றும் வழங்கப்பட்டது. கண்டராதித்தன் மனைவியான செம்பியன் மாதேவி இத்திருக்கோவிலை கற்றளியாக்கி நிலம், பொன் முதலியவற்றை வழங்கியுள்ளார்.

## திருக்கோவில் அமைப்பு:

இத்திருக்கோயில் பெரிய இராஜகோபுரத்துடன் சுமார் 10 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது.



இராஜகோபுரம், திருநந்தி, கொடிமரம், மூலவர் முதலானவை ஒரே நேர்கோட்டில் அமையப்பெறாமல் ஒன்றை விட்டு ஒன்று விலகி வக்கிரமாக அமைந்துள்ளதை வேறெங்கும் காண முடியாது.

அம்பாள் திருக்கோயிலை அடுத்திருப்பது தீபலட்சுமியின்

திருக்கோயில் ஆகும். நீண்ட நாட்களாக திருமணம் ஆகாதவர்கள் ராகுகாலத்தில் திருவிளக்கேற்றி, அம்மனை வழிபட்டு மாங்கல்யம் கட்டிவிட்டு வந்தால் விரைவில் திருமணம் நடைபெறும் என்பது ஐதீகம்.

காளிக்கோயிலின் எதிரில் மேற்கு நோக்கிய நிலையில் ஆத்மலிங்கக் கோயில் அமைந்துள்ளது. வக்ராசூரன் பூஜித்ததால் வக்கிரலிங்கம் என அழைக்கப்படுகிறது இந்த லிங்கம் கோடைக் காலங்களில் குளிர்ச்சியாகவும், மழைக்காலங்களில் முத்து முத்தான நீர்துளிகளுடனும் காணப்படும்

கிளிக்கோபுரத்தை அடுத்து அமைக்கப் பெற்றுள்ள மிகப்பெரிய உள் மண்டபத்தின் கருவறையில் மூல நாதனாக மகேஸ்வரன் மும்முக லிங்கமாக காட்சி அளிக்கிறார். மும்முக லிங்கத்திற்கு கிழக்கே தட்புருட முகமும், வடக்கே வாமதேவ முகமும், தெற்கே அகோர முகமும் அமையப் பெற்றுள்ளது. அதிகாலையில் தட்புருட முகத்தை மஞ்சள் பூசியும், உச்சிக்காலத்தில் வாமதேவ முகத்தை சந்தனம் சாத்தியும், மாலையில் அகோர முகத்தை குங்குமம் அணிவித்தும் பூஜை செய்து வணங்கினால், அகிலத்தையே காக்கிற அந்த அர்த்த நாரீஸ்வரரின் அருள் நமக்கு கிடைக்கும். இதில் தெற்கே அமைந்துள்ள அகோர முகத்தில் பெயருக்கேற்றாற் போல் வாயில் இரு ஓரத்திலும் இரு கோரை பற்கள் உள்ளன. இக்காட்சியை இறைவனுக்கு பால் அபிஷேகம் செய்யும் போது மட்டும்தான் கண்டு களிக்க முடியும்.

மும்முகம் கொண்ட திருமூலநாதனின் வலப்புறம் நடராஜப் பெருமான் சன்னதி அமைந்துள்ளது. இடது காலை தூக்கி, வலது காலை ஊன்றி, ஆடும் சத்தியநாதன் இங்கு மட்டும் இடது காலை ஊன்றி வலது காலை தூக்கி “ருத்திரதாண்டவம்” ஆடுகின்றார்.

கருவறையின் வலப்புறத்தில் 16 பட்டை லிங்கம் அமைக்கப்பெற்றுள்ளது. இடப்புறத்தில், வீரபத்திரர் காட்சி தருகிறார்.



குண்டலினி முனிவர்

கருவறையின் உள் சுற்றில் முதலில் இருமருங்கும் இருப்பது சமயக் குரவர்கள் சிலை, அதனையடுத்து ஆனைமுகனான விநாயகர், பின்னர் சுப்ரமணியர், வள்ளி, தெய்வானையுடன் அதையடுத்து விஷ்ணுதுர்க்கையும் உள்ளனர். எங்கும் இல்லாத அற்புதமாக விஷ்ணுவும் துர்க்கையும் ஒன்று சேர்ந்து ஒரு கையில் சங்கும் மறுகையில் சக்கரமும் ஏந்தி நின்ற நிலையில் காட்சி தருகின்றனர். அருகில் பல்லவர்கால, குடையுடன் கூடிய விநாயகர் சிலை உள்ளது. மேலும் இங்குள்ள துர்க்கை எட்டு கைகள் உடைய அஷ்டபுஜ துர்க்கையாக காட்சியளிக்கிறாள்.

இத்திருக்கோயில் கருவறையின் பின்புறம் மேற்கு நோக்கி வரதராஜ பெருமாள் தனிக் கோயிலில் எழுந்தருளியுள்ளார். சிவபெருமானின் வேண்டுகோளுக்கிணங்க வக்கிராசூரனை வதம் செய்துவிட்டு பிரயோகச் சக்கரத்துடனும், சங்கும் விளங்க, அபய அஸ்தத்துடன் ஆறடி உயர திருக்கோலத்தில் அற்புதமாக எழுந்தருளியுள்ளார். இக்கோயில் கோச் செங்கட் சோழனால் செங்கல்லால் கட்டப்பட்டமையை, இங்குள்ள கல்வெட்டால் அறிய முடிகிறது. (க.வெ. 205, 1904).

பெருமாள் சந்நிதியின் உள் புறத்திலேயே, இடது பக்கத்தில் நந்த கோபாலனின் திருவுருவச்சிலை உள்ளது. தனது ராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும் ஒன்று என, உலகுக்குக் காட்டும் விதத்தில் ராமகிருஷ்ணனாக தனது மனைவி பாமா, ருக்மணியுடன் இணைந்து கையில் வில்லும், அம்புமாக காட்சி தரும் திருக்கோலம் கண்கொள்ளாக் காட்சியாகும். கோயிலின் எதிரில் கருடாழ்வார் எழுந்தருளியிருக்கிறார்.

பெருமாள் கோயிலின் பின்புறம் கிழக்கு நோக்கி "சஹஸ்ரலிங்கம்" கோயில் அமைந்துள்ளது. ஒரே ஒரு சிறிய சிவலிங்கத்தில் 1008 லிங்கங்கள் அமைக்கப்பெற்றுள்ளது. நவகிரகங்களில் வழக்கமாக சனீஸ்வரனுக்கு காகம் வலப்புறமாக இருப்பதற்கு பதிலாக இங்கு இடப்புறமாக அமைந்துள்ளது.

கருவறைக்கு தென் திசையில் குண்டலினி மாமுனிவர் என்ற சித்தர் ஜீவசமாதி ஆகியுள்ளார். அவர் ஜீவசமாதி நிலையை அடைந்ததும் லிங்கம் அமைக்கப்பெற்ற நிலையில் தனிக்கோயிலாக அமைக்கப்பட்டுள்ளது.

## தனிச்சிறப்பு

இராஜகோபுரத்தின் உட்புறம் மேற்கூரையில் ஒன்பது கட்டங்களின் நடுவே அழகிய தாமரை மலர் அமைக்கப் பெற்றுள்ளது. இம்மலரைச் சுற்றிலும் திசைக் காவலர்கள் (அஷ்டதிக்குப் பாலகர்கள்) காட்சியளிக்கின்றனர். கோபுரத்தின் அதிஷ்டானம் (அடிப்படை) கருங்கற்களாலும், சுவர் செங்கற்களாலும் கட்டப்பட்டுள்ளது.

இராஜகோபுரத்தை அடுத்த கோயிலின் உட்பகுதியில் இடப்பக்கமாக அருள்மிகு வக்கிர காளியம்மன் சன்னதி உள்ளது. பொதுவாக காளிக்கோயில் ஊரின் எல்லையில் இருக்கும். ஆனால் இவ்வூரின் நடுவில் ராஜகோபுரத்தின் நுழைவு வாயிலின் அருகிலேயே அமைந்து வித்தியாசமானதாக உள்ளது. வலது காலை சற்றே தூக்கி மடித்து அமர்ந்துள்ள பீடத்தில் ஊன்றியபடியும், இடது காலை தரையில் ஊன்றியபடியும் உடலை சற்று வலப்புறம் திருப்பிய நிலையில் அமர்ந்துள்ள காட்சி வேறெங்கும் காணக்கிடைக்காதது. அன்னையின் இடது பாதத்தின் கீழே ஆதி சங்கரரின் ஸ்ரீ சக்கரத்தை பிரதிஷ்டை செய்துள்ளனர்

கோயிலின் உள்ளே சப்த மாதர்கள் உள்ளனர். இவர்களில் சாமுண்டிக்கு பதிலாக அன்னை பராசக்தியே காளியாக உரு வெடுத்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறாள். இத்திருவுருவங்கள் பிற்காலப் பல்லவர்களின் கலைத் திறனைப் பிரதிபலிக்கின்றன.

காளி சன்னதி கருவறையின் வலது புறம் யோகேஸ்வர லிங்கமும் இடதுபுறம் வலம்புரி கணபதியும் உள்ளனர். இவற்றில் வலம்புரி கணபதி அபூர்வமான கணபதியாகும். காளிகோயிலின் வெளிப்புறத்தில் பக்கத்திற்கு இரண்டாக நான்கு துவார பாலிகைகளின் சிலை உள்ளது. இந்த துவார பாலிகைகளையுடைய வரலாறு நமக்கு காளியின் கருணையை எடுத்துக்காட்டுகிறது.

முதலாம் இராஜ இராஜசோழன் காலத்திலிருந்து (கி.பி.1430ல்) இருந்து செம்மந்தை காங்கேயன் வரையுள்ள பல்வேறு மாமன்னர்களும், அவர்தம் தேவிமார்களும், குறுநில மன்னர்களும், அரசு அதிகாரிகளும் செய்வித்த திருப்பணிகளையும், கோயிலுக்கு அளித்த நிமந்தங்களையும், 43 கல்வெட்டுகள் விரிவாக எடுத்துச் சொல்கின்றன.

கன்னிப் பெண்களுக்கு நீண்ட நாட்களாக திருமணம் தடைபட்டு வந்தால் இத்திருக்கோயிலுக்கு வந்து கருவறையின் உள்சுற்றில் இருக்கின்ற கருங்கல் சுவருக்கு மஞ்சள் பூசி பூஜைகள் செய்த "பஞ்ச கன்னிதோஷம்" என்ற சாந்தியை செய்து கொண்டால் விரைவில் திருமணம் கைகூடும் என்பது ஐதீகம்.

வக்கிர கிரகங்களால் வாழ்க்கை பாதிக்கப்பட்டவர்கள் இத்திருத்தலத்திற்கு வந்து வக்கிரகாளி, வக்கிர லிங்கம், வக்கிர சனி முதலியோரை தரிசித்து, வக்கிரமாக கட்டப்பட்டுள்ள இக்கோயிலினை வலம் வந்தால், வக்கிர கிரகங்களின் தொல்லைகளும், துன்பங்களும் நீங்கப் பெற்று வாழ்க்கையில் பயனடைவர்.



திருமணமாகாதோர். பிள்ளைப்பேறு அற்றோர், இக்கோயிலில் உள்ள துர்க்கையம்மனை தரிசித்து செவ்வாய், வெள்ளி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் இராகு கால நேரத்தில் அர்ச்சனை செய்து வந்தால் நிறைந்த பலனுண்டு. மேலும், நினைத்த காரியம் கைகூட வேண்டுமென்போர், உடல் நலமற்றோர், மற்றும் மனசாந்தி அற்றோர் யாவரும், பௌர்ணமி தினத்தன்று வக்கிரகாளியம்மனை தொடர்ந்து இடைவிடாது மூன்று மாத பௌர்ணமி நாட்களிலும் தரிசித்து வந்தால், எண்ணிய காரியம்

கைகூடும். பௌர்ணமி தினத்தில் நள்ளிரவு 12 மணி பூஜையில் காளியம்மனை தரிசித்தால் காளியம்மனின் சாந்த சொரூபத்தை காணுவதுடன் எல்லாம் வல்ல இறையருள் பெற்று பயனடையலாம்.

திருஞானசம்பந்தர் தனது திருப்பதிகத்தின் மூன்றாம் செய்யுளில்

"சந்திரசேகரனே அருளாயென்று தண் விசும்பில்
இந்திரனும் முதலா இமையோர்கள் தொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலும் அனலாய்விழ ஓரம்பினால்
மந்திர மேருவில்லா வளைத்தான்இடம் வக்கரையே"

என்று பாடியுள்ளார்.

திருநாவுக்கரசர் தனது திருப்பதிகத்தின் இரண்டாம் செய்யுளில்

"நக்க ரையனை நாள்தொறும் நன்னெஞ்சே
வக்க ரைஉறை வானைவ ணங்குநீ
அக்க ரையோ டவரை யார்த்தவன்
கொக்க ரையுடை யான்குட முக்கிலே"

என்று பாடியுள்ளார். மேலும் சேக்கிழார் அருணகிரிநாதர், இராமலிங்க அடிகளார் ஆகியோரும் இத்தல இறைவனை சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் பௌர்ணமி தோறும் இரவு 12 மணிக்கு ஜோதி தரிசனம் மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. மற்றும் சித்ரா பௌர்ணமி சுவாமி வீதியுலா, கார்த்திகை தீபம், தைப்பூசம், காணும்பொங்கல், சித்திரை–1, தெப்பல் உற்சவம், சிவராத்திரி, ஆடிக்கிருத்திகை ஆகிய விழாக்களும் நடைபெறுகின்றன.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 100 நபர்களுக்கு

அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 6.00 மணி | உஷத்காலம் |
| காலை 8.00 மணி | காலசந்தி |
| முற்பகல் 11.30 மணி | உச்சிகாலம் |
| மாலை 5.30 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 5.00 மணி முதல் பிற்பகல் 1.30 மணி வரையிலும் பிற்பகல் 3.30 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும், பௌர்ணமி அன்று நாள் முழுவதும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திண்டிவனம், பாண்டிச்சேரி, விழுப்புரம் ஆகிய ஊர்களில் இருந்து பேருந்து வசதி உள்ளது. திருக்கனூரிலிருந்து ஆட்டோ வசதியும் உள்ளது.

### தங்கும் வசதி

திண்டிவனம், பாண்டிச்சேரி, விழுப்புரம் ஆகிய ஊர்களில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
அருள்மிகு சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில்
திருவக்கரை, வானூர் வட்டம்

Phone: 0413 - 2688949
Mobile : 9443251012
E-mail: vakrakaliamman@gmail.com

## விநாயகருக்கு முதல் மரியாதை ஏன்?



இந்து சமய பூசைகளின் போது முதலில் விநாயகருக்கான விக்னேசுவர பூசையத்தான் செய்கிறோம். விநாயகரின் உருவச்சிலை இல்லாவிட்டால் மஞ்சள்தூளில் பிள்ளையார் பிடித்து வைத்துப் பூசை செய்த பிறகுதான் மற்ற பூசைகளைச் செய்கிறோம். விநாயகருக்கு ஏன் இந்த முதல் மரியாதை?

விநாயகரை மங்களநாதா என்றும் சித்தாதா என்றும் கூறுகிறோம். அவர் அனைத்து நன்மைகளையும் நமக்கு அருள்பவர். நாம் மேற்கொள்ளும் செயல்கள் விக்கினம் (இடையூறு) இல்லாமல் நடைபெற அவர் அருள் புரிபவர். அதனால் அனைத்து நல்ல செயல்களுக்கும் முதலில் விக்கினேசுவர பூசை செய்ய வேண்டும்.

கணபதி ஞானத்தின் உருவம். அதனால், அவர் நம்மை நமது முயற்சிகளில் எப்போதும் நல்ல வழியில் நடத்துவார். தவறுகள் ஏற்படாமல் பார்த்துக் கொள்வார். ஆகையால் நாம் நல்ல வழியில் காரியசித்தி (செயல் வெற்றி) ஏற்பட முதலில் அவருடைய அருளை நாடுகிறோம்.

யோக அடிப்படையிலும், வேதாந்தப்பூர்வமாகவும் பார்த்தால் அவர் மூலாதாரர் ஆகையினால் எந்த நற்செயலுக்கும், மூலமாகவும், ஆதாரமாகவும் அவரைக் கருதி வழிபடுகிறோம்.

# 3. அருள்மிகு அரசலீஸ்வரர் திருக்கோயில்

ஒழுந்தியாம்பட்டு, வானூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அரசலீஸ்வரர் |
| இறைவி | : | குணசுந்தரி என்கிற பெரியநாயகி |
| தீர்த்தம் | : | அரசடித்தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | அரசமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

## *அமைவிடம்:*

*திண்டிவனத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவில் உள்ள சாலையிலிருந்து 1 கி.மீ. உள்ளே திருஅரசிலி உள்ளது. தற்போது ஒழுந்தியாம்பட்டு என இவ்வூர் அழைக்கப்படுகிறது.*



## தலவரலாறு

தொண்டை நாட்டுத் தேவாரத்தலங்களில் இத்தலம் 31வது தலம், மரங்களில் சிறந்த அரசமரத்தினடியில் பெருமான் விளங்குவதால் இத்தலம் அரசிலி எனப்பெயர் பெற்றது. வாமதேவ முனிவர் வழிப்பட்ட தலம், சத்தியவிரதன் என்னும் சாளுக்கிய மன்னனின் பக்தியை அறிந்து இறைவன் அம்மன்னவனோடு மானுருவங் கொண்டு விளையாடிய தலம். அம்மன்னனின் மகன் இந்திரசேனனும் அரசிலிநாதரிடம் அளவற்ற பக்தி பூண்டு வழிபட்ட தலம். இந்திரசேனனின் திருமகள் சுந்தரி அரசிலிநாதரை வழிபட்டு இத்தலத்திலேயே வாழ்ந்து இறையடி சேர்ந்த தலம்.

## திருக்கோயில் அமைப்பு

இக்கோவில் 2–50 ஏக்கர் நிலப்பரப்பளவில் 3 நிலை இராஜகோபுரம், ஒரு பிரகாரத்துடன் அமைந்துள்ளது.

மூலவர் சுயம்புலிங்க வடிவில் அருள்மிகு அரசிலிநாதர் கிழக்கு நோக்கியும் அம்மன் பெரியநாயகி தனிச் சன்னதியின்

தெற்கு நோக்கியும் எழுந்தருளியுள்ளனர். பிரகாரத்தில் விநாயகர், ஆறுமுகப்பெருமான், சூரியன், பைரவர், சண்டேசுரர், நவக்கிரகம், நால்வர் சன்னதிகள் அமைந்துள்ளன. கோயிலுக்கு எதிரே தலமரமான அரசமரமும், அரசடித் தீர்த்தமும், திருக்குளமும் உள்ளது.

## தனிச்சிறப்பு

திருஞானசம்பந்தர் இத்திருத்தல இறைவனைப்பற்றி

“வண்டறை கொன்றை மான்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவின மாலை மத்தமுஞ் செஞ்சடைக்குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியந்தோண்மேல்
ஆடன் மாசுண மசைத்த வடிகளுக் கிடமரசிலியே”

என்று தேவாரம் பாடியுள்ளார். அவர் இத்தலத்திற்கு வந்த போது சில நாட்கள் இங்கு தங்கி வழிபட்டார் என இத்தலபுராணம் கூறுகிறது. அவர் தங்கியிருந்த அடையாளமாக கோயிலின் தென் கிழக்காக திருஞானசம்பந்தர் திருமடம் அமைந்துள்ளது. பத்ம புராணத்தில் அரசிலிக் காதை என்று நூல் இத்தலத்தைப் பற்றிய புராணவரலாற்றுச் செய்திகளைக் கூறுகிறது.

கௌமார மடம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் இத்தலத்து இறைவன் மீது இருபதிகங்களும், அம்பிகை மீது ஒரு பதிகமும், முருகன் மீது திருப்புகழும் பாடியுள்ளார். அரசிலி அந்தாதி









என்னும் நூல் தருமையாதீனம் 23வது ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது.

இத்தலத்திலுள்ள குலோத்துங்கச் சோழ மன்னனின் கல்வெட்டில் இவ்வூர் இறைவர் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மாத்தூர் நாட்டு ஒருகறையான குலோத்துங்க சோழ நல்லூர் திரு அரசிலி உடையார் ஆலால சுந்தரனார் எனக் குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின்படி ஒருகறை என்ற பெயரே பிற்காலத்தில் மக்கள் வழக் கில் ஒழுந்தியாம்பட்டு என வழங்கலாயிற்று.

## திருவிழாக்கள்

வைகாசிமாதத்தில் விசாகப் பெருவிழா இத்தலத்தின் சிறப்பு விழாவாகக் கொண்டாடப்படுகிறது.

| நேரம் | காலபூஜை |
| --- | --- |
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் பிற்பகல் 11.30 மணி வரையிலும், மாலை 4.30 மணி முதல் இரவு 7.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திண்டிவனத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்,

அருள்மிகு அரசலீஸ்வரர் திருக்கோயில்,

ஒழுந்தியாம்பட்டு,

வானூர் வட்டம், விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9943922021

## விபூதியின் தத்துவம்



விபூதி என்பது மேலான செல்வம் என்ற பொருளுடையது.

உலகிலுள்ள அனைத்துச் செல்வங்களும் இறைவனின் அருளாகிய செல்வத்தால் ஆனவை எனவே அந்த அருட்செல்வமே மேலான செல்வமாகும். "விபூதி – ஐஸ்வர்யம்" என்றும் சொல்லப் படுவதுண்டு.

விபூதிக்கு இன்னொரு பெயர் திருநீறு.

நீற்றப்பட்டது நீறு. அது அழிவதில்லை. அது வேறு பொருளாக மாறுவதில்லை. தோன்றிய உலகமெல்லாம் அழியும் போது அழிவில்லாததும் மாற்றமில்லாததுமான நிலையை அது அடையும்.

இதுவே விபூதியின் தத்துவம்.



# 4. அருள்மிகு திருமகாகாளீஸ்வரர் திருக்கோயில்

இரும்பை, வானூர் வட்டம்.




| | | |
|---|---|---|
| இறைவன் | : | மகா காளீஸ்வரர் |
| இறைவி | : | குயில்மொழி நாயகி, மது சுந்தர நாயகி |
| தீர்த்தம் | : | மாகாள தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | புன்னை |
| ஆகமம் | : | காமிகம் |

### *அமைவிடம்:*

*திண்டிவனத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் 30 கி.மீ. தொலைவிலும் பாண்டிச்சேரியிலிருந்து 13கி.மீ, தொலைவிலும் திருச்சிற்றம்பலம் கூட்டுச்சாலையிலிருந்து 2 கி.மீ. உள்ளே திரு இரும்பை மாகாளம் உள்ளது. இரும்பை கூட்டுச்சாலையிலிருந்து வடக்கில் 2கி.மீ தொலைவில் திருக்கோவில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு:



தொண்டை நாட்டு தேவாரத் தலங்களில் இத்தலம் 32வது தலம். இலுப்பை மரங்கள் நிறைந்த பகுதியாதலின் இலுப்பை வனம் என்பது இரும்பை எனவும், மாகாளர் பூசித்ததால் கோவில் மாகாளம் எனவும் இருஞ்சேரி இலும்பை எனவும் வழங்கப்படுகிறது. மாகாளர் இத்தல பெருமானை வழிபட்டு அருள் பெற்றதால் இறைவன் மாகாளர் என்ற திருப்பெயரோடு விளங்குகிறார். கடுவெளிச் சித்தர் இத்தலத்தில் கடுந்தவம் புரிந்து வந்தார். அக்காலத்தின் மழையில்லாமல் பயிர்கள் வாடுவதைக் கண்ட இந்நாட்டுச் சிற்றரசன், இவரது கடுந்தவமே மழையின்மைக்கு காரணம் என எண்ணி ஒரு தேவதாசியின் மூலம் சித்தரது தவத்தைக் கலைத்தான். சித்தர் தவம் கலைந்து வருந்தி அத்தலத்திலேயே வாழ்ந்து வந்தார். ஒரு நாள் கோவில் பெரு விழாவில் நடைபெற்ற நாட்டிய நிகழ்ச்சியில் அந்நடன மாதின் காற்சிலம்பு கீழே கழன்று விழுந்தது. சித்தர் தெய்வீக நாட்டிய நிகழ்ச்சி தடைபடக் கூடாதென்றெண்ணி அச்சிலம்பை எடுத்து நடனமாதின் காலில் பூட்டினார். அதை கண்ட மக்கள் சித்தரை ஏளனம் செய்து நகைத்தனர். சித்தர் சினந்து “வெல்லும் பொழுது விடுவேன்







வெகுளியை... கல்லும் பிளந்து கடு வெளியாமே" என்று பாடினார். அந்நிலையில் ஆலயத்தில் உள்ள மூல இலிங்கம் வெடித்து எட்டு பகுதிகளாக சிதறியது. இதையறிந்த மன்னன் சித்தரிடம் மன்னித்து அருளுமாறு வேண்டினான். சித்தர் மீண்டும் ஒரு பாடல் பாடியபோது சிதறிய லிங்கம் ஒன்று கூடியது. அதனை செப்பு தகடு வேய்ந்து ஒன்றாக்கி மன்னன் வழிபட்டான். அன்று முதல் அந்நிலையிலேயே சிவலிங்கம் விளங்கி வருகிறது.

## திருக்கோவில் அமைப்பு

இக்கோவில் 1–00 ஏக்கர் நிலப்பரப்பில் ஒரு பிரகாரத்துடன் அமைந்துள்ளது. மூலவர் சுயம்புலிங்க வடிவில் அருள்மிகு திருமாகாளேசுவரராக கிழக்கு நோக்கி அருள் பாலிக்கிறார். அம்மன் குயில்மொழிநாயகி தெற்கு நோக்கிய சன்னதியில், எழுந்தருளியுள்ளார். சுவாமி சன்னதிக்கு பின்புறம் ஆறுமுகப் பெருமான் சன்னதி சிறப்புடையது. மூலஇலிங்கம் எட்டாக வெடித்துள்ளது. செப்புத்தகட்டால் இணைக்கப்பட்டு காட்சி யளிக்கிறது.

## தனிச்சிறப்பு

திருஞானசம்பந்தர் எழுந்தருளி இத்தல இறைவனை வழிபட்டு

"மண்டுகங்கை சடையிற் கரந்தும் மதிசூடிமான்
கொண்டகையாற் புரம்மூன் றெரிந்த குழகன்னிடம்
எண்டிசையும் புகழ்போய் விளங்கு மிரும்பைதனுள்
வண்டுகீதம் முரலடபொழில் கலாய்நின்ற மாகாளமே"

– என்று திருப்பதிகம் பாடியுள்ளார் ஷேத்திரக் கோவையில்





திருநாவுக்கரசர் அருளிய ஒரு பாடலையும், சுந்தரர் இத்தலத்தைக் குறித்து ஊர் தொகையில் அருளிய ஒரு பாடலையும் இத்தலம் பெற்றுள்ளது.

இக்கோவிலில் 4 கல்வெட்டுக்கள் உள்ளன. கல்வெட்டுகளில் குலோத்துங்கசோழன், விக்கிரம பாண்டியன், இராசராயர், சம்புவராயர் காலத்தில் நிலதானம் அளிக்கப்பெற்ற செய்தியையும், இவ்வூரை ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மாத்தூர் நாடு என்றும், ஊர் 'இரும்பை மாகாளம்' என்றும், இறைவன் பெயர் 'திருமாகாளமுடையார்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

## திருவிழாக்கள்

ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தில் காவடி உற்சவம், கார்த்திகை சோமவார நாளில் சிறப்பு வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 7.00 மணி முதல் பிற்பகல் 11.30 மணி வரையிலும், மாலை 4.30 மணி முதல் இரவு 7.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*திண்டிவனம், பாண்டிச்சேரியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*திண்டிவனம், பாண்டிச்சேரியிலிருந்து தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்,
அருள்மிகு திருமகாகாளீஸ்வரர் திருக்கோயில்,
இரும்பை, வானூர் வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile : 9443251012

# 5. அருள்மிகு திந்திரிணீஸ்வரர் திருக்கோயில்

திண்டிவனம் நகர்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | திந்திரிணீஸ்வரர், திண்டீசுவரர் |
| இறைவி | : | மரகதாம்பிகை |
| தீர்த்தம் | : | தீர்த்த குளம் |
| தலவிருட்சம் | : | வன்னி |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*சென்னை – திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் சென்னையிலிருந்து 125 கி.மீ. தூரத்திலும், புதுவையிலிருந்து 40 கி.மீ. தொலைவிலும் திண்டிவனம் அமைந்துள்ளது. பேருந்து நிலையம், இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 0.5 கி.மீ.தொலைவில் திருக்கோயில் உள்ளது.*

## தலவரலாறு

காடு – வட மொழியில் வனம், ஆரண்யம் என்ற பெயர்களால் குறிக்கப்படும். புளியமரத்தை வடமொழியில் திந்திரிணி என்பர். இவ்வூர் புளிய மரக்காடுகளால் சூழப்பட்டிருந்ததால் 'திந்திரிணி வனம்' எனப்பெற்று அதுவே காலப்போக்கில் திண்டிவனம் என மருவி வழங்குகிறது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள திந்திரிணீஸ்வரரை திண்டி, முண்டி, கிங்கினி, கிலாலி, வால்மீகி போன்ற முனிவர்கள் வணங்கி முக்தி பெற்றதாகப்புராணங்கள் கூறுகின்றன.



இத்திருக்கோயில் கி.பி.1015ம் ஆண்டுகளுக்கு முன்னர் சோழ வம்சத்தைச் சார்ந்த குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டது.

## திருக்கோயில் அமைப்பு

கிழக்கு நோக்கிய ஏழு நிலை இராஜகோபுரம், விமானம் வியாச முனிவரால் நிர்மாணிக்கப்பட்டது ஆகும். உயர்த்தியமைந்த நெடிய திருச்சுற்று இக்கோயிலுக்குத் தனித்தொரு அழகினைத் தருகிறது.

நீண்ட கொடிமரம், பலீபீடம், நந்தியைக் கடந்து சென்றால், உள்ளே கருவறையில் ஸ்ரீ திந்திரிணீஸ்வரர் பெருமான் மிகப்பெரிய மூர்த்தியாக லிங்கமாக காட்சி தருகிறார்.

சுவாமி அம்பாள் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறாள். இங்கு அம்பாளுக்கு தனிச்சன்னதி உள்ளது. சுவாமிக்கு இடபாகத்தில்




அம்மை விளங்குகிறார். பிரகாரத்தில் விநாயகர், முருகர், சண்டிகேஸ்வரர் நவக்கிரகங்களுக்கு தனிச்சன்னதிகள் உள்ளன. பஞ்ச கோஷ்டங்களில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, துர்க்கை, பிரம்மா, மகாவிஷ்ணு காட்சியளிக்கின்றனர்.

## தனிச்சிறப்பு

ஊரின் நடுவே அமைந்துள்ள இத்திருக்கோயிலின் சிறப்பை திருநாவுக்கரசு சுவாமிகள் ஷேத்திரக்கோவை திருத்தாண்டகத்தில்

“தெள்ளும் புனற்கெடில வீரட்டமுந்
திண்டிசிசரஞ் சேய்ஞலூரில்
கயிலாய நாதனையே காணலாமே”

என்று கயிலைநாதனை கண்டு பேறுபெறக் கூடிய தலங்களுள் திண்டி வனம் ஒன்று என்று சிறப்பித்துப் பாடியுள்ளார்.

“திண்டீச்சரஞ் சேய்ஞலூர் செம்பொன் பள்ளி தேவூர் சிரபுரஞ்சிற்றேமம் சேறை கொண்டீச்சரங் கூந்தலூர் கூழையூர் –

கூடல் குருவாவூர் வெள்ளடை குமரி கொங்கு அண்டர் தொழும் அதிகை வீராட்டானம் ஐயாறசோகந்தி ஆமாத்தூருங் கண்டியூர் வீரட்டங் கருகாவூருங் கயிலாய நாதனையே காணலாமே” என்றும் பாடியுள்ளார். அம்பாள் ஸ்ரீமரகதாம்பிகை கருணை பார்வையுடன் அன்பர்களுக்கு அருள்தனை வாரி வழங்கும் அன்னையாய் விளங்குகிறாள். வியாழக்கிழமைகளில் விசேஷமாக பூஜித்து ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கும், வெள்ளிக்கிழமைகளில் ஸ்ரீதுர்க்கா தேவிக்கும் எலுமிச்சை பழ தீபமிட்டு பிரார்த்தனை செய்து வலம் வந்தால் தோஷங்கள் நீங்கி நன்மைகள்



கிடைக்கும். மகாசிவராத்திரி அன்று 4வது கால பூஜையில் வெளிச்சமே வர முடியாத கருவறையில் சிவபெருமானின் சிரசில் இருந்து பாதம் வரை சூரிய ஒளிக்கதிர் வீசுவதை சிவன், சக்தி இரு சன்னதிகளிலும் இன்றும் காணப்படும் தனிச் சிறப்பாகும்.

### திருவிழாக்கள்:

10 நாட்கள் நடைபெறும் சித்திரைப்பெருவிழா, சித்ரா பௌர்ணமி, ஆனித்திருமஞ்சனம், ஆடிப்புரம், நவராத்திரி, அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம், ரத சப்தமி, சிவராத்திரி, மாசிமகம் ஆகிய திருவிழாக்கள் இத்திருக்கோயிலில் விமரிசையாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
| --- | --- |
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் பிற்பகல் 12.00 மணி வரையிலும், மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னை, பாண்டிச்சேரி, திருவண்ணாமலை விழுப்புரம் இன்னும் பிற முக்கிய ஊர்களிலிருந்தும், தென் மாவட்டங்களிலிருந்தும் பேருந்துகள் உள்ளன. சென்னை – விழுப்புரம் ரயில் வசதியும் உண்டு.

### தங்கும் வசதி

திண்டிவனம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**

அருள்மிகு திந்திரிணீஸ்வரர் திருக்கோயில்,

திண்டிவனம், விழுப்புரம் மாவட்டம்.

Mobile :8903204670

# 6. அருள்மிகு இலட்சுமிநரசிம்ம சுவாமி திருக்கோயில்

திண்டிவனம் நகர்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | இலட்சுமி நரசிம்ம சுவாமி |
| இறைவி | : | கனகவல்லி தாயார் |
| ஆகமம் | : | வைகானசம் |

*அமைவிடம்:*

*சென்னை–திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் சென்னையிலிருந்து 125 கி.மீ. தூரத்திலும், புதுவையிலிருந்து 40 கி.மீ. தொலைவிலும் திண்டிவனம் அமைந்துள்ளது. பேருந்து நிலையம், இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 0.5 கி.மீ.தொலைவில் திருக்கோயில் உள்ளது.*

## தல வரலாறு:



இது காஞ்சி ஷேத்திரத்தைச்சார்ந்தது. பிரம்மன் காஞ்சிபுரத்தில் யாகம் செய்தபோது யாக வாசல்களாக நான்கு திக்குகளுக்கும் நான்கு வாயில்களை நியமித்தார். நாராயணவனம் வடக்கு எல்லையாகவும், திந்திரிணீவனம் தெற்கு எல்லையாகவும், மகாபலிபுரம் கிழக்கு எல்லையாகவும் விரிஞ்சிபுரம் மேற்கு எல்லையாகவும் அமைந்தன என்று புராணம் கூறுகிறது.

மேலும் திந்திரிணீவனத்தில் திண்டி முண்டி கிங்கிலி, கிலாலி ஆகிய அரக்கர்கள் கொடுஞ்செயல் புரிந்து வனத்தில் தவம் செய்யும் முனிவர்களுக்கு ஓயாத தீங்கு செய்து வந்தமையால் முனிவர்கள் அனுமனுக்கு சங்கு, சக்கரத்தை கொடுத்து போருக்கு அனுப்பியதாகவும், போரில் அனுமன் அவ்வரக்கர்களைக் கொன்று முனிவர்களின் தவத்தை பாதுகாத்ததாகவும் கூறப்படுகிறது. அது முதல் அனுமனுக்கு நான்கு கைகளும் சங்கு சக்கரமும் உண்டாயின. இத்திருக்கோயிலின் உற்சவர் அனுமன் விக்கிரகத்தில் நான்கு கைகளும், சங்கு சக்கரமும் ஏந்தியிருப்பது இதற்குச்சான்றாகும்.

## திருக்கோயில் அமைப்பு:

இத்திருக்கோயில் முன் நுழைவு வாயில் பல்லவ காலத்தைச் சார்ந்த அழகிய ஐந்து நிலை இராஜகோபுரம் பரந்த அடித்தளத்துடன் உயர்த்தி கட்டப்பட்டுள்ளது. இராஜ கோபுரத்தைக்கடந்து சென்றால் நெடிய



கொடிமரம் உள்ளது. அதையடுத்து கருடாழ்வார் சன்னதியும் கருடாழ்வார் மண்டபமும், அதையடுத்து மகாமண்டபமும், மகாமண்டபத்தின் இடதுபுறம் உடையவர் சன்னதியும் சக்கரத்தாழ்வார் சன்னதியும் உள்ளது. மகாமண்டபத்தின் வலதுபுறம் யாகசாலை, ஆஞ்சநேயர் சன்னதி, கோதண்டராமர் சன்னதி மற்றும் வேணுகோபாலன் சன்னதியும் உள்ளது. மகா மண்டபத்தைக்கடந்து சென்றால் கர்ப்பகிரகத்தில் நரசிம்மமூர்த்தி இடது தொடையில் லஷ்மி தேவியுடன் அமர்ந்த நிலையில் அருள்பாலிக்கிறார்.

மேலும் திருக்கோயிலின் தெற்கு பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் தாயார் சன்னதி தனிக்கோயிலாக உள்ளது. திருக்கோயிலின் வடமேற்கில் ஆண்டாள் சன்னதியும் உள்ளது.

## திருவிழாக்கள்:

சித்திரை தமிழ்வருடப்பிறப்பு அன்று ஆஞ்சநேயருக்கு இலட்சார்ச்சனை விழாவும், வைகாசியில் 10 தினங்களுக்கு பிரம்மோற்சவமும் நடைபெறும். ஆனி மாதத்தில் ஜேஸ்டா பிஷேகமும், ஆடியில் ஆடிப்பூர





உற்சவமும், ஆவணியில் விநாயகருக்கு அபிஷேகமும், புரட்டாசியில் ஒன்பது தினங்கள் நவராத்திரி உற்சவமும், ஐப்பசியில் தீபாவளி சிறப்பு அபிஷேகமும், கார்த்திகையில் விஷ்ணு தீப உற்சவமும், மார்கழியில் திருபட்ஷி அதிகாலையில் வைகுண்ட ஏகாதசி உற்சவமும், அனுமந்த் ஜெயந்தி உற்சவமும், கூடாரைவல்லி உற்சவமும், தை மாதத்தில் சங்கராந்தி பெருவிழாவும் தை அமாவாசையும், இரத சப்தமியும், மாசி மாதத்தில் மாசிமக தீர்த்தவாரி உற்சவமும், பங்குனி மாதத்தில் பங்குனி உத்திரமும் சிறப்பாக நடைபெறுகின்றன.

## அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் பிற்பகல் 12.00 மணி வரையிலும் மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னை, பாண்டிச்சேரி, திருவண்ணாமலை விழுப்புரம் இன்னும் பிற முக்கிய ஊர்களிலிருந்தும், தென் மாவட்டங்களிலிருந்தும் பேருந்துகள் உள்ளன. சென்னை – விழுப்புரம் ரயில் வசதியும் உண்டு.

### தங்கும் வசதி

திண்டிவனம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு இலட்சுமிநரசிம்ம சுவாமி திருக்கோயில்
திண்டிவனம், விழுப்புரம் மாவட்டம்.

E-mail: tindivanamgrouptemples@gmail.com
Mobile : 8903204670

# 7. அருள்மிகு அன்பநாயக ஈஸ்வரர் திருக்கோயில்

கிடங்கல், திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அன்ப நாயக ஈஸ்வரர் |
| இறைவி | : | அறம் வளர்த்த நாயகி |
| தலவிருட்சம் | : | வில்வமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*சென்னை–திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் சென்னையிலிருந்து 125 கி.மீ. தூரத்திலும், புதுவையிலிருந்து 40 கி.மீ. தொலைவிலும் திண்டிவனம் அமைந்துள்ளது.*

பேருந்து நிலையம், இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 0.5 கி.மீ.தொலைவில் திருக்கோயில் உள்ளது. பேருந்து நிலையத்தின் மேற்குப் பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## தல வரலாறு:

கிடங்கலைத் தலைநகரமாகக் கொண்டு அமைந்த ஒய்மா நாட்டை ஆண்ட மன்னர்களில் சிறுபாணாற்றுப் படையின் பாட்டுத்தலைவனான ஒய்மான் நல்லியகோடன் ஆட்சிக் காலத்தில் ஓவியர் குடியினர் வழிபடும் தெய்வமாக இத்திருக்கோயில் இறைவன் விளங்கினார். இந்த வரலாற்றை சிறுபாணாற்றுப்படை ஆசிரியர் இடைகழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரால் அறிய முடிகிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க கிடங்கல் கோட்டையில் அமைந்துள்ள அன்பநாயக ஈஸ்வரர் திருக்கோயில் பழம்பெருமையும் புனிதமும் வாய்ந்த புண்ணியத்தலமாகும்.

திண்டிவனம் என்பது கிடங்கலின் புதிய பெயர் என்று மயிலை சீனி, வேங்கடசாமி அவர்கள் 'சாசனச் செய்யுள் மஞ்சரி' என்ற நூலில் கூறியுள்ளார். திண்டிவனம் என்ற சொல்லுக்கு மிகுந்த நெருங்கிய வனம் என்றும், சோலை என்றும் சோலைகளால் சூழப்பட்ட இப்பகுதி திண்டிவனம் என வழங்கல் ஆயிற்று என்பதே பொருத்தமுடையது.

மேலும், திரு.சேதுப்பிள்ளை அவர்கள் ஊரும்பேரும் என்ற நூலில் 'ஈசனார் கோயில் கொண்ட திண்டிச்சரம்' என்னும் திருக்கோயில் ஒய்மா நாட்டு கிடங்கற்



பகுதியில் அமைந்துள்ளது என்றும் தேவாரத்தில் குறிப்பிட்டதலம் திண்டிவனத்தின் கண்ணுள்ள சிவன் கோயிலாகும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## திருக்கோயில் அமைப்பு:

மூன்று பகுதிகளாக இத்திருக்கோயில் அமைந்துள்ளது. கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகிய இம்மூன்றும் ஒன்றுபட்டு காணப்படுகிறது. பலி பீடம், நீண்ட கொடி மரம் கடந்து சென்றால், கருவறையில் உள்ளே சதுர வடிவத்துடன் இறைவன் காட்சி அளிக்கிறார். இவருக்கு முன் அமைந்துள்ள நந்தி, பலிபீடம் போன்றவை ஒரே நேர்க்கோட்டில் அமைந்துள்ளன. கருவறையை அடுத்து தனியாக உட்பகுதியில் அம்மன் சன்னதி அமைந்துள்ளது. பரிவாரத் தெய்வங்களான அய்யனார், விநாயகர், முருகன் போன்ற கடவுளுக்குத் தனி சன்னதி அமைக்கப்பட்டுள்ளது. கர்ப்பக்கிரகத்தை அடுத்துள்ள வாயிலின் இருபுறங்களிலும் துவார பாலகர்களும் எதிரில் நந்திகேஸ்வரரும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

## தனிச்சிறப்பு:

இக்கோயிலில் ஒன்றுக்கும் மேற்பட்ட சாசனங்களும் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. சங்க காலத்துக்குப் பின் இக்கோயிலின் திருப்பணிகளும் மானியங்களும் பிற்கால சோழர்களால் ஏற்படுத்தப்பட்டன என்பதை கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

1. முதலாம் குலோத்துங்க சோழன் வழங்கிய நந்தா விளக்கு முதலிய பொருள்கள் பற்றி அர்த்த மண்டப தென் புறச் சுவர் கல்வெட்டு சாசனம் கூறுகிறது.

2. விக்ரமசோழன் காலத்தில் இக்கிடங்கல் ஒய்மா நாட்டு விஜய ராஜேந்திர வளநாட்டுக் கிடக்கை நாட்டுக் கிடங்கிலான இராஜேந்திர சோழ நல்லூர் என வழங்கியதாக கல்வெட்டு கூறுகிறது. (தென்புறச் சுவர் ஆறாவது வழி).

இவர் காலத்தில் (கி.பி.1132) அர்த்த மண்டபத்திருப்பணி செய்யப்பட்ட செய்தியையும், வட்டிக்காக 30 பொற்காசுகளுக்கு சிங்கினி நல்லூரில் (சிங்கனூரில்) பன்னிரண்டு அடி கோலால் ஆயிரம் குழி நிலம் வாங்கி வழங்கிய செய்தியையும் மேற்படி கல்வெட்டால் அறிய முடிகிறது.

இத்திருக்கோயில் சிதையுண்டு புதையுண்ட காலத்தில் சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் கண்டெடுக்கப்பட்ட அஷ்டபுஜ துர்க்கையின் உருவம் போற்றத்தக்க சிறப்பாகும். இத்துர்க்கை சிம்ம வாகனத்தில் முன்பக்கம் பார்க்கும்போது நின்ற கோலத்திலும் பின்பக்கத்தில் அமர்ந்த கோலத்திலும் காட்சியளிக்கின்றது. இந்த துர்க்கைக்கென தனி ஆலயம் சிவாலயத்தின் தெற்குப்பகுதியில் அமைந்துள்ளது. இது காவல் தெய்வமாக போற்றப்பட்டு கிடங்கல் கொற்றவை என்று அழைக்கப்படுகிறது.

ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் மெய்யடியார்களில் மூத்தவரும் சொல்வேந்தருமான அருணகிரி நாதரால் வைப்புத் தலமாக பாடல் பெற்ற இடம் இத்திருக்கோயிலாகும்.

### திருவிழாக்கள்:

ஆருத்ரா தரிசனம், அன்னாபிஷேகம், கிருத்திகை தோறும் முருகப்பெருமான் வீதியுலா, பிரதோஷம் சிறப்பு பூஜையும் ஆடிக்கிருத்திகை உற்சவம், பங்குனி உத்திரம் உற்சவம், விநாயகர் சதுர்த்தி உற்சவம் மற்றும் துர்க்கைக்கு இராகுகால பூஜை ஆகியவை சிறப்பாக நடத்தப்படுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8 மணி | காலசந்தி |
| மாலை 6 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் பிற்பகல் 12.00 மணி வரையிலும், மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

திண்டிவனம் பேருந்து நிலையத்திலிருந்து ஆட்டோ வசதி உள்ளது

## தங்கும் வசதி

திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**
அருள்மிகு அன்பநாயக ஈஸ்வரர் திருக்கோயில்,
கிடங்கல், திண்டிவனம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 8903204670



**இந்து சமயத்தில் சோடச உபசாரம் என்பது பதினாறு வகையான பணிவிடைகளைக் குறிக்கின்றது.**

அவை

| | | | |
|---|---|---|---|
| 1. | அகமம் | – | இறைவனுக்கு இருக்கை அளித்தல் |
| 2. | பாத்யம் | – | கால் கழுவ நீர் தருதல் |
| 3. | அர்க்யம் | – | கை கழுவ நீர் தருதல் |
| 4. | ஆசமநீயம் | – | குடிக்க நீர் கொடுத்தல் |
| 5. | அபிசேகம் | – | திருமுழுக்கு நீராட்டல் |
| 6. | வஸ்திரம் | – | ஆடை அணிவித்தல் |
| 7. | கந்தம் | – | நறுமணப்பொருள்கள் அளித்தல் |
| 8. | புஷ்பம் | – | மலர் மாலைகளைச் சூட்டுதல் |
| 9. | தூபம் | – | அகில், சந்தனம் முதலிய நறுமணப் புகையிடல் |
| 10. | தீபம் | – | ஒளிவிளக்குகளால் மும்முறை வலமாகச் சுற்றல் |
| 11. | நைவேத்தியம் | – | உணவுப்பொருள்கள் படைத்தல் |
| 12. | கற்பூரம் | – | கற்பூரம் காட்டுதல் |
| 13. | சாமரம் | – | கவரி வீசுதல் |
| 14. | ஆலவட்டம் | – | விசிறி வீசுதல் |
| 15. | சக்கரம் | – | குடை கவிழ்த்தல் |
| 16. | தர்ப்பணம் | – | கண்ணாடி காட்டுதல் |



# 8. அருள்மிகு பீமேஸ்வரர் திருக்கோயில்

ஓமந்தூர், திண்டிவனம் வட்டம்




| | | |
|---|---|---|
| இறைவன் | : | பீமேஸ்வரர் |
| இறைவி | : | பாலாம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### *அமைவிடம்:*

*திண்டிவனத்திலிருந்து கிளியனூர் வழியாக புதுச்சேரி செல்லும் சாலையில் 10 கி.மீ. தொலைவில் நெடுஞ்சாலையில் இருந்து 1 கி.மீ உள்ளே ஓமந்தூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

### *தல வரலாறு:*

*பஞ்ச பாண்டவர்கள் அஞ்ஞாந வாசத்தின் போது யாருக்கும் தெரியாமலிருக்க பல்வேறு ஊர்களில் தங்கி நாட்களை கழித்து வந்தனர். இந்த பயணத்தின் போது அவர்கள் முன்னூர் என்ற கிராமத்தில் ஒரு நாள் தங்கினர். அன்று இரவு அவர்களுக்கு கடும்பசி. ஆனால் உண்ணவோ, உணவு*

தயாரிப்பதற்கான பொருட்களோ அவர்களிடம் இல்லை. பசியின் கொடுமை தாளாமல் தருமர் பீமனை அனுப்பி உணவு கொண்டு வரச்சொன்னார். உணவு தேடியலைந்த பீமனுக்கு எதுவுமே கிடைக்கவில்லை. பசி மயக்கத்தில் இத்தலத்தில் உள்ள சிவன் கோயிலில் மயங்கி விழுந்தான். உடனே இறைவன் பார்வதி தேவியை அனுப்பி அவனுக்கு சுவையான பாலை அளிக்கச் செய்தார். மயக்கம் தெளிந்து பசியாறிய பீமன் இறைவனையும் இறைவியையும் உணர்ந்து வழிபட்டான். பின் தனது சகோதரர்களுக்கு வேண்டிய அளவு பாலை எடுத்துக் கொண்டான். கூடவே, இறைவா! எங்களது பசியை போக்கியது போன்று சாதாரண மக்களின் பசி, துன்பங்களையும் தாங்கள்தான் போக்க வேண்டும் என்று வேண்டினான். இறைவனும் அவ்வாறே வாக்களித்தார். பீமன் பூஜித்ததால் இறைவன் பீமேஸ்வரர் என்றும், பாண்டவர்களுக்கு பசியாற பால் வழங்கியதால் இறைவி பாலாம்பிகை என்றும் அழைக்கப்படுகின்றனர்.

### புராண வரலாறு:

'ஓம்' என்பது அயன், ஹரி, ஹரன் ஆகியோரை உள்ளடக்கிய பிரணவ மந்திரமாகும். 'அந்தூர்' என்ற சொல்லிற்கு பாதகிண்கிணி என்பது பொருள். ஓம் எனும் பிரணவமந்திரத்தின் பரம்பொருளாக விளங்கக்கூடிய சிவபொருமான், மகரிஷிகளின் தவத்திற்கு இறங்கி ஆனந்த தாண்டவம் நிகழ்த்தியபோது திருக்கயிலை நாதனான பரமேஸ்வரனின் பாத கிண்கிணி சத்தம் முதலில் கேட்ட ஊர் ஓமந்தூர் (ஓம் + அந்தூர்) என்று அறியப்படுகிறது. ஏகாதச ருத்ரர்களின் ஒருவரான பீமனும் திருக்கயிலாயத்தில் நிருதி (தென்மேற்கு) திசையின் காவலனாக விளங்கக்கூடிய ஸ்ரீ பீமநாதனும் பஞ்சபாண்டவர்களில் ஒருவரான பராக்கிரமம் மிக்க பீமனும் வணங்கியதால் இத்தல இறைவனுக்கு **பீமேஸ்வரர்** என்ற திருநாமம் ஏற்பட்டுள்ளதாக புராணங்கள் கூறுகின்றன.

## வரலாற்றுப்பின்னணி:

இவ்வூர் பண்டைக் காலத்தில் 'கிடங்கில்' எனும் பகுதியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த நல்லியக்கோடனின் ஒய்மா நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது என்பதை சிறுபாணாற்றுப்படை என்ற பழந்தமிழ் இலக்கியத்தின் மூலம் அறிய முடிகின்றது.

இத்திருக்கோயிலில் உள்ள ராஜராஜ சோழனின் பதினொன்றாவது ஆட்சியாண்டு (885–1014) கல்வெட்டு இத்தலத்தை 'ஒவ்வூர்' என்றும் முதலாம் ராஜநாராயண சம்புவராயர் (1337–1368) கல்வெட்டு 'ஒய்மா நாட்டு ஓகந்தூர்' என்றும் குறிப்பிடுகின்றது. 'ஒவ்வூர்' 'ஓகந்தூர்' என்பதே மருவி தற்போது ஓமந்தூராக வழங்கி வருகின்றது. பழமையான இத்திருக்கோயில் ராஜராஜ சோழனால் கட்டப்பட்டுள்ளது. பின்னர் வந்த முதலாம் ராஜநாராயண சம்புவராயனால் விரிவுபடுத்தப்பட்டுள்ளது. தமிழகத்தை ஆண்ட விஜயநகரப் பேரரசர்களும் சம்புவராய மன்னர்களும் இத்திருக்கோயிலில் திருப்பணி செய்து வழிபட்டுள்ளனர்.

## திருக்கோயில் அமைப்பு:

இங்கு இறைவன் மேற்கு நோக்கி அருள்பாலிக்கிறார். இக்கோயிலின் கருவறை, இடைக்கட்டு, அர்த்த மண்டபம், மகா மண்டபம், பின் மண்டபம் ஆகியவை எழிலுடன் அமைக்கப்பட்டுள்ளன. சதுரமான கருவறையின் நடுவே சுமார் 6 அடி உயரமுள்ள லிங்க வடிவில் ஸ்ரீ பீமேஸ்வரர் பிரம்மாண்டமாக காட்சி தருகின்றார். கருவறையின் புறச்சுவரில் உள்ள தேவகோட்ட மாடங்களில் தெற்கே தாமரை மலரின் மீது நின்று நர்த்தனமாடும் விநாயகப்பெருமானும் தெற்கே கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து சனகாதி முனிவர்களுக்கு ஞானஉபதேசம் வழங்கும் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி, கிழக்கே சங்கு, சக்கரம் ஏந்தி நிற்கும் திருமால், வடக்கே திசைக்கு ஒரு

முகமாக அருள்பாலிக்கும் நான்முகன், திரிபங்க நிலையில் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கும் துர்க்கை போன்ற திருவுருவச் சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. கருவறையின் வெளியே வலப்புறம் பைரவரும், ராஜராஜேஸ்வரியும், இடப்புறம் சூரிய சந்திரரும் தரிசனம் தருகின்றனர். மகாமண்டபத்தூணில் ஆஞ் சநேயர் வடிவம் அழகுற வடிவமைக்கப்பட்டுள்ளது. தென்மேற்கு பகுதியில் வரசித்தி விநாயகரும், மேற்கு மூலையில் ராகு –கேது தோஷம் நீக்கும் வல்லமை பெற்ற நாகர் கோயிலும், வடமேற்கில் வள்ளி தேவசேனா சமேத ஆறுமுகப் பெருமானும், அன்னை பாலாம்பிகையும், தனி சன்னதிகளில் அருள்பாலிக்கின்றனர். கருவறைக்கு நேர் எதிரே மகா மண்டபத்தின் வெளியே தனி மண்டபத்தில் நந்தி பகவான் அமர்ந்து சாளரத்தின் வழியே இறைவனை தரிசிக்கும்படி அமைக்கப்பட்டுள்ளது. உடன் பலி பீடமும், வடகிழக்கு மூலையில் நவகிரக சன்னதியும் உள்ளது. கருங்கற்களால் கட்டப்பட்டும் கலை அழகுடனும் காட்சித்தரும் இத்திருக்கோயிலின் தூண்களில் சிற்ப வேலைப்பாடுகள் பிரமிக்கத்தக்க வகையில் உள்ளன.



## தனிச்சிறப்பு:

பிரதோஷ வழிபாட்டின்போது இறைவனை மனமுருக வேண்டினால் சகல செல்வங்களும் வந்து சேரும். பாண்டவர்கள் இத்தலத்திற்கு வந்து வழிபட்ட பின்புதான் இழந்த ராஜ்யத்தை போரிட்டு மீட்டனர். அதனால் பீமேஸ்வரனை வழிபட்டால் இழந்த சொத்துக்கள், செல்வங்கள் மீண்டும் நம்மை தேடி வந்தடையும். திருமணம் ஆகாதவர்கள் இறைவனை வழிபட்டால் திருமணம் கைகூடும் பிரார்த்தனை தலமாகவும்

இத்திருக்கோயில் விளங்குகிறது. கோயிலில் மூலவரான எம் பெருமானுக்கு நெய்தீபம் ஏற்றி வழிபடுவதன் மூலம் கோள்சார நிலைகளின் காரணமாக ஏற்படும் கெடுபலன்கள் குறைந்து தோஷம் நீங்கிவிடும். இங்குள்ள கல்வெட்டுகளில் இறைவன் **'திருவருளீசுவரத்தாழ்வார், திவீமிசுவரமுடைய நாயனார், தவப் பாதர நாயனார்'** போன்ற பல திருநாமங்களால் பூஜிக்கப்பட்டு வந்ததை பழமையான கல்வெட்டுகளின் மூலம் அறிய முடிகின்றது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.30 மணி வரையிலும், மாலை 5.30 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

திண்டிவனத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


### தொடர்பு முகவரி

பரம்பரை அறங்காவலர்,

அருள்மிகு பீமேஸ்வரர் திருக்கோயில்,
ஓமந்தூர், திண்டிவனம் வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9443074131

# 9. அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

மயிலம் – திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சுப்பிரமணியர் |
| இறைவி | : | வள்ளி, தெய்வானை |
| தலவிருட்சம் | : | புன்னை |

## *அமைவிடம்:*

*திண்டிவனம் – கூட்டேரிப்பட்டு – பாண்டிச்சேரி சாலையில் சுமார் 13 கி.மீ தொலைவில் இத்திருத்தலம் மலை மீது அமைந்துள்ளது.*

## *தலவரலாறு:*

*கயிலை மலையில் இறைவன் சாபத்தைப் பெற்ற சங்கு கன்னர் கீழ்க்கடலில் அக்கமணி, திருநீறு, இட்டலிங்கம் முதலிய சிவவேடப் பொலிவழகுடன் தோன்றி பாலப் பருவத்தினராய்ப் பலருக்கும் சித்துகளை அருள்செய்த காரணத்தினால்*

‘பாலசித்தர்’ என்று பெயர் தாங்கி, நாரதர் அருளியபடி மயிலமலைக்கு வந்து அம்பிகையர் அரணுக்குக் காவலராய் நின்று உட்புக வந்த ஸ்ரீ முருகப் பெருமானுடன் போர் செய்து ஊற்றுணர்ச்சியால் உணர்ந்து வணங்கி நின்று, ‘பெருமானே! இம்மலையின் மீது திருமணக் கோலத்தோடு என்றும் நின்று அருள் புரிதல் வேண்டும் என்றும், எம் வழியினர் இத்திருமடத்தை அருளாட்சி புரிந்து வருதல் வேண்டும் என்றும், என் வழியினர் சிவஞான பாலய தேசிகர் என்னும் திருப்பெயரை வழிவழியாகப் பெற்று விளங்க வேண்டும் என்றும் வேண்டி திருமுருகப் பெருமான் திருசன்னதிக்குத் தென் பக்கத்தில் ஜீவ சமாதியானார். சூரபதுமன் மயில் போன்ற வடிவம் கொண்டு தவம் செய்து ஸ்ரீ முருகப் பெருமான் வாகன மாக அமைந்ததும் ஆகிய தெய்வத்தன்மைமிக்கது மயூராசலம் என்னும் மயில மலையாகும்.

## தனிச்சிறப்பு

மயில் போன்ற தோற்றம் கொண்ட மலையாதலால் இத்தலம் மயிலம் என பெயர் பெற்றது. குன்று தோறாடலில் இத்தலமும் ஒன்றாகும். இங்குள்ள முருகப்பெருமான் நான்கு திருக்கரங்களுடன் தேவியர் இருவருடனும் திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். அருணகிரிநாதர் இத்தல முருகன் மீது திருப்புகழ் அருளியுள்ளார். ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் கள்ளிப்பாலை அருந்தி நூறு ஆண்டுகள் யோக நிஷ்டையில் இருந்து சிவபிரானிடம் ஐக்கியமானார். மாதகிருத்திகையில் முருகப்பெருமான் தேவியருடன் தங்கமயில் மீது வலம் வருகிறார். இத்தலம் அருணகிரி நாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற சிறந்த பிரார்த்தனைத் தலமாகும்.



## மயிலம் திருப்புகழ்:

கொலை கொண்ட போர் விழி கோலோ வாளோ
விடமிஞ்சி பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்
குயில்தங்கு மாமொழி யாலே நேரே
இழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானாவிதமாகி

உலைகொண்ட மாமெழு காயே மோகா
அலையம்பு ராசியின் ஊடே மூழ்கா
உடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ
உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனையண்டி யேநம னார்தூ தானோர்
உயிர்கொண்டு போய்விடு நாள்நீ மீதாள்அருள்வாயே

அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூர்
அணியஞ் சராசனம் வேறாய் நீறாய் இடவேதான்
அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீர்
அனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ருபக ஏகா வேறோர் வடிவாகி,

மலைகொண்ட வேடுவர் கானூ டேபோய்
குறமங்கை யாளுட னேமா லேயே
மயல்கொண்டு லாயவன் தாள்மீ தேவீழ் குமரேசா,
மதிமிஞ்சு போதக வேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலம்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமானே.

........... ஸ்ரீ அருணகிரிநாதர்.

## திருவிழாக்கள் :

வைகாசி விசாகம், ஆடிக்கிருத்திகை, கார்த்திகை தீபம், தைப்பூசம், தைக்கிருத்திகை, பங்குனி மாதம் தேரோட்டம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

## அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 100 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிகாலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 5.00 மணி முதல் பிற்பகல் 1.30 மணி வரையிலும், பிற்பகல் 3.30 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*திண்டிவனம், விழுப்புரம், பாண்டிச்சேரி ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*திண்டிவனம், விழுப்புரம், பாண்டிச்சேரி ஆகிய ஊர்களில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


**தொடர்பு முகவரி**

ஸ்ரீலஸ்ரீ ஆதீனகர்த்தர்,
பொம்மையபாளையம் ஆதீனம்,
அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,
மயிலம், திண்டிவனம் வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.

E-mail ID: ssbsthirumadam@gmail.com
Phone: 04147-241223



**விநாயகர் ஆலயத்தில் செலுத்தப்படும் காணிக்கை அங்கு நடத்தப்படும் பூஜைகள் மற்றும் ஹோமங்களில் தரப்படும் காணிக்கைகளால் கிடைக்கும் பலன்கள்**

1. மோதகம் எனும் கொழுக்கட்டை – நினைத்த காரியம் நடக்கும்.

2. அருகம் புல் கொண்டு பூஜை – செல்வம் தழைக்கும்

3. வெள்ளெருக்கு திரி கொண்டு விளக்கு ஏற்றுதல் – நினைத்த காரியம் அனைத்தும் தடங்கல் இன்றி நடைபெறும்.

4. நெல்பொறி – புகழ் கிடைக்கும்.

5. நான்கு லட்ஷ ஜெபம் செய்தல் – ஆத்ம ஞானம் கிடைக்கும்.

6. நாற்பதாயிரம் ஆவர்த்தி ஹோமம் – இஷ்ட சித்தி கிடைக்கும்.

7. மட்டை தேங்காய் – பூரண பலன்

8. ஹோம திரவிய சாமான்கள் தானம் – அனைத்திலும் நிறைவு கிட்டும்

9. வெண்பட்டு ஹோமம் – புத்திர பாக்கியம்.

10. பழங்கள் – திருமண பாக்கியம், கல்வியில் மேன்மை

11. வெள்ளெருக்கு. அரசு, வன்னி மர சமித்துக்கள் – வேலை வாய்ப்பு கிடைக்கும்.

12. மகா பூரஹார்த்தி – நிரந்தர வேலை சுக வாழ்வு.



# 10. அருள்மிகு அகஸ்தீஸ்வரர் திருக்கோயில்

கிளியனூர், வானூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அகஸ்தீஸ்வரர் |
| இறைவி | : | அகிலாண்டேஸ்வரி |
| தீர்த்தம் | : | அக்னி தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வன்னி |
| ஆகமம் | : | காமிகம் |

## *அமைவிடம்:*

*திண்டிவனம் – பாண்டிச்சேரி சாலையில் 20 கி.மீ. தொலைவில் உள்ள கிளியனூரில் பஸ் நிலையத்தில் இருந்து கிழக்கே 1 கி.மீ. தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு:



தேவாரத் தலங்களில் 276வது திருமுறைத்தலமாக விளங்குகிறது. சுகப்பிரம்மரிஷி பூஜித்ததனால் சுகபுரி என்று வடமொழியில் இந்த ஊர்ப்பெயர் வழங்கி வந்ததும் தமிழ் மொழியில் கிளியனூர் என்று சொல்லப்படுகிறது. அகஸ்திய முனிவர் பிரதிஷ்டை செய்து, பூஜித்து, வழிபட்டு வந்ததினால் அகத்தீஸ்வரர் என ஸ்வாமி பெயர் வழங்கப்படுகிறது. மேலும் சுகப்பிரம்மரிஷிக்கு குன்ம வியாதி என அழைக்கப்படும் தீராத நோய் பல ஆண்டுகளாக இருந்து வந்ததாகவும், துன்பம் அடைந்த பிரம்மரிஷி நோய் தீர சிவ பெருமானை மனம் உருகி வேண்டி சிவபெருமான் தோன்றி கிளியன்னவூரானை வழிபட சொல்ல அவ்வாறே ரிஷியும் இந்த ஸ்தலத்தை வந்தடைந்து, ஒரு நாள் தங்கி ஸ்வாமியை பூக்களால் அர்ச்சித்து வழிபட்டதால் அவருடைய குன்ம வியாதி தீர்ந்ததாகவும், இத்தல இறைவனை ஆதிசேஷன் வணங்கி மோட்சம் பெற்றதாகவும் கூறப்படுகிறது.

## வரலாற்று பின்னனி:

இந்த தலம் பல்லவர்களால் கல்லால் முதலில் கட்டப்பட்டு அவர்களால் வழிபட்டு வரப்பட்டது. பின்னர் இராஜராஜ சோழனின் ஆட்சியில் கி.பி. 996ல் புதுப்பிக்கப்பட்டது.

## திருக்கோயில் அமைப்பு

இறைவன் மேற்கு திசையை நோக்கி காட்சியளிக்கிறார். திருக்கோயிலின் தென்புறம் ஸ்ரீஅகிலாண்டேஸ்வரி கிழக்கு நோக்கி காட்சியளிக்கிறார். உட்பிரகாரத்தில் ஸ்ரீசுப்ரமணியர் வள்ளி தெய்வானையுடன் கிழக்கு நோக்கி காட்சியளிக்கிறார். திருக்கோயிலின் கிழக்குபுறம் நவக்கிரஹ சன்னதியும் உள்ளது.



## தனிச்சிறப்பு:

நடு இரவில் நாயகிக்கு எதிரே உள்ள நந்திகேஸ்வரர் அம்மனை பூக்களால் பூஜை செய்வ தாகவும், காலையில் எழுந்து பார்க்கும்போது அம்மன் சன்னதியில் புதிய பூக்கள் இருப்பதாகவும் நந்திகேஸ்வரரின் அசைவுகள் கல்லில் தெரிவதாகவும் நம்பப்படுகிறது. இவ்வாலயத்தின் சுவாமிகளை விசேஷமாக பூஜித்து வழிபட்டு வந்தால் தீராத வயிற்று நோய்கள் நீங்குவதாகவும் மேலும் உத்தியோக சிக்கல், திருமணம் கைகூடல், வியாபாரம் பெருகுதல், உடல் நலிவு, புத்திரபாக்கியம் ஆகியவற்றிற்கு வேண்டுதல் செய்தால், நிவர்த்தி கிடைப்பதாகவும் தொன்று தொட்டு நம்பப்படுகிறது. இத்திருக்கோயிலை வைப்புத்தலமாக திருஞானசம்பந்தர் 11 பதிகங்கள் பாடியருளி உள்ளார்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 8.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் பிற்பகல் 11.00 மணி வரையிலும், மாலை 4.30 மணி முதல் இரவு 7.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.



### போக்குவரத்து வசதி

திண்டிவனம், பாண்டிச்சேரியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திண்டிவனம், பாண்டிச்சேரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

அருள்மிகு அகஸ்தீஸ்வரர் திருக்கோயில்,

கிளியனூர், வானூர் வட்டம்,

விழுப்புரம் மாவட்டம்.

Mobile : 8903204670

# 11. அருள்மிகு ஆடவல்லீஸ்வரர் சுவாமி திருக்கோயில்

முன்னூர், திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | ஆடவல்லீஸ்வரர் |
| இறைவி | : | பிரகன்நாயகி |
| தீர்த்தம் | : | பிரம்ம தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வன்னிமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்:

*திண்டிவனத்திலிருந்து மரக்காணம் செல்லும் சாலையில் ஆலங்குப்பம் கிராமத்திற்கு தெற்கே 3 கி.மீ. தொலைவில் முன்னூர் கிராமத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது.*

## தலவரலாறு:

*இந்திரனுக்கும் தேவர்களுக்கும் ஆச்சார்யன் (குரு) பிரகஸ்பதி. நான்கு வேதங்களிலும் கரைக்கண்டவர். கடும் தவத்தினால் பெற்ற அரிய பலம், மூவுலகங்களும் அவரை*

வணங்கும்படி செய்தது. முக்காலத்தையும் முன்கூட்டியே உணரும் சக்தியும், பெறற்கரிய ஞானமும் பெற்றிருந்தும், தனக்கு நிகரில்லை என ஒரு சமயம் அவர் கர்வமடைந்தார்,



மனம் மாசுபட்டதால் தன் ஒளியை இழந்தார் தேவகுரு. அதனால் பலரும் முன்பு அவருக்குக் காட்டிய மரியாதையையும் பக்தியையும் காட்டவில்லை. இந்திரனின் சபையில் அவர் வரும்போது எப்போதும் எழுந்து நிற்கும் முனிவர்கள். அக்னி, வருணன், வாயு போன்ற தேவர்களும் அவருக்கு எழுந்து மரியாதை செலுத்தாமல் அமர்ந்திருந்தனர். செருக்கினால் அவரிடமிருந்த தெய்வீக ஒளியை அவர் இழந்ததே தேவர்கள் அனைவரும் அவரை அவமதித்ததற்குக் காரணமாகும்.

தன் மனதில் ஏற்பட்ட சிறு தவறினால் தன் தெய்வீக ஒளியை இழக்க நேரிட்டதை நினைத்து பிரகஸ்பதி மனம் வருந்தினார். படைப்புக் கடவுளான பிரம்ம தேவரிடம் சென்று அவரை வணங்கி, தான் இழந்த தெய்வீக தேஜஸ்ஸையும், ஆத்ம பலத்தையும் திரும்பப் பெறுவதற்கு உபாயம் கூறுமாறு வேண்டினார். பிரம்மதேவன் திருவுளமிரங்கி பூவுலகில் அன்னை பராசக்தியுடன் நடனமாடி, திருவுளம் மகிழ்ந்த நிலையிலுள்ள ஆடவல்லீஸ்வரப் பெருமானைத் தரிசித்து, தவமியற்றினால் மீண்டும் மனத்தூய்மை பெற்று, இழந்த

தெய்வீக ஒளியையும், சக்தியையும் பெறலாம் என்று வழிகாட்டினார். பிரம்மதேவரின் அறிவுரையை ஏற்ற பிரகஸ்பதி, இத்திருத்தலம் வந்து பிரம்மதீர்த்தத்தில் நீராடி, சுயம்பு மூர்த்தியான ஆடவல்லீஸ்வரரை நோக்கிப் பல ஆண்டுகள் தவம் இருந்தார். அவரது தவத்திற்கு மனமிரங்கிய சிவபெருமான், தன் தேவி பிரஹன்நாயகியுடன் தரிசனம் அளித்து, சிறிது நேர அகங்காரத்தினால் அவர் இழந்த தபோ பலத்தையும், தேஜஸ்ஸையும் அளித்து அருள் புரிந்தார்.அதனால் நவகிரகங்களில் நன்மை பயப்பதில் ஈடிணையற்ற கிரகமாக விளங்கும் பேறும் பெற்றார் பிரகஸ்பதி. அன்றிலிருந்து இத்திருத்தலம் தென் கயிலாயம் என நமது ஆன்றோர்களாலும், முன்னோர்களாலும் பூஜிக்கப்பட்டு வருகிறது.



## புராண வரலாறு:

சிவபக்தியில் ஈடற்ற மன்னன் குலோத்துங்கன். திருச்சிற்றம்பலத்தில் அய்யன் ஆடிய நடனத்தை தான் தரிசிக்க வேண்டும் என்று தவமியற்றினான். திருவுள்ளம் மகிழ்ந்த இறைவன், நடனமாடி தரிசனமளித்த திருத்தலம் இது. அதனால் இந்த எம்பெருமானுக்கு ஆடவல்லீஸ்வரர் என்ற திருநாமம் ஏற்பட்டது.

தாருகா வனத்து ரிஷிகளின் செருக்கை அடக்கி அவர்களுக்கு முக்தி அளித்த தலம் என்றும், பாண்டவர்கள் வனவாசம் செய்தபோது முன்னூற்று மங்கலம் என்று முன்னாளில் அழைக்கப்பட்ட இந்த ஊரில் தங்கி இறைவனை வணங்கி ஏராளமான வரங்களை பெற்றதாகவும் மேலும் ஆடவல்லிக் கூத்தான் என்ற ஊரை ஆண்டு வந்த அரசன் தன்



அரண்மனைக்கு பால் எடுத்து வரும் சிறுவன் குறை அளவு பாலோடு தினமும் வருவது அறிந்து அவனது செய்கையை அறிய ஒற்றர்களை அனுப்பி வைத்தபோது, அச்சிறுவன் பாலின் ஒரு பகுதியை மண்ணில் அமிழ்ந்திருந்த சிவலிங்கத்தின் மீது ஊற்றித் தொழுததாகவும், விபரம் அறிந்து அரசன் சிவலிங்கம் இருந்த இடத்தில் அழகிய கோயிலை கட்டியதாகவும் கூறப்படுகிறது.

## திருக்கோயில் அமைப்பு:

முன்னூர் கிராமத்தில் நடுநாயகமாக ஆடவல்லீஸ்வரர் கோயில் அமைந்துள்ளது. சதுரமான உண்ணாழியுடன் அந்தராளம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகிய பகுதிகளுடன் திருச்சுற்று மாளிகையும் அழகு பெற்று விளங்குகிறது. உயர்த்தியமைக்கப்பட்ட திருச்சுற்று இத்திருக்கோயிலுக்குத் தனித்தொரு அழகினைத்தருகிறது.

மண்டப நுழைவு வாயிலை அடுத்து இடப்புறம் விநாயகர், முருகன் சிலைகளும் வலப்புறம் நவக்கிரகம் மற்றும் பழனியாண்டவர் சன்னதியும் அமைந்துள்ளது. திருக்கோயிலின் திருச்சுற்றில் அறுபத்து மூவர் சிலைகளும், தேவகோட்டத்தில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, துர்க்கை, பிரம்மா, சண்டிகேஸ்வரரும், பின்புறம் ஆஞ்சநேயர், காமாட்சி, சூரியன் மற்றும் பைரவரும் அமைந்துள்ளார்கள்.

முருகன் இத்திருத்தலத்தில் சத்ரு சம்ஹார மூர்த்தியாக காட்சி தருவது மிகச்சிறப்பானதாகும். சதுர வடிவமான உண்ணாழியில் மூலவர் மிகப்பெரிய சுயம்புலிங்கமாக தெற்குநோக்கி காட்சியளிக்கின்றார். உண்ணாழியின் நுழைவு வாயிலின்

இரண்டு பக்கங்களிலும் சிறிய படைப்புச் சிற்பங்களாக லிங்கம் மற்றும் ஜேஷ்டா தேவியின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வுருவங்கள் கி.பி.5–6 நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர்காலச் சிற்பங்களை நினைவூட்டுவதாக உள்ளது.

மூலவரது இடப்பக்கம் மேற்கு நோக்கிய சன்னதியில் அன்னை பெரியநாயகி அருள்பாலித்து வருகிறார். அன்னையின் திருவுருவமும், கருணைப்பார்வையும் அன்பர்களுக்கு அருள்தனை வாரி வாரி வழங்கும் தன்மையாய் உள்ளது.

## தனிச்சிறப்பு:



இத்திருக்கோவிலில் இறைவன் தென்திசைநோக்கி எழுந்தருளி இருப்பது மிகவும் சிறப்பானதாகும். இறைவனையும், இறைவியையும் வழிபட்டால் உத்தியோகச்சிக்கல் நீங்குதல், திருமணம் கைகூடல், வியாபாரம் பெருகுதல், அறுபத்து மூவரை வணங்கி வழிபட்டால் சிறந்த கல்வியறிவு கிட்டும். சத்ரு சம்உறார மூர்த்தியான அருள்மிகு முருகப் பெருமானை செவ்வாய் தோறும் வழிபட்டு வந்தால் பகைவர் ஒழிவர், செவ்வாய் தோஷம் நீங்குவது திண்ணம்.

தீராத நோயினால் துன்பப்படும் பக்தர்கள் ஜாதகத்தில் குருபலன் இல்லாதவர்கள், முற்பிறவியில் செய்த பாவங்களால் துன்புறுபவர்கள் இத்திருத்தல தீர்த்தத்தில் நீராடி இறைவன் இறைவியை தரிசித்தால் தோஷங்கள் நீங்கப்பெற்று குருவின் அருள் கிடைக்கப்பெறுவீர்கள். இதனால் இத்தலம் குரு பரிகாரத்தலமாக விளங்குகிறது.

இத்திருக்கோவிலின் பழமையை இங்குள்ள 52 கல்வெட்டுகளில் இருந்து அறியலாம். பழங்காலத்தில் இவ்வூரை ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து விஜயராஜேந்திர வளநாட்டு ஒய்மா நாட்டு இராஜநாராயண சதுர்வேதி மங்களமான முன்னூர் என்று கல்வெட்டு குறிக்கிறது. 1300 ஆண்டுகளுக்கு முன் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டு பிற்கால பாண்டியர் காலத்தில் புனர் நிர்மாணம் செய்யப்பட்டுள்ளது.

ஆடவல்லீஸ்வரர் கோயிலில் உள்ள இரண்டாம் இராஜேந்திரனின் கல்வெட்டுகளில் ஒன்று இரண்டாம் குலோத்துங்கனைச் சொக்கப் பெருமான் என்று குறிக்கிறது.

இரண்டாம் இராசராசன் காலத்தில் கைரூரைச்சார்ந்த பெரிய நாச்சியார் என்பவர் இக்கோயிலில் பெரிய விநாயகப் பிள்ளையாரை தோற்றுவித்து நிவந்தங்களும், விளக்கெரிக்க கொடைகளும் கொடுத்துள்ளார். மேலும் தட்சிணாமூர்த்தி சன்னதிக்கு முன் உள்ள சோபன மண்டபத்தையும் கட்டினார். இரண்டாம் இராசாதிராசனின் ஆட்சிகாலத்தில் செங்கேணி அம்மையப்பன் சியன் பல்லவ வேந்தனாகிய இராசநாராயண சம்புவராயன் என்பவன் நாயகன் திருமாளிகையை பழுது பார்ப்பதற்கு கொடையளித்துள்ளார்.

கீரனூரைச் சார்ந்த ஒருவன் மாதவரையன் மண்டபச் சுவரைக் கட்டி நந்தவனம் வைப்பதற்கு நிலமும் கொடுத்துள்ளார். காடவரையனாகிய கூடல் ஈளப் பிறந்தான் அழகிய பல்லவன் காலத்தில் வட்டரையன் என்பவனின் வேண்டுகோளுக்கு இணங்க வன்னியநல்லூரில் ஆவணி மாத திருவிழாவிற்கும் முன்னூரில் உள்ள ஆடவல்லி நாயனார் கோயிலை பழுது பார்ப்பதற்கும் நிலம் கொடையளித்தது குறிப்பிடப்படுகிறது.

மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் ஆடவல்லார் கோயிலில் திருகாமக்கோட்டமுடைய பெரிய நாச்சியாரை எழுந்தருள்வித்ததை இவனுடைய கல்வெட்டு குறிப்பிடுகிறது.

இத்திருத்தலத்தைப்பற்றி சங்க இலக்கியங்களில் ஒன்றான சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார் சிறுபாணனை ஆற்றுப்படுத்தும் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

### திருவிழாக்கள்:

சித்திரை மாதத்தில் அக்னி நட்சத்திரத்தில் வேல் பூஜை பெரிய திருவிழாவாக நடைபெறுகிறது. ஆனி மாதத்தில் ஆனித் திருமஞ்சனமும், ஆடி கிருத்திகையும், ஆவணியில் விநாயகருக்கு அபிஷேகமும், ஐப்பசியில் அன்னாபிஷேகமும் மாசி மகத்தில் பிரம்மோற்சவமும் மிகச்சிறப்பான முறையில் நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திண்டிவனத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது

### தங்கும் வசதி

திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்,

அருள்மிகு ஆடவல்லீஸ்வரர் திருக்கோயில்,

முன்னூர், திண்டிவனம் வட்டம், விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 8903204670

# 12. அருள்மிகு வேட்டை வெங்கட்ராயப்பெருமாள் மற்றும் கோதண்டராமசுவாமி திருக்கோயில்

ஆலத்தூர், திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வேட்டை வெங்கட்ராயப் பெருமாள், கோதண்டராமர் |
| இறைவி | : | கனகவல்லி தாயார், சீதாதேவி |
| ஆகமம் | : | வைகானசம் |

## *அமைவிடம்:*

*மரக்காணத்திலிருந்து சூனாம்பேடு வழியாக சென்னை செல்லும் பேருந்து தடத்தில் சுமார் 10 கி.மீ. தூரத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. திண்டிவனத்திலிருந்து மரக்காணம் செல்லும் சாலையில் 28 கி.மீ. தூரத்தில் ஆலத்தூர் கூட்டுச்சாலையில் 2 கி.மீ. தொலைவில் சென்று இத்திருக்கோயிலை அடையலாம்.*

## *தலவரலாறு:*

*ஆதிகாலத்தில் இந்த ஊர் பெருங்காடாக இருந்ததாகவும் இக்காட்டில் கொண்டினிய முனிவர் கடும் தவம் செய்ததாகவும்*

அவருக்கு காட்சி கொடுக்க இறைவன் வேட்டைக்காரன் உருவில் திருப்பதியிலிருந்து நேரடியாக வந்து காட்சி கொடுத்து இவ்வூரிலேயே தங்கி அருள் பாலித்து வருவதாக கூறப்படுகிறது.



## திருக்கோயில் அமைப்பு:

இத்திருக்கோயிலில் நீண்ட நெடிய கண்ணைக் கவரும் ஐந்து நிலை இராஜகோபுரம் விண்முட்டும் அளவில் நிற்பதை காணலாம். கோபுரத்தின் விமானப்பகுதியில் திருமாலின் பல்வேறு அவதாரங்களைச் சித்தரிக்கும் வகையில் சுதை உருவங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. கோபுரத்தின் உள்வாயிலில் நிற்கும் வாயிற்கால்களில் எதிரெதிரே நான்கு நாட்டிய நங்கைகளின் உருவங்கள் பதிக்கப்பட்டுள்ளன. சிங்க உருவில் செதுக்கப்பட்டுள்ள யாளியின் முதுகில் ஒரு காலை ஊன்றியும் மற்றொரு காலை மடக்கி கழுத்தில் வைத்தும் நின்ற நிலையில் சிற்பம் உள்ளது.

நாட்டிய நங்கையின் கைகளில் தொங்கும் கொடி வளையங்கள் மேல் வாயில் வரைச்செல்கின்றன. கொடி வளையங்களுக்கிடையே திருமாலின் அவதாரத்தைச் சித்தரிக்கும் வகையில் சிற்பங்களும் ஆழ்வார்களின் உருவ அமைப்புகளும் காண முடிகிறது.

இராஜகோபுர வாயிலை அடுத்துப் பலிபீடமும் கொடி மரமும் அதனருகில் சன்னதியை நோக்கி அமைக்கப்பட்ட கருடாழ்வார் சிறு கோயிலும் உள்ளது.

இவற்றை அடுத்து இரண்டாம் சுற்றின் நுழை வாயிலில் மூன்று நிலைகளைக் கொண்ட நடுராஜகோபுரம் அமைக்கப்பட்டுள்ளது. கோபுரத்தின் மேல் பகுதியில் திருமால் அவதாரங்களாகிய சுதைச் சிற்பங்கள் காட்சி தருகின்றன.

இரண்டாம் பிரகாரத்தில் மூன்று பிரதான கோயில்கள் அமைந்துள்ளன. மையத்தில் வேட்டை வெங்கட்ராயப்பெருமாள் சன்னதி அமைந்துள்ளது. நிருதிமூலையில் கனகவல்லி தாயார் சன்னதியும் வாயு மூலையில் மடப்பள்ளியும் அமைந்துள்ளது.

மகாமண்டபத்தின் நுழைவு வாயிலில் இரு பக்கமும் ஜெயர், விஜயர் என்ற துவார பாலகர்கள் சிலைகளைக் காணலாம். இச்சிலைகளின் மேலிரு கைகளில் சங்கு சக்கரம் உள்ளன. மகா மண்டபத்தின் வடகிழக்குப் பகுதியில் கோதண்டராம பெருமாள் சன்னதி சீதா தேவி தாயாருடன் இலக்குமணன், அனுமன் ஆகியோருடன் தனிச் சன்னதியாக அமைந்துள்ளது.

மகா மண்டபத்தை அடுத்து அந்தராளப்பகுதி அமைந்துள்ளது. கருவறையில் மூலவர் வேட்டை வெங்கட்ராயப்பெருமாள் ஸ்ரீ தேவி பூதேவியுடன் சேவை சாதித்துக் கொண்டுள்ளார். மேலிரு கரங்களில் சங்கு சக்கரம் அணி செய்கின்றன. கீழிரு திருக்கரங்களில் வலது அபயஹஸ்தமாகவும் இடது கடி ஹஸ்தமாகவும் அமைந்துள்ளன. சீதேவியின் இடது கரத்தில் அல்லி மலரும், பூதேவியின் வலக்கரத்தில் அல்லி மலர் உள்ளது.

## தனிச்சிறப்பு:

இறைவனை வாரந்தோறும் சனிக்கிழமைகளில் துளசியால் அர்ச்சனை செய்து வழிபட துன்பங்கள் நீங்கி வளம் பல பெறுவர். இத்திருக்கோயிலில் உள்ள 6 கல்வெட்டுகள் இக்கோயிலின் பழமையை பறைசாற்றுகின்றன.

### திருவிழாக்கள்:

கருடசேவை, கிருஷ்ண ஜெயந்தி, தீபாவளி, திருக் கார்த்திகை தீபம் போன்றவை முக்கிய திருவிழாக்கள் ஆகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் பிற்பகல் 11.00 மணி வரையிலும், மாலை 6.30 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திண்டிவனம், மரக்காணத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திண்டிவனம், பாண்டிச்சேரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

அருள்மிகு வேட்டவராயப் பெருமாள் திருக்கோயில்,

ஆலத்தூர், திண்டிவனம் வட்டம்,

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 8903204670

# 13. அருள்மிகு பூமீஸ்வர சுவாமி திருக்கோவில்

மரக்காணம், திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | பூமீஸ்வரர் |
| இறைவி | : | கிரிஜாம்பாள் |
| தீர்த்தம் | : | சமுத்திர தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*சென்னை – புதுச்சேரி கிழக்கு கடற்கரை சாலையில் சென்னையிலிருந்து 120 கிலோமீட்டர் தொலைவிலும் புதுவையிலிருந்து 35 கிலோ மீட்டர் தொலைவிலும், திண்டிவனத்திலிருந்து 35 கிலோ மீட்டர் தொலைவிலும்*

உள்ளது மரக்காணம். இங்கு கிழக்கு கடற்கரை சாலையில் அமைந்துள்ளது இத்திருக்கோவில்.

## தலவரலாறு



"சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு இந்த ஊருக்கு சில சிவனடியார்கள் வந்தனர். அவர்களுக்கு ஊர் மக்கள் பக்தி சிரத்தையோடு சமையல் செய்து விருந்து படைத்தனர். ஆனால் அந்த சிவனடியார்களோ, "நாங்கள் தினமும் குளித்து சிவனைப் பூஜை செய்த பிறகே சாப்பிடுவது வழக்கம் எனவே இங்கு சிவன் சந்நிதி எங்கு உள்ளது?" என்று கேட்டனர். அதற்கு ஊர் மக்கள் "சுவாமிகளே, எங்கள் ஊரில் சிவன் கோவில் மட்டுமல்ல எந்தக் கோவிலுமே இல்லை" என்று கூறினர். "அப்படியா? அப்படியானால் எங்களுக்கு சாப்பாடு வேண்டாம்" என்று கூறிவிட்டு சிவனடியார்கள் கிளம்ப முற்பட்டனர். சிவனடியார்கள் சாப்பிடாமல் கிளம்பியது கண்டு ஊர் மக்கள் திகைத்து நிற்க, ஊர் முக்கியஸ்தர்களில் சிலர் "சாமிகளே, அவசரப்பட வேண்டாம்" என்று தடுத்து நிறுத்தி ஒரு திடீர் ஏற்பாட்டையும் செய்தனர்.

ஒரு பெரிய மரக்காலை எடுத்தனர் (தானியம் அளக்கும் மரத்தினாலான கலம்) அதைக் கவிழ்த்து வைத்து, அதற்கு விபூதியால் மூன்று பட்டை போட்டனர். நடுவிலே குங்குமப் பொட்டு வைத்தனர். பூக்களைப் பறித்துத் தூவினர். அதைக் கண்டு மகிழ்ந்த சிவனடியார்கள் அந்த மரக்காலையே



சிவலிங்கமாகக் கருதி பூஜை செய்து, பிறகு மக்கள் அளித்த உணவை சாப்பிட்டு விட்டுச் சென்றனர். அதன் பிறகு சிவலிங்கமாக வைத்து வழிபட்ட அந்த மரக்கால் படியை காலப்போக்கில் மக்கள் மறந்து போனார்கள். அந்த இடத்தில் ஒரு புற்று கிளம்பியது. காடாக இருந்த அந்தப் பகுதியை நீண்ட காலத்திற்குப் பிறகு வெட்டி சுத்தம் செய்தனர். அப்போது புற்று மீது அரிவாள் பட்டுத் தெறிக்க கலைந்த புற்றுக்குள் சுயம்பு லிங்கம் காட்சியளிக்க, மக்கள் மெய்சிலிர்த்துப் போனார்கள். அதே இடத்தில் அந்த சிவலிங்கத்தை வைத்து வழிபட்டனர்.

## புராண வரலாறு

சோழமன்னர்கள் காலத்தில் உலக வர்த்தகம் நிகழ்ந்த இவ்வூரும் துறைமுகமும் இயற்கை எழிலோடு விளங்கியுள்ளது. முதலாம் ராஜேந்திர சோழன் காலத்தில் கடல் வணிகம் பெருகி இப்பகுதியில் துறைமுகம் ஒன்று உருவானது. அப்போதுதான் அவர் இக்கோவிலைக் கட்டியுள்ளார்.

## திருக்கோவில் அமைப்பு

இத்திருக்கோவில் உயர்ந்த திருமதிலுடன் கிழக்கு நோக்கி எழிலுற அமைந்துள்ளது. சிலாவிக்கிரகங்களும்,

கற்தூண்களில் வடிக்கப்பட்டுள்ள சிற்பங்களும் மிக நுட்பமான வேலைப்பாடுகளுடன் அழகாக செதுக்கப்பட்டுள்ளன. திருக்கோவிலினுள் நுழைந்து பலிபீடம், கொடிமரம், நந்திதேவர் மற்றும் முன்மண்டபத்தில் அமைந்துள்ள கர்ண பூஷண விநாயகர், இலட்சுமி விநாயகர் ஆகியோரை வணங்கி உள்ளே சென்றால் தெற்கு நோக்கிய வாயிலுடன் கருவறை அமைந்துள்ளது. கருவறையில் பிரம்மாண்டமான வடிவில் பெரிய ஆவுடையில் இறைவன் பூமீஸ்வரர் எழுந்தருளியுள்ளார். சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்பு பூமியில் இருந்து சுயம்புவாக சிவலிங்கம் வெளிப்பட்டதால் இந்த ஈசனுக்கு பூமீஸ்வரர் என்று பெயர். அவரையும் உற்சவ மூர்த்திகளையும் வணங்கி வெளியே வந்தால் வித்தியாசமான அமைப்பாக கருவறையைவிட உயர்ந்து அமைந்துள்ள அழகிய சிற்பங்களுடன் கூடிய கல்தூண்கள் அமைக்கப்பட்ட திருச்சுற்று இங்கு நால்வர் மூர்த்திகள் பல்வேறு வடிவங்களில் விநாயகர், காமாட்சியம்மன், பைரவர், ஆஞ்சநேயர், சரஸ்வதி, மாரியம்மன் ஆறுமுக சுவாமி, சப்த மாதாக்கள் மற்றும் பல தெய்வங்களின் சிலாவிக்கிரகங்கள் உள்ளன. மூலவிநாயகர் மற்றும் விநாயகர், வள்ளி தேவசேனா சமேத சுப்பிரமணியர் ஆகிய தனி சன்னதிகளும் அமைந்துள்ளன.

கருவறை கோஷ்டத்தில் பிட்சாடனர், தட்சிணாமூர்த்தி, மகாவிஷ்ணு, பிரம்மா, வேறெங்கும் இல்லாத வகையில் குடையுடன் துர்க்கை ஆகியோர் உள்ளனர். சண்டிகேஸ்வரருக்கு தனியே சிறு சன்னதி உள்ளது. திருச்சுற்றின் வடமேற்கு பகுதியில் அன்னை கிரிஜாம்பிகையை தனி சன்னதியிலும், பைரவர் மூர்த்தியையும் தரிசிக்கலாம் திருமதில் வாயில் அருகில் வலப்புறத்தில் சூரியன், சந்திரன் சன்னதிகளும் அமைந்துள்ளன. தல விருட்சமாக வில்வ மரம் தழைத்தோங்கி வளர்ந்துள்ளது.

### தனிச்சிறப்பு

மக்கள் தங்கள் நிலத்தில் ஏற்படும் பிரச்சினைகள், வீடுகட்டுவதில் ஏற்படும் தடைகள் ஆகியவற்றை நீக்க அந்த

நிலத்தில் இருந்து மணலை எடுத்துவந்து இறைவன் முன் வைத்து அபிஷேகம் செய்து அந்த மணலை எடுத்துச்சென்று நிலத்தில் வைத்து வழிபட வேண்டும். பின் வீடு கட்டும் போது பூஜை செய்த மணலை சிமெண்ட் கலவையுடன் சேர்த்து கட்டினால் வீடு கட்டும் வேலை குறித்த காலத்திற்குள் நிறைவடையும் என்பது ஐதீகம். அதனால் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் வருகை தருகின்றனர். கடற்கரைக்கு அருகிலேயே அழகுற அமைந்துள்ள இவ்வாலயத்தின் சிறப்பம்சம் திருமணத்தடை நீக்குவது ஆண்–பெண் இருபாலரும் எலுமிச்சம் பழத்தில் விளக்கேற்றி தினசரி வழிபட்டால் திருமணத் தடை நீங்கும். இங்குள்ள துர்க்கை அம்மன் மிகவும் சக்தியுள்ள தெய்வம். அவரை செவ்வாய்க்கிழமை தோறும் இராகு காலத்தில் பூஜை செய்து தொடர்ந்து வணங்கி வந்தால் குழந்தைப்பேறு நிச்சயம் கிடைக்கும்.

பிரகாரத்தில் அமைந்துள்ள வடக்கு முகம் பார்த்த ஆஞ் சநேயர் சுவாமிக்கு செவ்வாய் மற்றும் சனிக்கிழமைகளில் துளசி மாலை வெற்றிலை மாலை, வடை மாலை ஆகியவற்றை அணிவித்து நெய்தீபம் ஏற்றி வழிபட்டால் நிறைந்த பலன்கள் உண்டு. மேலும் இத்திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள மூலவிநாயகர் முன்பாக நெய்தீபம் ஏற்றி வைத்து அவரது பெயரை 21 முறை கூறி மனதை ஒருமுகப்படுத்தி தங்கள் வேண்டுதல்களை அவர் முன் வைத்தால் வேண்டுதல்கள் உடனே நிறைவேறுகிறது என்றும் பக்தர்கள் கூறுகின்றனர். இக்கோவில், ஜாதகங்களில் ஏற்படும் தோஷங்களுக்கான பரிகார தோஷ தலமாகவும் விளங்குகிறது.

### திருவிழாக்கள்

இத்திருக்கோவிலில் சிவத்தலங்களில் நடைபெறும் விழாக்களான தமிழ் வருடப்பிறப்பு ஆனித்திருமஞ்சனம், விநாயக சதுர்த்தி, நவராத்திரி, அன்னாபிஷேகம், கார்த்திகை சோமவாரம்,

திருக்கார்த்திகை, திருவாதிரை, மகாசிவராத்திரி ஆகிய அனைத்து விழாக்களும் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 11.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னை – பாண்டிச்சேரி கிழக்கு கடற்கரை சாலை வழியாகவும், பாண்டிச்சேரி, திண்டிவனத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

பாண்டிச்சேரி, திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு பூமீஸ்வரசுவாமி திருக்கோயில்,
மரக்காணம், திண்டிவனம் வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile : 8903204670

# 14. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்

மரக்காணம், திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வரதாஜப்பெருமாள் |
| இறைவி | : | பெருந்தேவி தாயார் |
| ஆகமம் | : | வைகானசம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

*சென்னை – புதுச்சேரி கிழக்கு கடற்கரை சாலையில் சென்னையிலிருந்து 120 கிலோமீட்டர் தொலைவிலும் புதுவையிலிருந்து 35 கிலோ மீட்டர் தொலைவிலும், திண்டிவனத்திலிருந்து 35 கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ள மரக்காணம் பேருந்து நிலையத்தின் எதிரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*



## தல வரலாறு:

காஞ்சியில் உள்ள ஸ்ரீ வரதராச பெருமாள் தனது பரிவாரங்களுடன் வேட்டையாடி வரும்போது இரவாகிவிட்டதால் அந்த நாளில் கானகமாக இருந்த மரக்காணத்தில் தங்கினார். இவ்வூர் அவருக்கு பிடித்து விட்டபடியால் அப்பொழுது இவ்வூரை ஆண்டு வந்த இரண்டாம் குலோத்துங்க சோழனின் கனவில் தோன்றி இவ்வூரில் குடியேற உள்ளோம் என்று கூறியதைத் தொடர்ந்து அரசனும் அக மகிழ்ந்து இக்கோயிலை நிர்மாணித்ததாக கூறப்படுகிறது.

## திருக்கோயில் அமைப்பு:

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. நெடிய கொடி மரமும், கருடாழ்வார் சன்னதியும் பலிபீடமும் அமைந்துள்ளது. சிறிய மகா மண்டபத்தை கடந்து சென்றால் கருவறையில் ஸ்ரீவரதராசப்பெருமாள் நின்ற கோலத்துடன் இருதேவியருடன் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார். திருச்சுற்றில் சுவாமியின் வலது பக்கம் பெருந்தேவி தாயார் சன்னதியும்



இடது புறத்தில் ஆண்டாள் சன்னதியும் தனித்தனியாக அமைந்துள்ளது.

### திருவிழாக்கள்:

சித்திரையில் ஆஞ்சநேயருக்கு இலட்சார்ச்சனை விழாவும் புரட்டாசியில் நவராத்திரி உற்சவமும், ஐப்பசியில் தீபாவளி சிறப்பு அபிஷேகமும், மார்கழியில் வைகுண்ட ஏகாதசி உற்சவமும், அனுமன் ஜெயந்தி உற்சவமும் கார்த்திகையில் தீப உற்சவமும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னை – பாண்டிச்சேரி கிழக்கு கடற்கரை சாலை வழியாகவும், பாண்டிச்சேரி, திண்டிவனத்திலிருந்தும் பேருந்து வசதி உள்ளது

### தங்கும் வசதி

பாண்டிச்சேரி, திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**
அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்,
மரக்காணம், திண்டிவனம் வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 8903204670

## அனுமனுக்கு வடைமாலை ஏன்?



அனுமனுக்கு மட்டும் வடை மாலை சாத்துகிறார்கள். வேறு எந்தக் கடவுளுக்கும் வடைமாலை சாத்தும் வழக்கமில்லை. இது ஏன் என்று தெரியுமா?

ஆஞ்சநேயர் எப்போதும் ராம தியானத்தில் இருப்பவர். அவரை ராம தியானத்திலிருந்து கலைப்பது கடினம். ஆகவே ராம நாம ஜெபம் நாமும் செய்தால், எங்கேயோ ராம நாமம் கேட்கிறதே என்று அவர் நினைவு இவ்வுலகம் பற்றி வரும் அந்த ராம நாம ஜெபத்துடன் அவருக்கு வடை மாலையைச் சாத்த வேண்டும். மார்பில் ஏதோ வருத்துகிறதே என்று அம்மாலையைத் தொட்டுப் பார்ப்பார். அப்போதும் அவர் கண்களைத் திறக்காமல் ராமஸ்வரூபத்தையே நினைவில் கொண்டிருப்பார்.

குரங்கின் நடவடிக்கை எந்த மாலைப் போட்டாலும் பிய்த்தெறிந்து அதைக் கடித்துத் துப்புவதுதான். ஆகவே வடைமாலையை அவர் பிய்த்துக் கடிப்பார். அதில் ராமநாம சுவையிருக்கிறதா? என்று பார்ப்பார்.

அதனால்தான் வடைக்கு உளுந்தை ஊறப்போடும் போதும், அரைக்கும் போதும், வடை தட்டும் போதும் ராம நாம ஜெபம் அவசியம் ராம நாமம் வடையில் ஏற வேண்டும். சாதாரணமாக குரங்குகளுக்கு இனிப்பு பிடிக்காது.

ருத்திராட்சத்திற்கு மாலையாகக் கட்டிக் கொள்ள இயற்கையாகவே துளை இருக்கும். அது போல வடையை மாலையாகக் கட்டவே நடுவில் துளை வைத்துத் தட்டப்படுகிறது.



# 15. அருள்மிகு மஞ்சனீஸ்வரர் சுவாமி திருக்கோயில்

கீழ்ப்புத்துப்பட்டு, திண்டிவனம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | மஞ்சனீஸ்வரா் என்கிற ஐயனாரப்பன் |
| இறைவி | : | பூரணி, பொற்கலை |
| தீர்த்தம் | : | ஐயனாா் தீா்த்தம் |
| தலவிருட்சம் | : | ஐவேல மரம் |

## *அமைவிடம்:*

*கீழ்ப்புத்துப்பட்டு என்ற ஊர் புதுவைக்கும், மரக்காணத்திற்கும் நடுவே 15–வது கி.மீ. தொலையில் உள்ளது. கூட்டுச்சாலையில் இருந்து மேற்கே சுமார் 1 கி.மீ தூரத்தில் ஐவேலங்காடு என்று அழைக்கும் காடுகளின் நடுவில் அருள்மிகு மஞ்சனீஸ்வரர் திருக்கோயில் (ஐயனார் கோயில்) அமைந்துள்ளது.*

### தலவரலாறு:

பத்மாசூரன் என்ற அரக்கன் தன்னை விட உயர்ந்தவர் பலசாலி யாருமில்லை தன்னை யாரும் வெல்ல முடியாது என்று அகங்காரம் கொண்டு ஐவேலங்காட்டின் வழியே வந்து கொண்டிருந்தபோது நாரதர் அவனை நேரில் சந்தித்தார். பத்மாசூரன் என்னை எவரும் ஜெயிக்கவோ (அ) என்னை விட பலசாலியாகவோ யாரும் இருக்ககூடாது என்று நாரதரை கேட்டான். நாரதர் உடன் நீ சிவபெருமானை நோக்கி தவம் செய்தால் உனக்கு பலன் கிடைக்கும் என்று சொல்லிவிட்டு சென்றார். அவனும் மேற்படி காட்டில் அமர்ந்து ஈஸ்வரனை நோக்கி தவம் செய்தபோது ஈஸ்வரன் மாறுவேடத்தில் காட்சியளித்து என்ன வரம் வேண்டுமென வினவ உடனே அவன் நான் யார் தலையில் கைவைத்தாலும் அவர்கள் எரிந்துவிட வேண்டும் என கேட்க இறைவனும் கேட்ட வரம் கொடுத்தேன் சென்றுவா என்று கூறினார். உடனே பத்மாசூரன் வரம் பெற்றதும் ஈஸ்வரன் தலையில் கை வைக்க முயன்றான். உடனே ஈஸ்வரன் ஐவேலங்காட்டின் ஒரு மரத்தின் காய்க்குள் பதுங்கிக்கொண்டார். பத்மாசூரன் ஆடு உருவம் கொண்டு எல்லா செடி கொடிகளையும் மேய ஆரம்பித்து விட்டான். மேய்ந்து கொண்டு சிவன் இருக்கும் மரத்தின் அருகில் வரும் பொழுது சிவபொருமான் கிருஷ்ணா என கூவினார். உடனே பரமாத்மா மோகினி அவதாரம் எடுத்து சிவன் இருக்கும் இடத்தை நோக்கிச் சென்றார். பத்மாசூரன் பெண்ணை நோக்கியதும் மோகம் கொண்டு அவளை அடைய வேண்டுமென இச்சைப்பட்டான்.



பரமாத்மா உடன் எங்காவது நீர் இருந்தால் தலையில் தெளித்துக் கொண்டுவா என்று கூற, பத்மாசூரன் கழுவெளிக்குச் சென்று மாட்டின் குளம்புபோல் செய்து வைத்து இருந்த குளத்திற்குச் சென்று நீர் எடுத்து தலையில் தெளிக்க தன் தலைமேலேயே கைப்பட அவன் எரிந்து போனான். சிவன் வெளியே வந்து கிருஷ்ண பரமாத்மாவின் மோகினி அவதாரத்தை கண்டு மோகம் அதிகமாகி இருவருக்கும் பிறந்த குழந்தைக்கு ‘கையினாரப்பன்’ என்று பெயர் சூட்டி காட்டிலுள்ள புற்றின் அருகே குழந்தையை விட்டு விட்டு வந்தனர். இந்த குழந்தையின் பெயர் ‘கையினாரப்பன்’ என்பது நாளடைவில் ‘ஐயனாரப்பனாக’ மாறியது.

## திருக்கோயில் அமைப்பு:

இத்திருக்கோயில் காட்டிற்குள் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூலவர் சன்னதியில் சுவாமி மஞ்சனீஸ்வரர் என்கின்ற ஐயனார், பொற்கலை, பூரணி இவர்களுடன் அமர்ந்துள்ளார். நுழைவு வாசல் முன்பு பலிபீடம் யானையுடன் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலுக்குச் செல்லும் முன் ஐயனாருக்கு நெருங்கிய நண்பர் வாவர் என்பவர் அவரது சகாக்களுடன் தனிக்கோயில் கொண்டு உள்ளார். அதற்கு தற்போது மலையாளத்தார் கோயில் என்ற பெயர் வழங்கப்படுகிறது.

இத்திருக்கோயில் சுற்று சுவர்களுக்குள் பின்பக்கம் வடக்கே சுப்ரமணியர் சன்னதியும், தெற்கே விக்னேஸ்வரரின் சன்னதியும் தனித்தனிக் கோயிலாக உள்ளது. மதிலுக்கு வெளியே பின் பக்கம் மேற்கில் குதிரை கோயில், புத்து கோயில், அருள்மிகு விநாயகர் கோயில்கள் உள்ளன. இத்திருக்கோயில்கள் யாவும் அருள்மிகு மஞ்சனீஸ்வரர் கோயிலுடன் இணைந்த இணைக் கோயில்களாகும்.

## தனிச்சிறப்பு:

அருள்மிகு மஞ்சனீஸ்வரர் திருக்கோயில் பிரதான திருக்கோயிலாகும். மேலும் பழமையான சக்தி வாய்ந்த

திருக்கோயில் என்றும் பெரியோர்களால் போற்றப்படுகிறது.



இத்திருத்தலத்தில் ஐயனாருக்கு அபிஷேகம் செய்து பரிவட்டங்கள் சாத்தினால் நினைத்த காரியங்கள் கைகூடும் என்பது திண்ணம். இங்கு முடி எடுத்து காது குத்தி செல்பவர்கள் நல்ல சுகமுடன், நீண்ட ஆயுளுடனும் வாழ்வாங்கு வாழலாம் என்பது பொதுமக்களின் நீண்ட கால நம்பிக்கை.

### அருள்மிகு மலையாளத்தார் கோயில்:

இத்திருக்கோயிலில் ஆடு சுற்றி விடுதல், கோழி சுற்றி விடுதல் முதலியன நடைபெறுகின்றன. சேவார்த்திகள் பிரார்த்தனைக்காக உயிர்களைச் சுற்றிவிட்டு சென்றால் எல்லா நன்மையும் உண்டாகிறது என்பது உறுதி.

### அருள்மிகு புத்து கோயில்:

இத்திருத்தலத்தில் குழந்தை பாக்கியம் இல்லாதவர் மற்றும் திருமணமாகாத இளம் கன்னியர் புற்றில் முட்டை படைத்தும் மரக்கிளைகளில் மஞ்சள் கயிறு, தூளி முதலியன கட்டியும் பிரார்த்தனை செய்தால் பிரார்த்தனை நிறைவேறும்.

### அருள்மிகு குதிரை கோயில்:

இங்கு நான்கு குதிரைகள் உண்டு அதில் தெற்கு பக்கமாக முகம் இருக்கும் குதிரை 1–ல் மனக்கஷ்டம், குழப்பம், களவு, கொள்ளை முதலியவைகளுக்கு குதிரையின் காலில் சீட்டு எழுதி கட்டி விட்டு பிரார்த்தனை செய்து சென்றால், மனசஞ்சலங்கள் இல்லாமலும், வீட்டில் களவு போன பொருட்களும் விரைவில் கிடைத்து விடும் என்பது தொன்று தொட்டு நிலவும் நம்பிக்கை ஆகும். பின்னர் களவுபோன பொருட்கள்

கிடைத்ததும் கட்டிய நபரே மீண்டும் வந்து அந்த சீட்டை அவிழ்த்து விடவேண்டும். மேலும் தன்னை அதிக அளவில் வார்த்தைகளால் துன்புறுத்தும் நபர்களின் வாயை அடக்கி வைப்பதற்காக இங்கு வேண்டிக்கொண்டு புதிய பூட்டு ஒன்றை எடுத்து பூட்டிவிட்டு சாவியை குதிரையிடம் வைத்துவிட்டு சென்றால் அப்படியே நடக்கும்.

### அருள்மிகு விநாயகர் கோயில்:

தற்போதைக்கு இத்திருக்கோயில் கடைசியாக இருந்தாலும் பக்தர்கள் முதலில் விநாயகருக்கு தான் அபிஷேக அலங்காரம் செய்துவிட்டு பின்னர் தான் குதிரை, புற்றுக்கோயில், அருள்மிகு மஞ்சனீஸ்வரர் பின்னர் மலையாளத்தார் கோயிலுக்கு செல்வது வழக்கம்.



### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலுக்கு மாசிமகம் உற்சவம் பெரிய உற்சவமாகும். ஆடி, தை, சித்திரை ஆகிய மாதங்களில் திங்கள் தோறும் இத்திருத்தலத்தில் உற்சவ நாட்களாகும்.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.30 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*மரக்காணம், பாண்டிச்சேரியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*பாண்டிச்சேரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*

**தொடர்பு முகவரி**


**செயல் அலுவலர்,**

அருள்மிகு மஞ்சனீஸ்வரர் திருக்கோயில்,

கீழ்ப்புத்துப்பட்டு, திண்டிவனம் வட்டம்,

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 8903204670

# 16. அருள்மிகு நேத்ரோதாரகேஸ்வரர் திருக்கோயில்

பனையபுரம், விக்கிரவாண்டி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | திருகண்ணமர்ந்த நாயனார், (பனங்காட்டீஸ்வரர்) |
| இறைவி | : | மெய்யம்மை, சத்யாம்பிகை |
| தீர்த்தம் | : | பத்ம தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | பனைமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திற்கு வடகிழக்கே பத்து கிலோ மீட்டர் தொலைவில் சென்னை தஞ்சாவூர் சாலையும் விழுப்புரம் வழுதாவூர் சாலையும் சந்திக்கும் இடத்தில் உள்ள 'பனையபுரம்' எனப்படும் 'பனங்காட்டூர்' கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

### புராண வரலாறு:

பனங்காட்டூர் எனும் பெயர் பனை என்ற சொல்லில் இருந்து வந்தது. இக்கோயிலின் தல விருட்சமாய்ப் பனை மரம் திகழ்கிறது. புறவார் என்னும் சொல்லை புறவு+ஆ எனப்பிரித்தால், புறா நினைவுற்ற என்று பொருள். இப்புனித மண்ணில் தான் பண்டைக்கால மன்னன் சிபி, வேடனால் விரட்டப்பட்டு, தன்னிடம் தஞ்சம் புகுந்த புறாவிற்கு, தன் உடலில் உள்ள தசை அனைத்தையும் தந்து தன் இன்னுயிரையும் இழக்கத்துணிந்தான். இவரது கருணையை பாராட்டி இறைவன் இவனுக்கு முக்தியளித்தார் எனப் புராணம் புகழ்கிறது.

சூரியன் தன் ஒளிக்கதிர்களை சிவபெருமான் மீது பொழிந்து வழிபட்டு முக்தி அடைந்தான் என்றும் சொல்லப்படுகிறது.

### வரலாற்று பின்னனி:

பிற்கால சோழர் காலத்தில் இராஜேந்திர வள நாடு துணைக்கோட்டங்களில் ஒன்று. நாட்டின் உட்பகுதி பனையூர் தலைநகரமாக விளங்கியது.

### திருக்கோயில் அமைப்பு:

பலீபீடம், நீண்ட கொடிமரம் கடந்து சென்றால் கருவறையின் உள்ளே சதுர வடிவமுடைய சிவபெருமான், திருக்கண்ணமர்ந்த நாயனாராக காட்சி தருகின்றார். இவருக்கு முன் அமைந்துள்ள நந்தி, பலிபீடம் போன்றவை ஒரே கோட்டில் அமைந்துள்ளது. தென்மேற்கு மூலையில் கணபதிக்கென தனியாக சிறிய கோயிலும் மேற்கு புறத்தில் முருகனுக்கென தனி கோயிலும் கட்டப்பட்டுள்ளது.



கோயிலின் வெளிப்பிரகாரத்தில் இறைவி அருள் தரும் சத்யாம்பிகைக்கு தனியே ஓர் சன்னதி அமைந்துள்ளது.





திருக்கண்ணமர்ந்த நாயனார் ஆலயம் மூன்று தளமாடங்களையும் அம்மன் கோயில் இரண்டு தள மாடங்களையும் கொண்டு அழகுற விளங்குகின்றன.

## தனிச்சிறப்பு:

இத்திருக்கோயிலில் சிவபெருமானைப் போலவே இறைவியும் கிழக்கு நோக்கி அருள்பாலிப்பது சிறப்பாகும். இத்திருக்கோயிலில் உள்ள 16 கல்வெட்டுகள் இத்திருக்கோயிலின் பழமையை எடுத்துரைக்கின்றன.

## திருவிழாக்கள்:



சித்திரை திங்கள் முதல் ஏழு நாட்கள் இறைவன் மீதும் இறைவி மீதும் ஞாயிறு தன் ஒளியை வீசும் நிகழ்ச்சி சூரிய பூஜையாக நடைபெற்று விழாவாக எடுக்கப்பட்டு வருகிறது.

சித்திரை வளர்பிறை பஞ்சமியில் தொடங்கி பௌர்ணமியில் முடிவடையும். பத்து நாட்கள் தேர் திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. மேலும், நவராத்திரி, சோமவார விழா, அன்னாபிஷேகம், சிவராத்திரி போன்ற விழாக்களும் நடைபெறுகிறது.

இவ்வூரின் காவல் தெய்வம் என்று இத்தலத்து அம்பிகை போற்றப்படுகிறாள். யாரேனும் இத்தெய்வத்தின் முன் பொய் பேச முற்படுவராயின் உறுதியாக விரைவில் அவர் மரணம் எய்துவார் என இப்பகுதி மக்கள் நம்புகின்றனர்.



முற்றிலும் பார்வையிழந்தவர், மூலவரின் தாமரைத் தாள்களில் சரண் புகுந்தால் கண்ணொளி வழங்கிக் காத்து அருள்வார் என்றும் கூறப்படுகிறது.

இத்தலத்து இறைவனை திருஞானசம்பந்தர் – புரவார் பனங்காட்டுப் பதிகத்தில் பாடி சிறப்பித்துள்ளார். மேலும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பதிகம் பாடியுள்ளார்.

ஆ.சிங்காரவேலு முதலியார் எழுதிய அபிதான சிந்தாமணியில் இத்தலம் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.30 மணி வரை திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்,
அருள்மிகு நேத்ரோதாரகேஸ்வரர் திருக்கோயில்,
பனையபுரம், விக்ரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile : 9443251012

### திரிசங்கு சுவர்க்கம் என்று ஏன் சொல்கிறார்கள்?

சூரிய வம்சத்து அரசனாகிய திரிசங்கு என்பவன் மனித உடலுடன் சுவர்க்கம் செல்ல வேண்டுமென்று ஆசை கொண்டான். அதற்கான சக்தியைத் தனக்கு அருள வேண்டும் என்று குலகுருவாகிய வசிஷ்டரை வேண்டினான். அவர் தம்மால் அவ்வாறு செய்ய இயலாது என்று சொல்லி விட்டார். அதன் மேல் அந்தத் திரிசங்கு அவர் பகைவராகிய விசுவாமித்திரர் என்னும் மகரிஷியிடம் சென்று தன் எண்ணத்தை எடுத்துரைத்தான். விசுவாமித்திரர் தன்னுடைய தவ வலிமையால் அவனைச் சுவர்க்கத்திற்கு அனுப்பினார்.

ஆனால் தேவர்களின் அரசனான இந்திரன் அவனை சுவர்க்கத்திலிருந்து தள்ளி விட்டான் அவன் கீழே விழுகையில் விசுவாமித்திரரை அலறிக் கூப்பிட்டு உதவி உதவி என்று வேண்டினான். இதைக் கண்ட விசுவாமித்திரர் மனமிரங்கித் தன் தவ வலிமையால் அவனை அப்படியே நிறுத்தினார்.

இதனால் திரிசங்குக்கு சுவர்க்கமும் இல்லை இந்தப் பூமியுமில்லை என்றாகி விட்டது. இப்படி இடைநிலையில் இருந்ததால் அவன் அனைவராலும் இகழ்ந்து பேசப்பட்டான். அவனுடைய இந்த நிலைக்கு குருவின் கட்டளையை மீறியதே முதற்காரணமாக இருக்கிறது. இதனால்தான் இன்றும் ஆதரவற்றவர்களின் நிலையை திரிசங்கு சுவர்க்கமடைந்தவன் என்று சொல்கின்றனர்.



# 17. அருள்மிகு அபிராமேஸ்வரர் திருக்கோயில்

திருவாமாத்தூர், விக்கிரவாண்டி வட்டம்,



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அபிராமேஸ்வரர் |
| இறைவி | : | முத்தாம்பிகை |
| தீர்த்தம் | : | பம்பை தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வன்னிமரம் |
| ஆகமம் | : | உத்தர காரண ஆகமம் |

*அமைவிடம்:*

*விழுப்புரம் நகருக்கு அண்மையில் செஞ்சி செல்லும் சாலையிருந்து மேற்கே 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.*

*தல வரலாறு:*

*தேவாரத் திருப்பதிகங்கள் பாடப்பெற்ற நடுநாட்டுத் திருக்கோயில்களில் 21வதாகச் விளங்குவது திருவாமாத்தூர் ஆகும்.*

*"பிறந்தவர்க்கே வீடுதவும் திருவாரூர்*
*கண்டு தொழப் பெற்றார் கட்கே*
*சிறந்த முக்தி தரும்தில்லை, அருணை நினை*
*வார்களையே சேர்க்கும் வானில்*
*இறந்தவர்க்கே இனிப்பிறவா நிலையளிக்கும்*
*வடகாசி இந் நான்கும்*
*அறந்தழைக்கும் திருவாமாத்தூர் செயுமால்*
*இதன் பெருமை அறிவார் யாரோ!"*

*திருவாரூர் பிறந்தவர்க்கே வீடுபேற்றை அளிக்கும். திருத்தில்லைக் கூத்தப்பெருமானைக் கண்டு தொழுதவர் கட்கே வீடு பேற்றை அளிக்கும். திருவருணை தன்னை எண்ணியவர்களையே நற்கதியில் சேர்க்கும். காசிப்பதி தன்னிடத்திலே வந்து இறந்தவர்கட்கே பிறவாப் பேற்றை அளிக்கும். இந்நூல் நெறிப்பேற்றினையும் ஒருங்கே அளிக்கும் அருள்மிகு முத்தாம்பிகை உடனாகிய அபிராமேஸ்வரப் பெருமான் உறையும் பதியாகிய திருவாமாத்தூர். இதன் சிறப்பை எவர் அறிய வல்லார் என்று மகான் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் மொழிந்துள்ளார்.*

*புராண வரலாறு:*

*"ஆவினம் பூசைபுரி ஆமாத்தூர் வாழ் பரமன்" என்பது தல புராணப்பாடல், எல்லாப் பசுக்களுடனும் நந்திதேவர் பம்பா நதிகரையிலுள்ள வன்னிவனத்திடத்து விளங்கும் சுயம்பு மூர்த்தியாகிய அபிராமேஸ்வரரைப் பணிந்து, பன்னாள் தவம்*

புரிந்து கொம்புகள் பெற்ற காரணத்தால் ஆமாத்தூர் என்ற பெயர் அமைந்தது. திரு என்பது தெய்வதன்மை பொருந்தியது சேர்ந்து திருவாமாத்தூர் என்று வழங்கப்படுகிறது.

வடமொழியில் கோமாதுபுரம், கோமாதீஸ்வரம் என்று வழங்கப்படுகிறது. சைவ சமயக்குரவர்களில் மூவர் திருப்பதிகங்களில் 'ஆமாத்தூர்' என்றே வழங்கி உள்ளனர். பிந்திய காலத்தில் அருணகிரிநாத சுவாமிகள் அதனைத் திரித்து செய்யுள் இயைபுற்று மாதை என்று குறித்தனர். அதன் பின்னர் கலம்பக நூல் இயற்றிய இரட்டைப் புலவர் இருவிதமும் கலந்து பாடியுள்ளனர்.



"நந்தி யாதியர் அளவில்பல் கோடிபேர் நாடிப்
புந்தி யற்கரு தியபயன் பெற்றது புதுநீர்
வந்தி ரங்கொலி திருபாம்பை யறைதன் வடபால்
அந்தி வான்மதிச் சூடிலர் வாழ் மாலையாம்"

### திருக்கோயில் அமைப்பு:

வேறு எங்கும் காண முடியாதவாறு அபிராமேஸ்வரர் திருக்கோயில் கிழக்கு நோக்கியும், சற்று வடப்புறம் தள்ளி நேராக மேற்கு நோக்கி முத்தாம்பிகையம்மன் கோயிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

### தனிச் சிறப்பு:

இத்திருக்கோயில் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூன்றினாலும் சிறப்பினை உடையது. இங்குள்ள அருள்மிகு அபிராமேஸ்வரர் சுயம்பு. பல சதுர் யுகங்களைக் கண்ட பழமையானது இவ்வூர். சுயம்புலிங்கத்தின் மேல் சந்திரப்பிறை கோல் போல் வளைந்து பசுவின் காற்குளம்பின் சுவடு காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சற்று இடதுபுறம் சாய்வாக உள்ளார் இறைவன் என்பது விசேஷமானதாகும்.

திருவாமாத்தூருக்கு அண்மையில் செல்லும் புண்ணிய நதியாகிய பம்பையாறு, எலும்பு பெண்ணுருவாகுமாறு பதிகம் பாடிய திருஞான சம்பந்தப்பெருமான் புகழ்ந்து போற்றிய சிறப்பை உடையதாகும்.

"பரவி வானவர் தானவர் பலருங்கல்கிட வந்த கார்விடம்
வெருவ உண்டுகந்த அருள் என்கொல்? விண்ணவனே,
கரவின் மாமணிபொன் கொழிந்தீழி சந்துகாரகில் தந்து
பம்பை நீர்,
அருவி வந்தமைக்கும் ஆமாத்தூர் அம்மானே!"

என்கிறார் திருஞானசம்பந்தர்

இத்திருக்கோயிலின் உள்ளே அட்ட லிங்கங்கள் (எட்டு மூர்த்திகள்) பக்தர்களுக்கு காட்சி தரும் அமைப்பில் அமைந்திருப்பது சிறப்புக்குரியதாகும்.

1. சுயம்பு லிங்க மூர்த்தி,
2. இராமபிரான் வேண்டுகோளின்படி அனுமன் அருணையிலிருந்து கொண்டு வந்த லிங்க மூர்த்தி (அனுமதீசர்)
3. சகஸ்ர (ஆயிரத்தெட்டு) லிங்க மூர்த்தி
4. குபேரலிங்க மூர்த்தி
5. அண்ணாமலையார்
6. காசிவிஸ்வநாதர்
7. வாயு திசையில் உள்ள வாயு லிங்க மூர்த்தி
8. ஈசான மூர்த்தி

வியாழன் தோறும் வழிபட்டு சிறப்பைப்பெறும் குருபகவான் (தட்சிணா மூர்த்தி) கருவறையின் தென்திசையிலும், பிரம்மன் அன்னமாகவும், திருமால் பன்றியாகவும், சிவபெருமானின் அடி முடி காண தேடிச் செல்லும் லிங்கோற்பவமூர்த்தி கருவறையின் மேற்கிலும் அமைந்துள்ளது. இவரை திங்கட்கிழமை தோறும் வழிபடுவோர்க்கு வேண்டிய நன்மைகள் கிட்டுவது உறுதி.



இத்திருக்கோயிலில் உள்ள திருவட்டப்பாறை குறித்து
"வடக்கற் காசியம் தென் திசைக்
காசியும் மற்றிரு முனைமீதும்
கிடக்கத் தான் சிவன் சூலத்தின்
நடுத்தலை கிளர்திரு வாமாத்தூர்
இடத்தில் சத்தியக் கல்லினைச்
செயிக்குமா(று) எண்ணி ஓர் கொடும்பாவி
தடத்தில் மாய்ந்த வாறு உரைக்குதும்
உலகினோர் நாமும் உணர்ந்து உயுமாறே"

ஆயிரம் சாட்சிகளைக் கேட்டும் கூட உண்மையை உணரமுடியாத பொய் வழக்குகளை எல்லாம் இப்பாறை நொடியில் தீர்த்து அரசர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கும். இப்பாறையின் முன்னர் பொய் சொல்வார் தேவர்கள் ஆனாலும் மீளாத் துன்பப் பெருங்கடலில் வீழ்ந்து வருந்துவர், உண்மை புகன்று நமது துன்பத்தை ஒழித்தவர்களும் பலராவர் என்றும் மேற்கண்ட செய்யுள் சிறப்பித்து கூறுகிறது. அகத்தியர்,

*வசிட்டர், துருவாசர், பிருகு, பராசரர், விசுவாமித்திரர், வியாசர் ஆகிய ஏழு முனிவர்கள் இத்திருத்தலத்திலுள்ள இறைவனை வழிபட்டு மேன்மையுற்றனர். மேலும் அம்பிகை, விநாயகப்பெருமான், முருகப்பெருமான், நாரதர், உரோமசர், பிருங்கி முனிவர், மதங்க முனிவர், பன்னிரு கதிரவர்கள், அஷ்டவசுக்கள், மகாகாளன், இராமபிரான், திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தர் சுவாமிகள், சுந்தர மூர்த்தி சுவாமிகள், இரட்டை புலவர்கள் முதலானோர் இத்தலத்து இறைவனை வழிபட்டு அருள்பெற்றனர் என்பதும் வரலாறு.*

*முதலாம் இராஜராஜசோழன் காலம் முதல் (கி.பி. 1012) சீரங்க தேவ மகாராயர் (கி.பி. 1584) காலம் வரை பேரரசர் – சிற்றரசர் காலத்து எழுபதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் இக்கோயிலில். திருக்கோயில் இறைவன் மீது திருநாவுக்கரசர் இரண்டு பதிகங்களையும், திருஞானசம்பந்தர் இரண்டு பதிகங்களையும் சுந்தரர் ஒரு பதிகத்தையும் பாடியுள்ளார்கள். இதனால் இக்கோயில் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் காலத்திற்கு கி.பி.7ம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்தது என்பது தெளிவாகும்.*




*திருஞானசம்பந்தர் அருளிய இரண்டாம் திருமுறை – பண் – சிங்காரம்:*

*"குன்ற வளர்சிலை நான்அரா அரிவாளிகூரெரி*
*காற்றின் மும்மதில்*

*வென்றவா(று) எங்ஙனே? விடையேறும் வேதியனே*

*தென்றலார்மணிமாட மாளிகை சூளி கைக்கெதிர்*

*நீண்ட பெண்ணைமேல்*

*அன்றில் வந்தனையும் ஆமாத்தூர் அம்மானே" – என்றும்*

*திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய ஐந்தாம் திருமறை திருக்குறுந்தொகை:*

*"மாமாத் தாசிய மாலயன் மால்கொடு*

*தாமாத் தேடியும் காண்கிளர் தாள்முடி*

*ஆமாத்தூர் அரனே! அருள்வாய் என்(று)*

*ஏமாப் பெய்திக் கண்டார் இறை யானையே!" – என்றும்*

*சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய – ஏழாம் திருமுறை – பண் கொல்லிக்கொளவாணம்:*

*"ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத் துள்ளே நின்ற ஒண்பொருள்*

*சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருஒற்றி யூர்புக்குச்*

*சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்றோள் தடமுலை*

*ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத் தூர்ஐயன் அருளதே"*

*– என்றும்*

*பெரிய புராணத்தில்*

*"திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்*

*அருளுதிரு ஆமாத்தூர் திருக்கோவலூர் முதலாமருவுதிருப்*

*பதிவிறவும் வணங்கிவளத் தமிழ்மாடிப் பெருகுவிருப்புடன்*

*விடையார் மகிழ்பெண்ணா கடம் அணைந்தூர" – என்றும்*

*திருமுறைகளில் இத்தலம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.*

### *திருவிழாக்கள்:*

*ஆண்டுதோறும் தேரோட்டத்துடன் கூடிய பங்குனி பிரம்மமோற்சவம், சிவராத்திரி, அன்னாபிஷேகம், நவராத்திரி, ஆருத்ரா தரிசனம், ஆனித்திருமஞ்சனம், திருக்கார்த்திகை, காணும் பொங்கல் ஆகியவை சிறப்பாக நடத்தப்படுகின்றன.*

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் பிற்பகல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம் நகரிலிருந்து சிற்றுந்துகள் மற்றும் நகர பேருந்து வசதிகள் உள்ளன.

### தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்,
அருள்மிகு அபிராமேஸ்வரர் திருக்கோயில்,
திருவாமாத்தூர், விக்கிரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9443251012

# 18. அருள்மிகு நாகம்மன் திருக்கோயில்

தும்பூர் தாங்கல், விக்ரவாண்டி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவி | : | நாகம்மன் |
| தீர்த்தம் | : | நாக தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | அரச மரம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து செஞ்சி செல்லும் வழியில் 10 கி.மீ. தொலைவில் தும்பூர் கிராமத்துக்கு கிழக்கே 2 கி.மீ. தொலைவில் தாங்கல் கிராமத்தில் நாற்புறமும் வயல்கள் மற்றும் ஆல விருட்சங்கள் சூழ்ந்த பரந்த வெளியில் அழகும் அமைதியும் குடிகொண்டு அமைந்துள்ளது இத்திருக்கோயில்.*

*தலவரலாறு:*



பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பிரியாத குடும்பத்தில் அண்ணன் தம்பியுமாகிய இருவரில் தீய உள்ளம் கொண்ட மூத்தவன் இளையோனுக்குரிய செல்வங்களை விற்று ரத்தினங்களாக்கி தனது கைத் தடியொன்றில் மறைத்து வைத்துக்கொண்டு சொத்தில் பங்கு வேண்டி நின்ற இளையவனை ஏமாற்றும் பொருட்டு பொய் சத்தியம் செய்ய துணிந்தான்.

திருவாமாத்தூர் ஸ்ரீ அபிராமேஸ்வரர் ஆலயத்தில் அன்னை முத்தாம்பிகை சன்னதி முன்பு திருவட்டப்பாறை ஒன்று உள்ளது. ஆயிரம் சாட்சிகளை விசாரித்தும் உண்மை விளங்காத பொய் வழக்குகளை தீர்க்க அந்நாளில் நாடாண்ட வேந்தர் மற்றும் அனைவருக்கும் பெருமகிழ்ச்சி அளித்து வந்த அத்திருவட்டப்பாறைக்கு முன்பு பொய் சொல்பவர்கள் தேவர்கள் ஆயினும் கடுந்தண்டனையும் துன்பமும் அடைந்தார்கள். திருவட்டப்பாறைக்கு முன்பு உண்மையை உரைக்க வேண்டி சகோதரர் இருவரும் நின்ற போது நவரத்தினங்களை மறைத்து வைத்திருந்த கைத்தடியை தந்திரமாக தம்பியிடம் கொடுத்து விட்டு முன்னோர்கள் தேடி வைத்து இருந்த பொருளெல்லாம் என்னுடைய தம்பியிடம் தான் இருக்கின்றன. என்னிடம் ஒன்றும் இல்லையென்று மூத்தவன் பொய் சத்தியம் செய்தான்.

திருவட்டப்பாறை நீதி பொய்யானதே என யாவரும் மருண்டு நிற்கையில், சில கல் தொலைவு சென்ற மூத்தோன் திருவட்டப்பாறை தெய்வம் சீறி கொத்துமோ என்று அகந்தையால் மொழிந்து தம்பியிடம் இருந்த கைத்தடியை

வாங்கிய அளவில், பூமியிலிருந்து கருநாகம் தோன்றி அவனை சீறி, கொத்திக்கொன்றது. யாவரும் வியப்புற்று தெய்வத்தின் சோதனையை கண்ணெதிரே கண்டு நாகத்தை வணங்கி நிற்கையில் நாகத்தின் அடிப்பகுதி பூமியில் மறைந்து தலை மட்டும் படம் எடுத்த வடிவில் சிலையாய் அங்கு நாகாத்தம்மன் எழுந்தருளினாள். அங்கேயே அம்மனுக்கு கோயிலமைத்து அன்று தொட்டு நாகாத்தம்மன் வழிபடப்பட்டு மக்கள் துன்பங்களை போக்கி வருகின்றாள். அப்பாம்பின் வால் அருகிலுள்ள திருவாமாத்தூர் அம்பிகையின் திருமேனியில் உள்ளது.

### திருக்கோயில் அமைப்பு:

வயல் வெளியில் சுமார் 1 ஏக்கர் பரப்பில் திருக்கோயில் அமைந்துள்ளது. நாகம்மன் சுயம்பு உருவாய் மேற்கு முகமாக அமைந்துள்ளாள். சன்னதிக்கு வடபுறம் திருக்குளம் அமைந்துள்ளது. திருக்கோயிலின் முன்பாக வெளிச்சுற்றில் விநாயகர் சன்னதி அமைந்துள்ளது.

### தனிச் சிறப்புகள்:



காலந்தோறும் வளர்ந்து வரும் நாகம்மனை பிறவிக்குருடர்களும், ஊமைகளும் வழிபட்டு கண்ணொளியும் பேச்சும் பெற்று வருகின்றனர். எத்தனை குறையுடையவரும் உள்ளன்போடு வழிபட்டு நின்ற அளவில் குறை நீக்கப் பெற்று நலம் எய்தி வருகின்றனர்.

இத்திருக்கோயிலுக்கு செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் பெருந்திரளாக மக்கள் வந்து அம்மனை தரிசித்துப்

பயனடைகின்றனர். நாகதோஷம் உள்ளவர்களும் திருமணம் நடைபெற ஜாதகத்தில் தோஷம் உள்ள கன்னிப்பெண்களும், இன்னல்கள் பல பெற்ற சேவார்த்திகளும் இத்திருக்கோயிலுக்கு வந்து துன்பங்கள் எல்லாம் நீங்கப்பெறுகின்றனர்.

### திருவிழாக்கள்:

சித்திரை மாதம் ஐந்து வெள்ளிக்கிழமைகளிலும் திருவிழா நடைபெறும். முதல் வெள்ளிக்கு சுவாமி தும்பூர் கிராமத்திற்கு வீதியுலா வந்து திருவிழா நடைபெறும். அது சமயம் அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பக்தர்கள் வந்து தரிசித்து அருள் பெறுகின்றனர். மேலும் ஆடிப்பூரம், காணும் பொங்கல் திருவிழா, தை வெள்ளி, நவராத்திரி போன்ற தினங்களிலும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து சிற்றுந்து வசதி உள்ளது. தும்பூரிலிருந்து ஆட்டோ வசதியும் உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**

அருள்மிகு நாகம்மன் திருக்கோயில்,
தும்பூர் தாங்கல், விக்கிரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9443251012

# 19. அருள்மிகு பிரம்மபுரீஸ்வரர் திருக்கோயில்

பிரம்ம தேசம், விக்கிரவாண்டி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | பிரம்மபுரீஸ்வரர் |
| இறைவி | : | பிரகன் நாயகி |
| தீர்த்தம் | : | பிரம்ம தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து செஞ்சி சாலையில் 18 கி.மீ. தொலைவில் நேமூர் கிராமத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் பிரம்மதேசம் கிராமம் அமைந்துள்ளது.*

*திருக்கோயில் அமைப்பு:*

*இத்திருக்கோயில் 4.01 ஏக்கர் பரப்பளவில் ஊருக்கு வடமேற்கில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சதுர வடிவிலான*

கருவறையில், வட்டவடிவமான ஆவுடையாரின் மேல் பிரம்மபுரீசுவரர் சிவலிங்கத் திருமேனி நம்மைக் கவருகிறது. பூதவரிசையிலேயே பஞ்சத்தந்திரக் கதைகளும், சிவபுராணச் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

தனிச்சிறப்பு:

மிகப் பழமையான சிற்பக் கருவூலம் இந்தத் திருத்தலம் வேதம்





ஓதும் அந்தணர்களின் குடியிருப்பை உருவாக்கி ஆலயமும் எழுப்பி, அந்த நாட்களில் அந்த ஊர்களை பிரம்மதேசம் சதுர்வேதிமங்கலம் என்று அழைத்தனர். தமிழகத்தின் பல மாவட்டங்களில் இப்படி "பிரம்மதேசங்கள்" உள்ளதைக் காணலாம்.

பிரம்மன் மற்றும் தேவர்களுக்கு காட்சியளித்த திருத்தலம், கேவாருஷலிங்கம், பரிவார மூர்த்திகள் உள்பிரகாரத்தில் உள்ளன. பல்லவ மன்னர்களால் இக்கோயில் கட்டப்பெற்றது. முஸ்லீம் படையெடுப்பின் போது, கோயிலை கொள்ளையடித்தது மட்டுமல்லாமல் வெளிமதில் மற்றும் மண்டபங்களை இடித்து தள்ளினர். சுவாமி அம்மன் மூலவர் சிலை மட்டும் சேதமுறாமல் தப்பியது. இக்கோயிலில் அனேக



கல்வெட்டுகள் உள்ளன. இவ்வூரில் அமைந்துள்ள மற்றொரு திருக்கோயிலான பாடலேஸ்வரர் திருக்கோயிலும் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

பரம்பரை அறங்காவலர்
அருள்மிகு பிரம்மபுரீஸ்வரர் திருக்கோயில்,
பிரம்ம தேசம், விக்கிரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.

## கடவுளுக்கு என்ன வேலை ?

ஒரு ஆத்மா கடவுளிடம் கேட்டது:
நான் குழந்தையாய்ப் பிறக்க வேண்டுமே
கடவுள் சொன்னார்: பிறந்து கொள்
பிறந்த குழந்தை கடவுளிடம் கேட்டது:
நான் வளர வேண்டுமே
கடவுள் சொன்னார்: வளர்ந்துக்கொள்
வளர்ந்த குழந்தைக் கேட்டது: நான் படிக்க வேண்டுமே
கடவுள் சொன்னார்: படித்துக்கொள்
படித்த பையன் கேட்டான்:
எனக்கு நல்ல வேலை வேண்டுமே
கடவுள் சொன்னார்: தேடிக் கண்டுபிடி
வேலையில் சேர்ந்த இளைஞன் கேட்டான்:
எனக்குத் திருமணம் செய்ய வேண்டுமே.
கடவுள் சொன்னார்: நல்ல பெண்ணாய்ப் பார்த்து
திருமணம் செய்துகொள்
திருமணம் ஆனதும் கேட்டான்:
நல்ல குழந்தை வேண்டுமே.
கடவுள் சொன்னார்: பெற்றுக்கொள்.
வயதான பின் அவன் கேட்டான்:
நான் நல்ல படியாக இறக்க வேண்டுமே
கடவுள் சொன்னார்: இறந்துகொள்
அவன் வெகுண்டு கடவுளிடம் கேட்டான்:
ஆரம்பத்திலிருந்து எல்லாமே நீயே செய்து கொள்
என்றே கூறி வருகிறாய் அப்புறம் கடவுள் என்று
சொல்லிக்கொள்ளும் உனக்கு என்னதான் வேலை?
கடவுள் புன்னகையுடன் சொன்னார்:
இத்தனையிலும் உனக்கு ஏற்பட்ட அனுபவம்
இருக்கிறதே அதுதான் நான்.



# 20. அருள்மிகு அழகிய நரசிங்கப்பெருமாள் திருக்கோயில்

எண்ணாயிரம், விக்கிரவாண்டி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வரதராஜப் பெருமாள் |
| இறைவி | : | ஸ்ரீதேவி, பூதேவி |
| ஆகமம் | : | வைகானசம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து செஞ்சி சாலையில் 18 கி.மீ. தொலைவில் நேமூர் கிராமத்திலிருந்து 8 கி.மீ. தொலைவில் எண்ணாயிரம் கிராமம் அமைந்துள்ளது.*

*தல வரலாறு:*

*இந்த ஊரின் வரலாற்றுப் பெயர் இராஜராஜ சதுர்வேதி மங்கலம். முதலாம் இராஜேந்திரன் காலத்தில் இவ்வூரில் பல*

கோயில்கள் இருந்துள்ளன. அவற்றுள் ஒன்றுதான் இராஜராஜ விண்ணகரம் என்று அழைக்கப்பட்ட அழகிய நரசிங்கப்பெருமாள் கோயில் ஆகும். இது 1000 வருடம் பழமையானது. ராஜராஜ சோழன் கட்டியதாகவும், இங்கிருக்கும் பெருமாள் அவனுக்குக் குலதெய்வம் என்றும் கூறப்படுகிறது. இந்த ஊரைச் சுற்றி 3 சோழர் கால சிவன் கோயில்கள் உள்ளன. இராமானுஜர் இக்கோவிலுக்கு இருமுறை வந்து, இங்கிருந்த எண்ணாயிரம் சமணர்களை வைணவர்களாக மாற்றி இருக்கிறார். கவி காளமேகம் பிறந்த ஊரும் இதுவே ஆகும்.



## புராண வரலாறு:

நாலடியார் எனும் இலக்கியத்தைத் தந்த சமண முனிவர்கள் வாழ்ந்த இடம். இந்த ஊர் ஒரு பழமையான சமண ஊர் என்பதற்கு ஆதாரமாக ஊருக்கு வெளியே எண்ணாயிர மலை உள்ளது. இம்மலையில் கி.பி. 9, 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 35 கற்படுக்கைகளும், 5 தமிழ்க் கல்வெட்டுகளும் இயற்கை குகைகளும் உள்ளன. இந்த எண்ணாயிரம் கிராமத்தைச் சேர்ந்த சமணர்கள்தாம் மதுரையில் கூன் பாண்டியன் ஆட்சிக்காலத்தில் நாலடியாரை இயற்றியவர்கள். அப்போது பாண்டிய மன்னன் கடுமையான சுரத்தால் பீடிக்கப்பட்டிருந்தான். அவருக்குச் சமண முனிவர்கள் தவறான மருந்தைக் கொடுக்க அமைச்சர் குலச்சிறையாரும், அரசி மங்கையர்கரசியும் அந்த சமயத்தில் மதுரை மாநகருக்கு உலா வந்த திருஞான சம்பந்தரை அழைத்துத் திருநீற்றுப் பதிகம் பாடி திருநீறு வழங்கிடவே அரசன் சுரம் தணிந்தது. பாண்டியன் மகிழ்ந்து சமணத்திலிருந்து சைவ சமயத்துக்கு மாறினான். ஞான சம்பந்தரின் வேண்டுகோளுக்கு இணங்கி



எண்ணாயிரம் சமணர்களையும் கழுவிலேற்ற உத்தரவிட்டான். இதுவே வரலாற்றில் எண்ணாயிரம் (எட்டாயிரம்) சமணர்கள் கழுவேற்றம் என்று பதிந்துள்ளது.

**வரலாற்றுப் பிண்ணனி:**

இவ்வூரிலுள்ள அழகிய கல்வெட்டுகள் பிற்காலச் சோழமன்னர்கள், முதலாம் இராசேந்திர சோழன், முதலாம் இராசாதிராசன், முதலாம் குலோத்துங்க சோழன், பரகேசரி திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசதேசன், மகாமண்டலசுவரன் இராசராசேந்திர சோழதேவன் இவர்கள் காலங்களிலும், விசய நகர மன்னர்களில் அச்சுததேவமகாராயர், அவரது மகனார் சதாசிவ மகாராயர் காலங்களிலும் செதுக்கப்பட்டனவாகும்.

முதலாம் இராசேந்திர சோழன் வட இந்தியாவிற்கு சென்று வடநாட்டு மன்னர்களை வென்று கங்கை கொண்ட சோழன் என்ற பட்டத்துடன் வந்து, எண்ணாயிரத்தில் கங்கை கொண்ட சோழ மண்டபம் என்னும் ஒரு மண்டபத்தைக் கட்டியுள்ளான் என இவ்வூர் கோயில் கல்வெட்டு அறிவிக்கிறது. பழங்காலத்தில் திருக்கோயில்களே



கல்வி நிலையங்களாக விளங்கின. அங்கு திருப்பதிகம், திருவாய்மொழி போன்றவை கற்பிக்கப்பட்டன.

முதலாம் இராஜேந்திரன் (கி.பி. 1018–1054) காலத்தில் இந்தக் கிராமத்தில் வேதக் கல்லூரி இயங்கியது. அக்கல்லூரிக்காக சோழப் பேரரசன் 300 ஏக்கர் நிலத்தைக் கொடையாக வழங்கியிருக்கிறான். 12 ஆசிரியர்களும் 270 பட்டப்படிப்பு மாணவர்களும், 70 பட்டமேற்படிப்பு மாணவர்களும் இங்கு தங்கி வேதம் பயின்று வந்துள்ளனர். அனைத்து ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் உணவு விடுதி கங்கை கொண்ட சோழன் மண்டபத்தில் நடைபெற்று வந்துள்ளது. இவர்கள் அனைவருக்கும் ஆண்டுதோறும் பத்தாயிரத்து ஐநூற்று ஆறு கலம் நெல் மற்றும் அறுபத்தொன்றரைக் கழஞ்சு பொன்னும் செலவிடப்பட்டுள்ளது. இக்கல்லூரியின் நிர்வாகத்தை அரசோ, பல்கலைக்கழகமோ, நகராட்சியோ மேற்கொள்ளவில்லை. ஊரின் கிராம சபையே ஒழுங்குடன் இதனை பராமரித்து வந்துள்ளது. ஆண்டு தோறும் இந்த செலவை ஈடுகட்ட இந்த வருவாயை





தரவல்ல 45 வேலி நிலத்தினை கிராம சபையினர் இந்த கோயிலுக்கு கொடையாக வழங்கியுள்ளனர்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

திண்டிவனம், விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

விழுப்புரம், திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**

அருள்மிகு அழகிய நரசிங்கப்பெருமாள் திருக்கோயில்,
எண்ணாயிரம், விக்கிரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9443251012

# 21. அருள்மிகு இராமநாதீஸ்வரர் திருக்கோயில்

எசாலம், விக்கிரவாண்டி வட்டம்




| | | |
|---|---|---|
| இறைவன் | : | ராமேஸ்வரமுடையார் |
| இறைவி | : | திரிபுரசுந்தரி |
| தீர்த்தம் | : | காமன் |
| தலவிருட்சம் | : | பனை மரம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரம் திண்டிவனம் சாலையில் பேரணி என்ற ஊரிலிருந்து 6 கி.மீ. தொலைவிலும், விழுப்புரம்–செஞ்சி சாலையில் நேமூர் என்ற ஊரிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் இத்திருத்தலம் அமைந்துள்ளது.*

## வரலாற்றுப் பின்னனி‘:

இத்திருக்கோயில் இராஜராஜ சோழனின் குமாரன் முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் 1012–ல் துவக்கப்பட்டு 1027–ம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது. 950– ஆண்டு பழமையான இக்கோயில் தொடர்ந்து சோழ மன்னர்களாலும், பாண்டியர், விசய நகரர், செஞ்சிநாயக்கர், மராட்டியர் ஆகிய மன்னர்களது காலத்திலும், திருப்பணிகள் செய்யப்பட்டது.

## திருக்கோயில் அமைப்பு:

இக்கோயில் இடைக்கால சோழர்களின் கட்டடக் கலைச் சிறப்புக்கு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

இராஜேந்திரசோழனின் குல குருவான சர்வசிவ பண்டிதரால் இக்கோயில் கட்டப் பட்டதாகும். இறைவன் திரு வி ராமீசுவரர் என அழைக்கப்படுகிறார். எசாலம் என இன்று அழைக்கப்படும் ஊர் பண்டை நாளில் எய்தார்–எதார் எனக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறது. வாவலூர் நாட்டு ஜனநாத சதுர்வேதி மங்கலத்தை இவ்வூர் சேர்ந்ததையும் அறிகிறோம்.



திருக்கோயில் ஒரு திருச்சுற்று உடையதாக கருவறை, அர்த்த மண்டபம், அம்மன் சன்னதி, முக மண்டபம் மற்றும் பரிவார ஆலயங்களுடன் காட்சி தருகிறது

இறைவனுக்கு முன்பு நந்தியம்பெருமானும், அதனையடுத்து பலிபீடமும்

அமைந்துள்ளது. இதன் அமைப்பில் உபானம், பத்மவரி, ஜகதி, விருத்தகுமுதம், கண்டம், கபோதகம், வாஜனம் ஆகிய உறுப்புகள் கொண்டு விரிந்த தாமரையின் மேல் அமைந்துள்ளதாக கலையழகுடன் காட்சி தருகிறது. பலிபீடத்தில் கண்டப்பகுதியில் நான்கு திசைகளிலும் உள்ள சதுரப்படையில் சங்கு ஊதும் பூதகணங்கள் காட்சி தருகின்றன.

மகாமண்டபத்தின் கிழக்குச்சுவரில் ஒன்பது துவாரங்களுடன் கூடிய கல் ஜன்னல் அமைந்துள்ளது. ஜன்னலின் சட்டத்தில் நடனமாடும் கலைஞர்கள் இருவரையும், மத்தளம் கொட்டும் கலைஞர்கள் இருவரையும் அழகிய சிற்பமாகக் காணலாம்.

கருவறைக்கு முன் உள்ள அர்த்த மண்டபத்தில் நான்கு தூண்கள் உருளை வடிவத்தில் அழகிய வேலைப்பாடுடன் சோழர்கால கலைப்படைப்பாய் மிளிர்கின்றன. அர்த்தமணடப நுழைவு வாயிலில் துவாரபாலகர் சிற்பங்கள் உள்ளன.

கருவறை விமானம் முழுவதும் கற்களாலேயே அமைந்து கற்றளியாகக் காட்சி தருகிறது. விமான அமைப்பில் உபபீடம், அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்னும் ஏழுபகுதிகளைக் கொண்டு எளிமையாக அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

தேவகோட்டங்களில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, திருமால், நான்முகன், துர்க்கை வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மேலே அமைந்துள்ள மகர தோரணம் சிற்ப வேலைப்பாடு இன்றி காணப்படுகிறது. உத்திரப் பகுதியில் காணப்படும் பூத கணங்கள் வரிசை, சிற்ப அழகுடன் காட்சி தருகிறது.

கூரையின் மேல் நான்கு மூலைகளிலும் நான்கு நந்திகள் அழகு செய்கின்றன. அர்த்தமண்டப கூரையின் மேற்பகுதியில் இரு பூத கணங்கள் தவழ்ந்த நிலையில் அமைந்துள்ளன. மழைக்காலத்தில் கூரையில் தேங்கும் மழை நீர் இதன் வாயின் வழியே வெளியேறும் நிலையில் அமைக்கப்பட்டுள்ள

சிற்ப வேலைப்பாடு அனைவரையும் கவரும் வண்ணம் அமைந்துள்ளது.

கருவறை விமானம் ஒரு தள விமானமாக வட்ட வடிவமாக அமைந்துள்ளது. கிரீவக்கோட்டத்தின் நான்கு திசைகளில் தெற்கில் வீணாதர தட்சிணாமூர்த்தியும், மேற்கில் அமர்ந்த நிலையில் திருமாலும், வடக்கில் நான்முகனும், கிழக்கில் இந்திரன் வடிவத்தையும் காணலாம். கிரீவக் கோட்டத்தின் மேல் உள்ள நாசிக்கூடுகளில் தெற்கில் ஆடவல்லான், மேற்கில் யோகநரசிம்மர், வடக்கில் நான்முகன், கிழக்கில் உமாசத்தியமூர்த்தியையும் காணமுடிகிறது. விமானத்தின் மேலே உச்சியில் மகாபத்மம் விரிந்த தாமரை மலராக அழகு செய்யும் அற்புத சிற்ப வேலைபாட்டினைக் காணலாம்.

இந்த கோயில் கருவறை சதுரவடிவுடையது, கருவறை நடுவே ஆவுடையார் ருத்திர பாகம் உருளை வடிவமாகியும் லிங்கத்தின் நெற்றியில் பிரம்மசூத்திர கோடுகளுடன் சிவலிங்கமாக, இராமநாத ஈஸ்வரர் காட்சியளிக்கிார். கருவறை விதானம் (மேல் கூரை) சதுரமாகவும், எண்பட்டையாகவும், வட்டமாகவும் உள்குவிந்த நிலையில் கூம்பு வடிவில் சிகரம் வரை குறுகிச்செல்லும் சிறப்பான விமானம் கொண்டு காட்சி அளிக்கிறது.

மகாமண்டபம் 16 தூண்களுடன் காணப்படுகிறது. மகா மண்டபத்தின் வட திசையில் தெற்கு நோக்கி அம்பாள் சன்னதி அமைந்துள்ளது. இறைவி தனது நான்கு கரங்களில் மேலிருகரங்களில் தாமரை மலர்களைத்தாங்கியும், கீழிருகரங்களில் அபய – வரத முத்திரை தாங்கி காட்சி அளித்துள்ளது.

இரு சன்னதிகளுக்கும் படிகள் மகாமண்டபத்தின் தெற்கு பகுதியில் அமைந்துள்ளது. இதற்கு அருகே தென் கிழக்குப் பகுதியில் சோழர் கால செப்பேடும் செப்புத் திருமேனிகளும் கிடைத்தது குறிப்பிடத்தக்கது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 7.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10,00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திண்டிவனம், விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திண்டிவனம், விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**தக்கார் / ஆய்வாளர்**
அருள்மிகு இராமநாதீஸ்வரர் திருக்கோயில்,
எசாலம், விக்கிரவாண்டி வட்டம்,
விழுப்புரம் மாவட்டம்.
Mobile:9629771564

# 22. அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்

விழுப்புரம் நகர்




| | | |
|---|---|---|
| இறைவன் | : | கைலாசநாதர் |
| இறைவி | : | பெரியநாயகி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*சென்னை திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் விழுப்புரம் நகரின் ஈசான்ய பாகத்தில் பழைய பேருந்து நிலையத்திலிருந்து 0.5 கி.மீ தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*தல வரலாறு:*

*சிவபெருமானிடம் பேரன்பு பூண்டவர் துருவாச முனிவர், ஒருநாள் சிவபெருமானை வழிபட்டு அர்ச்சித்த பூவொன்றைக்*

கையில் ஏந்தி வந்தார். எதிரே தேவேந்திரன் ஜராவதத்தின் மேல் ஏறிவந்தான். முனிவர் கையிலுள்ள மலரை இந்திரனுக்குக் கொடுக்க நினைத்து பூவை நீட்டினார். இந்திரன் யானை மேலிருந்தபடியே அங்குசத்தினால் பூவை வாங்கி யானையின் மத்தகத்தின் மேல் வைத்தான். வெள்ளையானை அந்த மலரை எடுத்து கீழே போட்டு காலால் மிதித்தது. துருவாசர் அதைக் கண்டு கடுஞ்சினம் கொண்டார். சிவபெருமான் திருவடியில் அர்ச்சித்த நிர்மாலியத்தை உனக்குக் கொடுத்தேன். அதை நீ அலட்சியமாக அங்குசத்தால் வாங்கி யானையில் மத்தகத்தின் மேல் வைத்தாய். மதங்கொண்ட உன் யானையும் அதை கீழே தள்ளி மிதித்தது. சிவபெருமான நிர்மாலியத்தை எளிதாக எண்ணியது உன் செல்வச் செருக்கினாலன்றோ? ஆதலால் காமதேனு, கற்பக விருட்சம், சிந்தாமணி முதலிய எல்லாச் செல்வங்களும் உன்னை விட்டு அகலக் கடவதாக என்று சாபமிட்டார். அவையெல்லாம் இந்திரனை விட்டு நீங்கி திருப்பாற்கடலைச் சேர்ந்தன. இந்திரனும் தேவர்களும் பொலிவிழந்து வருந்தினார்கள், வலிமையையும் இழந்தார்கள்.

அதையறிந்த அசுரர்கள் தேவர்களுடன் போர் புரிய வந்தார்கள். சண்டை செய்யமுடியாமல் தேவர்கள் பிரம்மதேவனுடன் சென்று திருமாலிடம் முறையிட்டார்கள். பரந்தாமனும் பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்து உண்டால் வெற்றி பெறுவீர்கள் என்றார். தேவர்கள் அசுரர்களின் துணை கொண்டு மந்திர மலையை மத்தாகவும் வாசுகியென்ற பாம்பை கயிறாகவும் கொண்டு திருப்பாற்கடலைக்



கடைந்தனர். சிவபெருமானை நினைத்தார்களில்லை. வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. அதன் கொடிய விஷத்திற்கு அஞ்சி ஓடி திருக்கயிலாயம் சென்று நந்தி தேவரிடம் தெரிவித்தார்கள். அவரும் சிவபெருமானிடம் விண்ணப்பித்தார். சிவபெருமான் தஞ்சமென்று வந்த தேவர்களை அஞ்சவேண்டாம் என்று சொல்லி தொண்டரான சுந்தரரை அந்த நஞ்சை எடுத்து வரப் பணித்தார். அவரும் அப்படியே செய்தார். பெரும் கருணைக் கடலான சிவபெருமான் அந்த கொடிய நஞ்சை உண்டு தேவர்களின் துயரத்தை நீக்கினார். உலக மக்கள் துன்பத்தைப் போக்கினார்.

நஞ்சு உண்ட பின் எம்பெருமான் இத்தலத்திற்கு வந்து மௌனமாக வீற்றிருந்தார். எல்லோரும் உணவருந்தாது இங்கு வந்து நஞ்சுண்ட கண்டனை வழிபட்டனர். துயர் உற்றோர் இன்பம் அடையும் பொருட்டு உமாதேவியாருடன் ஒரு சாமநேரம் (ஏழரை நாழிகை) சிவபெருமான் திருநிருத்தம் செய்தருளினார் என்பது வரலாறு.

## தனிச்சிறப்பு:

இக்கோயில் சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட மிகவும் பழமை வாய்ந்ததாகும். இராஜகோபுரம் மேற்குப்புறமாக அமைந்துள்ளது. நாற்பது கல்தூண்களைக் கொண்டு சோழர்கால பாணியில் மகாமண்டபமாக சிற்ப வேலைப்பாடுகளுடன் இக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது. முதலாம் இராஜராஜ சோழனால் கட்டப்பட்டு விஜயநகர மன்னர்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.



இத்திருக்கோயிலில் அமைந்துள்ள சுவாமி கிழக்கு முகமாகவும், அம்மன் மேற்கு முகமாகவும் காட்சியளிக்கின்றனர். பக்தர்களுக்கு எல்லா வளமும் செல்வமும் கிடைக்க அன்னை அருள் பாலிக்கிறாள். பெண்கள் வழிபட்டு சகல தோஷங்களும் நீங்கி நன்மைகளும் பெறுகின்றார்கள்.

### திருவிழாக்கள்:

சித்திரை மாதம் பிரம்மோற்சவம் மற்றும் திருத்தேர் உற்சவம், கிருத்திகை, சிவராத்திரி, கார்த்திகை தீபம் உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னையிலிருந்து தென் மாவட்டங்களுக்கு செல்லும் அனைத்துப்பேருந்துகளும், ரயில்களும் விழுப்புரம் வழியாக செல்கின்றன. பிற முக்கிய நகரங்களிலிருந்தும் நேரடி பேருந்து வசதி உண்டு.

### தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்,

விழுப்புரம் நகர், விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9944238917

# 23. அருள்மிகு வைகுண்டவாசப் பெருமாள் திருக்கோயில்

விழுப்புரம் நகர்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வைகுண்டவாசப் பெருமாள் |
| இறைவி | : | ஜனகவல்லி தாயார் |

*அமைவிடம்:*

*சென்னை திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் விழுப்புரம் நகரின் ஈசான்ய பாகத்தில் பழைய பேருந்து நிலையத்திலிருந்து 0.3 கி.மீ தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*தல வரலாறு:*

*முதலாம் பராந்தகனுடைய முப்பத்து மூன்றாவது ஆட்சியாண்டில் (கி.பி.940) ஊர் நடுவில் விண்ணகர் பெருமாள் கோயில் கட்டப்பெற்று திருப்பணிகளுக்காக பத்து செறுவு நிலம் விடப்பெற்றதாக இக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. அன்றைய விண்ணகர்பெருமாள் கோயில் இன்றைய வைகுண்டவாசப்பெருமாள் கோயிலாகும்.*

## வரலாற்று பின்னணி:



முதலாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் போது (கி.பி.1070–1120) இக்கோயிலுக்கு இராஜேந்திர சோழ விண்ணகராழ்வார் என்ற பெயர் வழங்கியதாக கைலாசநாதர் கோயில் கல்வெட்டு ஒன்றும் கூறுகிறது. முதலாம் இராஜேந்திர சோழனின் திருப்பணிகளும் இருந்ததால் அவன் பெயரால் கோயிலின் பெயர் வழங்கியிருக்கக்கூடும்.

15ஆம் நூற்றாண்டில் குமார உடையார் காலத்தில் விழுப்புரத்திற்கு தெற்கே பெண்ணை ஆற்றங்கரையிலுள்ள பிடாகம் என்னும் ஊரிலிருந்து 12 மான்யம் கோயிலுக்கு அளிக்கப்பட்டது. இப்போதும் பெருமாள் கோயிலின் ஆற்றுத்திருவிழாவின் போது சுவாமி பிடாகம் வரை செல்வது வழக்கத்தில் உள்ளது.

கி.பி. 1470–71 ல் ஏரி உடைந்து பெருவெள்ளத்தால் ஊரும் கோயிலும், குளங்களும் அடியோடு பாழானதையும் மீண்டும் குடியேறி, கோயில் கட்டியதையும் இக்கோயில் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. இதே கல்வெட்டு ஒன்று இவ்வூர் கைலாசநாதர் கோவிலிலும் காணப்படுகிறது.



## திருக்கோயில் அமைப்பு:

கிழக்கு நோக்கியுள்ள இக்கோயிலின் நுழைவாயில்

தென்புறம் உள்ளது. வெளிமண்டபத்தின் முன் உள்ள வீர ஆஞ்சநேயர் கோயிலைக் கடந்ததும் ஸ்ரீதேவி பூதேவியுடன் நின்ற திருக்கோலத்துடன் கம்பீரமாக காட்சியளிக்கும் வரதராஜப்பெருமாளை வழிபடலாம். அற்புத



கலை ஓவியத்திருமேனிகள் ஏழாம் நூற்றாண்டு மகா மண்டபத்தில் ஆச்சார்யார்கள், பன்னிரு ஆழ்வார்கள், லட்சுமிநாராயணர், உடையவர், தேசிகர் ஆகியோரின் கல் திருமேனிகள் கருணை சாதிக்கின்றனர்.

கருவறையில் வைகுண்டவாசப்பெருமாள் ஸ்ரீதேவி பூதேவியுடன் அமர்ந்த நிலையில் அருளாட்சி புரிகிறார். சோழர் காலத்துச் சிற்பக்கலையே உயிர் பெற்று பேசுவதைப் போல எழிற்களஞ்சியமாக விளங்கும் இத்திருமேனிகளின் ஒவ்வொரு அணுவிலும் அழகு சுடர்விட்டு ஒளிர்கிறது. கருவறையின் பின்புறம் சக்கரத்தாழ்வார் கோயிலும், வடச்சுற்றில் ஆண்டாள் திருக்கோயிலும் கருவறைக்கு நேரெதிரில் பெரிய திருவடி திருவுருவங்களும் காட்சியளிக்கின்றன.

## தனிச்சிறப்பு:

ஜனகவல்லி தாயார் சன்னதியை இந்நகரத்தில் வாழ்ந்த கிருஷ்ணவேங்கடராம நாயக்கர் ஸ்ரீமுக ஆண்டு மார்கழி மாதம் 2ந்தேதி (15.12.1873)ல் கட்டத்துவங்கி கி.பி.1874ல் முடித்துள்ளார். தாயார் கோயில் நுழைவாயில் அருகே சுமார் 1200 ஆண்டுகளுக்கு முற்பட்ட பல்லவர்கால கொற்றவை இருக்கிறது. சக்தி நிரம்பிய இந்தக் கொற்றவையை திருமணம் ஆகாத பெண்கள் நோன்பிருந்து, செவ்வாய், வெள்ளி, ஞாயிற்றுக்கிழமை ராகுகால நேரத்தில் எலுமிச்சம் பழத்தில் நெய் விளக்கேற்றி வழிபாடு செய்தால் விரைவில் திருமணம் நடைபெற்று நல்வாழ்வு பெறுவர். கைமேல் பலன்தரும் கண்கண்டதேவி இவள்.

### திருவிழாக்கள்:

வைகுண்ட ஏகாதசி சொர்க்கவாசல் திறப்புவிழா, ஸ்ரீராமநவமி, அனுமத் ஜெயந்தி போன்ற விழாக்கள் இத்திருக்கோயிலில் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சென்னையிலிருந்து தென் மாவட்டங்களுக்கு செல்லும் அனைத்துப்பேருந்துகளும், ரயில்களும் விழுப்புரம் வழியாக செல்கின்றன. பிற முக்கிய நகரங்களிலிருந்தும் நேரடி பேருந்து வசதி உண்டு.

### தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு வைகுண்டவாசப்பெருமாள்

திருக்கோயில், விழுப்புரம் நகர்.

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9944238917

# 24. அருள்மிகு வீரவாழியம்மன் திருக்கோயில்

விழுப்புரம் நகர்



| இறைவி | : | வீரவாழியம்மன் |
|---|---|---|

*அமைவிடம்:*

சென்னை – திருச்சி நெடுஞ்சாலையில் உள்ள விழுப்புரம் நகரின் மையப்பகுதியில் விழுப்புரம் – பாண்டி தேசிய நெடுஞ்சாலையில் பழைய பேருந்து நிலையம் அருகில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### தனிச்சிறப்பு:

*மிகவும் பழமை வாய்ந்த திருக்கோயில் 200 ஆண்டுகளுக்கும் முற்பட்டதாகும். மிகவும் பிரசித்தி பெற்ற பிரார்த்தனை தலமாகும். இந்த அம்மன் தன்னை நாடி வந்து வேண்டிய பக்தர்களுக்கு குறைகளை நீக்கி வேண்டுவோருக்கு வேண்டிய வரமளிக்கும் மகாசக்தியாக அருளாட்சி செய்கிறாள். என்றுமே மூடப்படாத சன்னிதானம் கொண்டது இத்திருக்கோயில். திருமணமாகாத பெண்கள், தோஷம் நீங்க வேண்டி இத்திருக்கோயிலில் சுற்றுப்பிரகாரத்தில் பரிவார தேவதையாக அமைந்துள்ள அருள்மிகு துர்க்கையம்மனுக்கு நெய் விளக்கு ஏற்றி பயனடைந்து வருகின்றனர்.*

### திருவிழாக்கள் :

*ஆடிமாதத்தில் வெள்ளிக்கிழமைகளில் ஆடித்திருவிழா வெகு விமரிசையாக நடத்தப்படும். அப்போது பக்தர்களுக்கு சாகை வார்த்தல் திருவிழாவும் நடத்தப்படும். மேலும் சித்ரா பௌர்ணமி, நவராத்திரி லட்சார்ச்சனை போன்ற விழாக்களும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஒவ்வொரு வெள்ளிக் கிழமையிலும் அம்பாள் கோயிலைச் சுற்றி புறப்பாடு செய்யப்படும்.*

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை திருக்கோயில் திறந்திருக்கும்.*

## போக்குவரத்து வசதி

சென்னையிலிருந்து தென் மாவட்டங்களுக்குச்செல்லும் அனைத்துப்பேருந்துகளும், ரயில்களும் விழுப்புரம் வழியாக செல்கின்றன. பிற முக்கிய நகரங்களிலிருந்தும் நேரடி பேருந்து வசதி உண்டு.

## தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்
அருள்மிகு வீரவாழியம்மன் திருக்கோயில்
விழுப்புரம் நகர்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile:9944238917

# 25. அருள்மிகு வாலீஸ்வரர் திருக்கோயில்

கோலியனூர், விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வாலீஸ்வரர் |
| இறைவி | : | பெரியநாயகி |
| தலவிருட்சம் | : | வன்னி |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் 6 கி.மீ. தொலைவில் உள்ள கோலியனூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*வரலாற்று பின்னனி:*

*இத்திருக்கோயில் இராமாயணக் காலத் திருக்கோயில் ஆகும். சுமார் 1400 வருடத்திற்கு முன் அதாவது (6–ஆம் நூற்றாண்டுக்கு*

மேல்) நரசிம்ம பல்வலர் காலத்திலும் அதன் பின்னர் 995–ல் முதலாம் இராஜராஜசோழரின் காலத்திலும், அதன் பிறகு 1347–ல் மன்னர் விஜயவர்மன் காலத்திலும் திருப்பணி செய்யப்பட்டதாகும். கருவறையில் உள்ள சுவாமி வாலியினால் பூஜிக்கப்பெற்றதனால் வாலீஸ்ரமுடைய நாயனார் என்றும் பிறகு மறுவி வாலீஸ்வரர் என்றும் அழைக்கப்படுகிறார்.

### திருக்கோயில் அமைப்பு:

இவ்வாலயத்தில் ஸ்ரீ விநாயகர் நிருதி பாகத்திலும், சிவபெருமான் மேற்கு நோக்கியும், அம்பாள் தெற்கு நோக்கியும், ஸ்ரீ ஆறுமுக சுவாமி கோவில் நடுபாகத்திலும், இவ்வாலயத்தில் தென்முகக் கடவுளான ஸ்ரீ தட்சணாமூர்த்தி சன்னதியும், அச்சன்னதியில் ஐய்யனார் மற்றும் சப்தமாதா ஆலயப்பரிகாரத்திற்காக அமைக்கப்பெற்ற சிறப்பான கோயிலாகும். ஸ்தல விருக்ஷம் வன்னிமரத்தோடு ஸ்ரீசனீஸ்வர பகவான் இந்தியாவிலேயே வேறு எங்கும் இல்லாதவகையில் ஈசான்யபாகத்தில் தெற்கு முகமாக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளார்.

### தனிச்சிறப்பு:

இத்திருக்கோவிலில் 2 1/2ஆண்டுக்கு ஒருமுறை சனிப்பெயர்ச்சி மிகவும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. மேலும் சனி பகவானுக்கு மாதா மாதம் ரோகிணி நட்சத்திரம் ஹோமமும் பிரதி வாரம் சிறப்பு அபிஷேகமும், தீபாராதனையும் நடைபெறுகிறது.

சனிபகவான் மிகவும் சிறப்புப்பெற்றவர். வேண்டியவர்களுக்கு வேண்டும் வரம் அளித்து அவர்களுக்கு ஏற்படும் துன்பத்தில் இருந்து விடுவித்து அவர்களுக்கு பல நன்மைகளையும் செய்து வருகிறார். சனிபகவானின் இன்னல்களால் பாதிக்கப்பட்டவர்கள் இவ்வாலயத்தில் தொடர்ந்து 9–வாரம் சனிபகவானுக்கு விளக்கேற்றி வழிபாடு செய்தால் அவர்களின் வாழ்க்கை வளம்பெற பகவான் அருள்பாலிக்கிறார்.

### திருவிழாக்கள்:

$2\frac{1}{2}$ ஆண்டுகளுக்கு ஒருமுறை சனிப்பெயர்ச்சி விழா சிறப்பாக நடைபெறுகிறது. மகாசிவராத்திரி, ஆனித்திருமஞ்சனம், நவராத்திரி ஆகிய உற்சவங்களும் நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து அதிக அளவில் பேருந்துகள் உள்ளன.

### தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு வாலீஸ்வரர் திருக்கோயில்

கோலியனூர், விழுப்புரம் வட்டம் (ம) மாவட்டம்.

Mobile: 9944238917

# 26. அருள்மிகு ஜகன்னாதீசுவரர் திருக்கோயில்

வளவனூர், விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | ஜகன்னாதீசுவரர் |
| இறைவி | : | அபிராமி அம்பாள் |
| தலவிருட்சம் | : | வன்னிமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் பாண்டிச்சேரி செல்லும் சாலையில் வளவனூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*தனிச்சிறப்பு:*

*பிரகாரத்தில் பரிவார ஆலயங்களுடன் கூடிய பழமையான திருக்கோயில். சித்திரை வருடப்பிறப்பு முதல் 7 நாட்களில் சுவாமி, அம்மன், விநாயகர், முருகன் ஆகிய இறை உருவங்கள் மீது சூரிய ஒளி நேரடியாக விழுகிறது.*

முதலாம் இராசேந்திரசோழன், முதலாம் குலோத்துங்க சோழன் கல்வெட்டுக்கள் இங்கு உள்ளன. இவ்வூரின் தென்மேற்கே சிறப்பு மிக்க லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் உள்ளது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து அதிக அளவில் பேருந்துகள் உள்ளன.

## தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


### தொடர்பு முகவரி

**தக்கார் / ஆய்வாளர்**

அருள்மிகு ஜகன்னாதீசுவரர் திருக்கோயில்

வளவனூர், விழுப்புரம் வட்டம் (ம) மாவட்டம்.

Mobile: 9751998775

# 27. அருள்மிகு கரையேறவிட்ட பாடலீஸ்வரர் திருக்கோயில்

குமாரகுப்பம், விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | பாடலீஸ்வரா் |
| இறைவி | : | பெரிய நாயகி |
| தலவிருட்சம் | : | பாதிரி மரம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் பாண்டிச்சேரி செல்லும் வழியில் வளவனூா் – குமாரகுப்பத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## திருக்கோயில் அமைப்பு:

பாடலீஸ்வரர் திருக்கோயிலில் ஈஸ்வரன் சன்னதியும், அம்பாள் சன்னதியும் தனித்தனியாக விளங்குகின்றன.

## தனிச் சிறப்பு:

இத்திருக்கோயிலில் சனிபகவான் தனி சன்னதி கொண்டு அமைந்துள்ளதால் இரண்டரை ஆண்டுகளுக்கு ஒருமுறை சனிப்பெயர்ச்சி விழா சிறப்பாக நடைபெறுகிறது. பிரதோஷ காலங்களில் சிவபெருமானுக்கும் நந்தீஸ்வரருக்கும் அபிஷேகமும் சிறப்பு வழிபாடும் செய்யப்பட்டு வருகிறது.

## திருவிழாக்கள்:

ஆனித்திருமஞ்சனம், ஆடி வெள்ளி, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, தீபாவளி உற்சவம், திருக்கார்த்திகை தீபம், தனுர் மாதம், திருவாதிரைத் திருநாள், மஹா சிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்றவை இங்கு நடைபெறும் முக்கிய உற்சவமாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து அதிக அளவில் பேருந்துகள் உள்ளன.

## தங்கும் வசதி

விழுப்புரம் நகரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு கரையேறவிட்ட பாடலீஸ்வரர் திருக்கோயில்,

குமாரகுப்பம், வளவனூர்.

விழுப்புரம் வட்டம் (ம) மாவட்டம்.

Mobile:9944238917

# 28. அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்

பூவரசன்குப்பம், விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு இலட்சுமி நரசிம்மர் |
| இறைவி | : | அமிர்த வல்லி தாயார் |
| தீர்த்தம் | : | சக்கர தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | நெல்லி |
| ஆகமம் | : | பாஞ்சராத்திரம் |

## அமைவிடம்

*இத்திருக்கோயில் விழுப்புரம் நகரத்தில் இருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் வளவனூரில் இருந்து தெற்கே சிறுவந்தாடு வழியாக 10 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.*

### தல வரலாறு:



பகவான் நரசிம்மர் அகோபிலத்தில் இரண்யனை அழித்தபிறகு உக்கிரம் தணியாமல் அலைந்தார். இரண்யனின் கொடுமைக்கு பயந்து காடுகளிலும், மலைகளிலும் ஒளிந்து தவமிருந்த முனிவர்கள் நரசிம்மரின் தரிசனம் கிடைக்கவேண்டினர். அப்படி காட்சியளித்த தலம் இது.

நவக்கிரகங்களில் சூரியன் மையமாக அமைந்திருப்பது போல் அஷ்ட நரசிம்ம திருத்தலங்களுள் பூவசரங்குப்பம் மையமாக அமைந்துள்ளது.

பழங்கால கோயில்களான பரிக்கல், ஸ்ரீஇலட்சுமி நரசிம்மர் கிழக்கு திசையை நோக்கி அமர்ந்தருளியுள்ளார். பூவரசன்குப்பம் ஸ்ரீஇலட்சுமிநரசிம்மரும் கிழக்கு நோக்கி அமர்ந்தருளியுள்ளார். சிங்கிரிகோயில் (உக்ர) ஸ்ரீஇலட்சுமி நரசிம்மர் இவ்விரு கோயில்களையும் பார்க்கும்வண்ணம் மேற்கு திசையை நோக்கி உள்ளார். மேலும், இம்மூன்று நரசிம்மர் திருத்தலங்களுள் ஒரே நேர்கோட்டில் அமைந்திருப்பது சிறப்பான அம்சமாகும்.



இம்மூன்று கோயில்களும்



கி.பி. 14–15 ஆம் நூற்றாண்டில் விஜய நகர ஆட்சிகாலத்தில் ஒரே அரசனால் கட்டப்பட்டு குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளன என்பது கல்வெட்டு மற்றும் ஆய்வு பூர்வமான உண்மையாகும். அந்த அரசனின் பிரார்த்தனைகள் பலித்து நன்மை அளித்தது போல் நேர்கோட்டில் அமைந்துள்ள இம்மூன்று திருத்தலங்களையும் ஒரே நாளில் தரிசனம் செய்வோருக்கு நலம் பல பயக்கும், நன்மைகள் விளையும், தீமைகள் அழியும் என்பது ஆன்றோர்களின் அருள்வாக்கு.

## வரலாற்று பின்னனி

இத்திருக்கோயில் 1000ஆண்டுகளுக்கு முன்பு நரசிம்ம பல்லவ மன்னனால் கட்டப்பட்டதாக அறியப்படுகிறது. விஜயநகர பேரரசு காலத்தில் பூவரசன் என்னும் சிற்றரசன் மூலம் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளது

இவ்வூர் பூவரசன் என்னும் மன்னன் ஆட்சிபுரிந்து வந்ததால் ‘பூவசரன்குப்பம்’ என பெயர் பெற்றதாக தெரியவருகிறது.

கி.பி.3–ஆம் நூற்றாண்டில் இறைவன் நரசிம்மமூர்த்தியாக தூணில் தோன்றியதால் ஒரு தூணையே நரசிம்மாக வழிபாடு செய்து வந்துள்ளனர். அதன் பின் பல்லவர்கள் நரசிம்மருக்கு கோயில்கட்டி சிலை பிரதிஷ்டை செய்துள்ளனர்.

## திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயிலில் தாயார், ஆண்டாள் சன்னதிகள் தனியாக அமைந்துள்ளது. இங்குள்ள அமிர்தவல்லி தாயார் அமிர்தத்திற்கு இணையான பலனை கொடுக்கவல்லவர். ஆகையால் அமிர்தபல வல்லி என்பது மறுவி அமிர்தவல்லி தாயார் என்று அழைக்கப்படுகிறார்.



பொதுவாக இலட்சுமி நரசிம்மர் கோயில்களில் தாயார் மட்டுமே நரசிம்மரை ஆலிங்கனம் செய்த நிலையில் காட்சி தருவார். ஆனால் இத்திருக்கோயிலில் நரசிம்மம் இலட்சுமியை ஆலிங்கனம் செய்த நிலையில் அருள்பாலிக்கிறார்.

மேலும் இத்திருக்கோயில் மண்டபத்தில் உள்ள புடைப்பு சிற்பத்தில் ஒரு பீடத்தின் மீது திருநாமம் இன்றி வில், அம்புடன் சங்கு சக்கரம் மட்டும் தாங்கிய இலெட்சுமி நரசிம்மர் உருவம் இருப்பது புதுமையானதாகும்.

இத்திருக்கோயிலில் திருப்பணிக்காக தோண்டப்படும்போது இலட்சுமி நரசிம்மரின் உற்சவர் விக்ரகம் ஆண்டாள் சன்னதியின் கீழ்கண்டு எடுக்கப்பட்டதாக தெரியவருகிறது. இந்த உற்சவர் விக்ரகமும் அகோபிலத்தில் உள்ள உற்சவர் விக்ரகமும் ஒரே தோற்றத்தையும் காலத்தையும் கொண்டிருக்கின்றன. எனவே, இரண்டு திருமேனிகளும் ஒரே நேரத்தில் வார்க்கப்பட்டவையாக இருக்கலாம் என கருதப்படுகிறது. மேலும், அகோபிலத்தில் திருக்கோயிலினை எழுப்பிய மன்னரே பூவரசங்குப்பம் திருக்கோயிலை கட்டியிருப்பதால் அதேபோன்ற உற்சவரை இங்கும் ஸ்தாபித்திருக்கலாம் என நம்பப்படுகிறது.

### தனிச்சிறப்பு:

நரசிம்மர் இரண்யனை அழித்து பிரகலாதனுக்கு காட்சி கொடுத்த இடம் ஆந்திராவில் அகோபிலம் என அழைக்கப்படுகிறது. பூவரசங்குப்பத்தில் முனிவர்களுக்கு

காட்சியளித்தமையால் இவ்விடம் தென் அகோபிலம் என அழைக்கப்படுகிறது. முனிவர்களின் வேண்டுகோளுக்கிணங்க நரசிம்மர் இத்திருத்தலத்தில் மகாலட்சுமியை தனது இடது மடியில் அமர்த்தி காட்சயளிக்கிறார். நரசிம்மரின் உக்கிரத்தினை குறைக்கும் பொருட்டு மகாலட்சுமி நரசிம்மரை ஒரு கண்ணாலும், பக்தர்களை மறுகண்ணாலும் பார்ப்பதுபோல் காட்சியளிக்கிறார். உலகில் ஆணுக்குப்பெண் சமம் என்பதைப்பறைசாற்றும் விதமாக இத்திருக்கோயில் நரசிம்மர் மற்றும் தாயார் மகாலட்சுமி விக்ரகங்கள் சம உயரத்தில் அமைந்துள்ளன.

## திருவிழாக்கள்

வாரந்தோறும் சனிக்கிழமை சிறப்பு தரிசனம், மாதாந்திர சுவாதி நட்சத்திர உற்சவம், பிரம்மோற்சவம் (திருத்தேரோட்டம்), நரசிம்ம ஜெயந்தி, விசாக உற்சவம், ஆனித்திருமஞ்சனம், ஆடிப்பூரம், கிருஷ்ணஜெயந்தி, நவராத்திரி, தீபாவளி சிறப்பு அபிஷேகம், மகாவிஷ்ணு தீப அலங்காரசேவை, வைகுண்ட ஏகாதசி, பொங்கல் உற்சவம் (தென்பெண்ணை ஆற்றில் 5–ம் நாள் தீர்த்தவாரி உற்சவம்), மாசி மாதம் பௌர்ணமியன்று தீர்த்தவாரி உற்சவம் ஆகிய திருவிழாக்கள் நடைபெறுகின்றன.



### அன்னதான திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதான திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.30 மணி வரை, மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி

திருக்கோயில், பூவரசன்குப்பம், விழுப்புரம் மாவட்டம்.

Website: www.poovarasankuppamnarashimartemple.tnhrce.in

Mobile: 9944238917

# 29. அருள்மிகு நாகேஸ்வர சுவாமி திருக்கோயில்

பூவரசன்குப்பம், விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு நாகேஸ்வரர் |
| இறைவி | : | அருள்மிகு சிவலோக நாயகி |
| தீர்த்தம் | : | தென்பெண்ணையாறு (தக்ஷிணபினாகினி) |
| தலவிருட்சம் | : | வன்னி |
| ஆகமம் | : | காமிகம் |
| இசைக்கருவி | : | நாதஸ்வரம் |

*அமைவிடம்*

*இத்திருக்கோயில் விழுப்புரம் நகரத்தில் இருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் வளவனூரில் இருந்து தெற்கே சிறுவந்தாடு வழியாக 10 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு



பல்லவ மன்னனாகிய சிம்மவர்மன் பல இடங்களில் சைவ, வைணவ திருக்கோயில்களை கட்டி வந்தபோது காடுகளையும், மலைகளையும் சீர்செய்து அங்கிருந்த நாகங்களைக் கொன்று குவித்தான். அவ்வாறு செய்ததன் விளைவாக அவனுடைய வம்சத்தினர்களுக்கும் அவனுக்கும் நாகதோஷம் ஏற்பட்டு அவதியுற்றதனால் தென் பெண்ணை நதிக்கரையில் தவம் கொண்டிருந்த சிவஹரி என்ற முனிவரை சந்தித்து தனக்கேற்பட்ட இதற்கு பரிகாரம் என்ன என்று கேட்க இந்த ஆற்றங்கரையின் ஓரத்தில் உள்ள ஊரில் (பூவரசன் குப்பம்) ஈசான மூலையில் ஒரு புற்று இருப்பதாகவும் அதனுள் சுயம்புவாக ஒரு சிவலிங்கம் இருப்பதாகவும் அதனை ஒரு நாகம் பூஜித்து வருவதாகவும் கூறி நீ சென்று அந்த நாகத்தை வழிபட்டு அது பூஜைசெய்து வரும் சிவலிங்கத்தை வெளியில் எடுத்து அதற்காக ஒரு சிவாலயத்தை கருங்கல்லாலேயே அமைத்து கோயில்களுக்கு குடமுழுக்கு செய்யும்போது இந்த சிவாலயத்துக்கு சேர்த்து குடமுழுக்கு செய்தால் உனக்கும், உன் சந்ததிக்கும் ஏற்பட்ட நாக தோஷங்கள் நீங்கும் என்றும் பரிகாரத்தை எடுத்துரைத்தார்.

அவ்வாறே அந்த பல்லவமன்னன் அந்த இடத்திற்குச்சென்று அந்த நாகத்தை மனமுருகி வழிபட அந்நாகம் வெளியே



வந்து என்னுடைய இடத்தை நீ ஆக்ரமித்து என்னால் பூஜிக்கப்படும் என் மகாபிரபுவுக்கு ஆலயம் எழுப்ப வேண்டுமானால் அவ்வாறு எழுப்பும்போது என்னுடைய பெயரையும் சேர்த்து அந்த பிரபுவிற்கு நாகேஸ்வரர் என்ற பெயர் சூட்டி கோயிலுக்கு குடமுழுக்கு செய்ய வேண்டும் என வேண்டுகோள் விடுக்க அம்மன்னனும் அதற்குச்சம்மதித்து வாக்குக்கொடுத்தான்.

அதன்பின் அந்நாகம் தன் குட்டிகளுடன் அப்புற்றைவிட்டு வெளியேறியது. அந்த புற்றை அகற்றிய அம்மன்னன் சுயம்புவாக உருவாகிய சிவலிங்கம் ஆவுடையார் மட்டும் அப்புற்றில் இருப்பதை கண்டு வியப்புற்றான். அந்த சிவலிங்கத்தை எடுத்து அது இருந்த அதே இடத்திலேயே பிரம்ம பாகம், விஷ்ணு பாகம் ஆகியவற்றைச்செய்து பிரதிஷ்டை செய்து






பிரம்மாண்டமான கருங்கல்லால் ஆன கோயிலையும் கட்டினான். பின்பு இதனைச்சார்ந்து அவனால் கட்டப்பட்ட 108 வைணவ திருக்கோயில்களுக்கும், 108 சைவ கோயில்களுக்கும் ஒரே நாளில் ஒரே லக்னத்தில் மஹா கும்பாபிஷேகம் முடிந்த அன்று இரவு அந்த நாகமானது அந்த சிவலிங்கத்தை சுற்றிக் கொண்டு காட்சியளித்தது. மன்னன் நாகத்திடம் சிவனைத் தரிசிக்க வரும் பக்தர்களுக்கு பயம் ஏற்படாமல் இருக்கவும் அந்த நாகத்திற்கு எந்தவித இடையூறுகள் ஏற்படாமல் இருக்கவும் பகல் நேரங்களில் எவர் கண்ணிலும் காணக்கிடைக்கக்கூடாது என வேண்டினான். அதனால் இரவு நேரங்களில் மட்டும் அந்நாகம் வந்து சிவலிங்கத்தை பூஜித்து வந்தது. பின்பு அம்மன்னன் தனக்கு ஏற்பட்ட நன்மையானது நாகேஸ்வரரை தரிசிக்கும் அனைத்த பக்தர்களுக்கும் ஏற்பட வேண்டும் என வேண்ட அம்முனிவரும் அவ்வாறே நிகழ வரம் கொடுத்துள்ளார். ஆதலால் இன்றும்





இந்த சிவனை தரிசிப்பவருக்கு நாகதோஷம் மற்றும் காலசர்ப்பதோஷம் ஆகியவை நீங்கி வருவது உண்மை.

## வரலாற்றுப்பின்னணி

கால மாறுதல்களினால் இத்திருக்கோயில் சிதைவுற்று அழிந்த நிலையில் விஜயநகர மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் மீண்டும் புதுப்பித்து 1645ம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் நடத்தப்பட்டதாக கூறப்படுகிறது. அச்சமயம் விஜய நகர மன்னர்கள் சண்முகம், பைரவர், சண்டிகேஸ்வரர், பாலகணபதி, தட்சிணாமூர்த்தி, வரசித்தி விநாயகர், நந்தீஸ்வரர் ஆகியவற்றை பிரதிஷ்டை செய்ததாகவும் கூறப்படுகிறது.

சண்முகருடன் பிரதிஷ்டை செய்யப்பட்ட வள்ளி, தெய்வானை ஆகியவற்றின் மூல விக்ரஹங்கள் கி.பி. 1700–ல் கொள்ளையடிக்கப்பட்டு அதன்பின் வள்ளியினுடைய மூலவிக்ரகங்கள் மீட்கப்பட்டு தெய்வானை விக்ரஹம் புதிதாக செய்யப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.



## திருக்கோயில் அமைப்பு

இந்தக்கோயில் மூலஸ்தானம் அர்த்தமண்டபம், மஹா மண்டபம், சுற்று மதில் சுவர் ஆகியவற்றுடன் அமைக்கப்பட்டுள்ளது.

### தனிச்சிறப்பு

இத்திருக்கோயில் ராகு கேது தோஷ பரிகார பூஜை செய்வதற்கு உகந்தது. ஒவ்வொரு தமிழ் மாதம் கடைசி ஞாயிற்றுக்கிழமை அன்று பரிகாரபூஜை நடைபெறுகிறது. இக்கோயில் ராகு கேது பரிகாரஸ்தலமான நடுநாட்டு நாகேஸ்வரம் என்ற பெயருடன் உள்ளது.

### திருவிழாக்கள்

ராகு கேது பெயர்ச்சியின் போது மஹாசண்டியாகம் மற்றும் லட்சார்ச்சனை சிறப்புடன் நடைபெறுகிறது. ஒவ்வொரு வருடமும் மஹாசிவராத்திரி பூஜை அன்னாபிஷேகம் நடைபெறுகிறது. கார்த்திகை மாதம் ஒவ்வொரு திங்கட்கிழமை அபிஷேகம் மற்றும் அர்ச்சனைகள் நடைபெறுகிறது. உத்திராயன புண்ணியகாலத்தில் தை மாதம் 5ம் தேதி அன்று ஆற்றுத்திருவிழா தீர்த்தவாரி, சுவாமி வீதிஉலா நடைபெறும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**
**பரம்பரை அறங்காவலர்**
அருள்மிகு நாகேஸ்வர சுவாமி திருக்கோயில்,
பூவரசன்குப்பம், விழுப்புரம் மாவட்டம்
Mobile: 9442010834

# 30. அருள்மிகு மகான் ஸ்ரீ படே சாயுபு திருக்கோயில்

சின்னபாபு சமுத்திரம், விழுப்புரம் வட்டம்,




| | | |
|---|---|---|
| இறைவன் | : | படே சாயபு |
| தலவிருட்சம் | : | மகிழம் |
| இசைக்கருவி | : | தும்புரு வீணை |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் கண்டமங்கலம் ரயில்வே கேட்டிற்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் சின்னபாபு சமுத்திரம் என்னும் கிராமத்தில் சிவத்திரு படேசாயபு திருக்கோயில் ஜீவசமாதி அமைந்துள்ளது.*

## தல வரலாறு:

இத்தலத்தில் முஸ்லிம் சமுதாயத்தை சேர்ந்த மகான் படே சாயபு வாழ்ந்து வந்தார். தீராத நோயால் துன்பப்படும் நோயாளிகள் இத்திருக்கோயிலில் உள்ள மகிழ மரத்தை வேகமாகச்சுற்றிவந்து களைத்து விழுந்தவுடன் மகான் படேசாயுபு இந்த நோயாளிகளை தன் கருணைப் பார்வையால் உற்று நோக்குவார். உடனே நோய் தீர்ந்த மகிழ்ச்சியில் அவர்கள் ஆனந்தக் கூத்தாடுவார்கள். இவ்வாறு ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மத ஒருமைப்பாட்டைக்காக்கும் சித்த புருஷரே மகான் படேசாயுபு ஆவார். இவர் நோயாளிகளுக்கு விபூதி கொடுத்தே நோய்களை பறந்தோடச் செய்வார்.

இமயமலையின் அடிவாரத்தில் சுமார் 2000 அடி ஆழத்தில் புதைந்திருந்த நிஷ்டதர்யம் எனப்படும் ஒளிபடாத கல்லை இறையருள் வழிகாட்டுதலால் இவர் தொட்டு அழகிய அருணாச்சலேஸ்வரர் லிங்கமாக உருப்பெறச் செய்துள்ளார்.

ஒருநாள் படேசாயுபு குழந்தைகளை அழைத்து ஒரு பெரிய குழியை தோண்டச் செய்தார். அதில் தான் இறங்கியவுடன் மண் கொண்டு குழியை மூடச் செய்தார். குழந்தைகளும் இதை விளையாட்டாக எண்ணி குழியை மூடினர். நெடு நேரமாகியும் குழியிலிருந்து சிவத்திரு படேசாயுபுவின் சப்தம் கேட்காமையால் குழந்தைகள் அழத் தொடங்கினர். அப்போது குழியிலிருந்து சிவத்திரு படேசாயுபின் கரம் மட்டும் வெளி வர அவர் கையில் பல வண்ணங்களில் மிட்டாய்கள் இருந்தன. குழந்தைகள் மிட்டாய்களை எடுத்துக் கொண்டு ஓடி ஊர் மக்களுக்கு இந்த நிகழ்ச்சியைச்சொன்னார்கள். இவ்வாறாக பரிணமித்ததே சிவத்திரு படேசாயுபுவின் ஜீவசமாதியாகும்.

## தனிச்சிறப்பு:

கொடிய தொற்று நோய்கள், தீராத வியாதிகள் போன்றவற்றால் அவதிப்படுவோர் இந்த மகானின் ஜீவசமாதியை செவ்வாய், வியாழன் மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் தரிசனம் செய்து

இயன்ற அளவு அன்னதானம் செய்வதால் கேன்சர், காசநோய், தொழுநோய் போன்ற கடுமையான நோய்கள் நீங்கி நலம் பெறுகிறார்கள். இத்திருக்கோயிலில் சைவ முறைப்படி விபூதியும், வைணவ முறைப்படி துளசி தீர்த்தமும், முஸ்லீம் முறைப்படி சந்தனமும், மயிலிறகு கொண்டு மந்திரிப்பதுமாக சர்வசமய ஆகமமுறைப்படி பூஜைகள் நடந்து வருகிறது.

### திருவிழாக்கள்:

மாசி மாதத்தில் வரும் மகம் நட்சத்திரத்திற்கு முன்வரும் ஆயில்யம் நட்சத்திரத்தில் மகான் படேசாயுபுவின் குருபூஜைவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. இந்த ஜீவசமாதியின் அருகில் அமைந்துள்ள திரௌபதி அம்மன் கோயிலில் நெருப்பு மிதிவிழா ஆண்டு தோறும் சித்திரை மாதம் நடைபெறும் இவ்விழாவில் மகான் படேசாயுபுவின் உத்தரவு பெற்ற பின்னரே முதலில் நெருப்புக்குழியில் அணில் ஒன்று இறங்கும். அதன் பின்னரே ஆயிரக்கணக்கான பக்தர்கள் தீயில் இறங்குவார்கள். இந்த அதிசயம் இன்று வரை நடந்து வருகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கண்டமங்கலத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரம், பாண்டிச்சேரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு மகான் படே சாயபு திருக்கோயில்

சின்ன பாபு சமுத்திரம், விழுப்புரம் வட்டம் (ம) மாவட்டம்.

Mobile: 9443251012

# 31. அருள்மிகு மீனாட்சி சொக்கநாதசுவாமி திருக்கோயில்

மிட்டாமண்டகப்பட்டு, விழுப்புரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | மீனாட்சி சொக்கநாதர் |
| இறைவி | : | மீனாட்சியம்மன் |
| தீர்த்தம் | : | பெண்ணையாறு |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து பாண்டிச்சேரி செல்லும் சாலையில் மதகடிப்பட்டிலிருந்து பாக்கம் செல்லும் போது 4 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## வரலாற்று பின்னனி:

இத்திருக்கோயில் முதற்கட்டமாக கற்கோயிலாகவும் இறைவன் கிழக்கு முகமாகவும் இறைவி தெற்கு முகமாகவும் எழுந்தருளிப்பண்ணி பாண்டிய மன்னர்களால் கட்டப்பட்டுள்ளது. குறிப்பேடுகள் ஏதும் இல்லாதிருப்பினும் கோயில்கள் அமைப்பு சிற்பங்களின் பாணி ஆகியவற்றை ஆராயும்போது பாண்டிய மன்னர்களால் கட்டப்பட்டது என்பது உறுதியாகிறது. இதர நடுநாட்டு மன்னர்களின் காலத்தில் பல கட்டமாக திருப்பணிகள் செய்யப்பட்டு இறைவிக்கு தனிக்கோயில் கட்டுவித்து தற்போதுள்ள நிலைக்கு விரிவடைந்து உள்ளது. கோயிலின் பூஜை முறைகள் மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலை ஒத்து இருப்பதும் இதற்குச்சான்று, பிரதான கணபதி சன்னதியில் இரட்டைப் பிள்ளையார் பிரதிஷ்டை செய்து இருப்பது மிகவும் முக்கியமான ஒன்றாகும். மேலும் கிராமத்திற்கு மேற்புறம் அம்பலவாணர் அரூபமாக பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ளதாக நம்பப்படுகிறது. இந்தக்கோயில் மிகவும் தொன்மையானதாகும்,




## திருக்கோயில் அமைப்பு:




திருக்கோயிலில் இறைவன் கிழக்கு முகமாகவும், இறைவி தெற்கு நோக்கியும் அருள்பாலிக்கின்றனர். இது ராஜகோபுரம் உள்ள கற்றளி திருக்கோயிலாகும்.

## திருவிழாக்கள்:




சித்ரா பௌர்ணமியை ஒட்டிய 10 நாட்கள் சிறப்புடைய திருவிழா நாட்களாகும். மற்றும் ஆனித்திருமஞ்சனம், திருக்கார்த்திகை, நவராத்திரி முதலிய திருவிழாக்கள் சிறப்பான முறையில் நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

விழுப்புரத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

விழுப்புரத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு மீனாட்சி சொக்கநாதசுவாமி
திருக்கோயில், மிட்டமாண்டகபட்டு.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile:9443567606

# 32. அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில்

சிங்கவரம், செஞ்சி வட்டம்




| | | |
|---|---|---|
| இறைவன் | : | அரங்கநாதர் |
| இறைவி | : | அரங்கநாயகி |
| தீர்த்தம் | : | வராக நதி |
| தல விருட்சம் | : | எலுமிச்சை |

## *அமைவிடம்:*

*செஞ்சியிலிருந்து செவலப்புரை வழியாக மேல்மலையனூர் செல்லும் சாலையில் 6 கிலோ மீட்டர் தொலைவில் மலையின் மீது இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## *தலவரலாறு:*

*தேசிங்குராசன் செஞ்சியை ஆண்டபோது அரங்கநாதரை உபாசனமூர்த்தியாகக் கொண்டு இருந்தார் என்றும்,*



கி.பி.1714ல் ஆற்காடு நவாப்புடன் போரிடச் செல்ல உத்தரவு கேட்டதாகவும் அதற்கு பகவான் போருக்கு இன்று போக வேண்டாம் எனக்கூறியும், தேசிங்குராசன் நான், சத்திரியன் முன் வைத்த காலை பின்வைக்க மாட்டேன், என்னை ஆசிர்வதியுங்கள் என்று வேண்டியதாகவும் பகவான் கோபத்துடன் தனது திருமுகத்தைத் திருப்பிக் கொண்டதாகவும் கூறப்படுகிறது.

### வரலாற்று பின்னனி:

அரங்கநாதசுவாமிக்கு நித்ய பூஜைக்காக மாலை சாற்ற துளசி வளர்ப்பதற்காக நூறு ஏக்கர் நிலமும் ஒரு தனி ஏரியும் இருந்துள்ளது. முகம்மது பின் துக்ளக் டெல்லியை ஆண்ட காலத்தில் அவருடைய சேனாதிபதி மாலிக்கபூர் என்பவனைத்தென்னாட்டிற்கு அனுப்பி கோயில்களைக்கொள்ளையடித்தான். கி.பி.1327 – 23ல் ஸ்ரீரங்கத்திற்கு மாலிக்கபூர் வருவதை அறிந்து ஸ்ரீரங்கத்தில் தற்போது உள்ள அரங்கநாதரை பாதுகாப்பிற்காக முதலில் திருப்பதிக்கும், பின்னர் அங்கிருந்து சிங்கவரத்திற்கும் கொண்டுவந்ததாக அப்போது செஞ்சியை ஆண்ட கிருஷ்ணப்பநாயக்க மன்னரின் குருவாக இருந்த நல்லான் சக்கரவர்த்தி சத்ரயாகம், சேஷாத்திரி அய்யங்கார் என்பவரின் முயற்சியால், அரங்கநாதர் உருவம் மீண்டும் ஸ்ரீ ரங்கத்துக்கே கொண்டு போகப்பட்டு கோபண்ணா

என்பவரால் பிரதிஷ்டைச் செய்யப்பட்டது என்றும் அனந்தார்யசர் இயற்றிய ‘பிரபன்னாககிரந்தம்’ எனும் நூல் கூறுகிறது.

ஒரு காலத்தில் சிங்கவரம் தலைநகராக இருந்தது. முதலாம் மகேந்திர வர்மன் தந்தையாகிய சிம்ம விஷ்ணுவின் காலத்தில் அவ்வரசன் பெயரால் இந்தநகரம் உண்டாக்கப்பட்டு இருக்கக்கூடும் என்றும் கருதப்படுகிறது. இந்த ஊருக்கு விஷ்ணு செஞ்சி என்று பெயர் வழங்கப்பட்டுள்ளது.





## திருக்கோயில் அமைப்பு:

இக்கோயில் முதலாம் மகேந்திரவர்மன் காலத்தில் (590–630) சிறிய மலையின் மீது பாறையைக் குடைந்து அமைக்கப்பட்டகுடைவறைக் கோயிலாகும். பல்லவ குகைக்கோயில்களில் காணப்படுகின்றப்படி இங்கும் சாசன எழுத்துக்கள் காணப்படுகின்றன. இங்குள்ள பிற்காலத்து சாசனம் ஒன்று சகல புவன சக்ரவர்த்திகள் ஸ்ரீஅவனி ஆளப்பிறந்தவன் கோப்பெருஞ்சிங்க தேவர்க்கு 4–வது ஆண்டில் எழுதப்பட்டது என்றும், இக்கோயில் ஆதிகாலத்தில் வராகப்பெருமாள் கோயிலாக இருந்திருக்கக்கூடும் என்றும் பிற்காலத்தில் அரங்கநாதர் கோயிலாக மாற்றப்பட்டிருக்க வேண்டும் எனவும் கருதப்படுகிறது. காரணம் கோயிலின் வடபாகத்தில் வராக தீர்த்த நதி உள்ளது. தல விருட்சமாக

எலுமிச்சை விருட்சம், நந்தியா விருட்சம், புராதன அரசமரம் உள்ளன. வரதராஜப் பெருமாள் சந்நிதி உள்ளது. உபய நாச்சியார் நின்ற கோலத்தில் அமைந்துள்ளார்.

பாறையைக் குடைந்து அமைக்கப்பட்ட முன்மண்டபம் அதற்கு பின்னால் திருநிலை அறையும், அதில் பஞ்சமுக ஆதிசேஷன் மீது அனந்தசயன நிலையில் மூர்த்தியின் உருவம் உள்ளது.

ஸ்ரீரங்கம் அரங்கநாதரை விடவும் திருவனந்தபுரம் பத்மநாபரை விடவும் இவ்வாலய மூலவர் மிகவும் பெரியவர், மகாபலிபுரம் கடற்கரைக் கோயிலில் உள்ள அனந்த சயன மூர்த்தியைப் போன்று இங்குள்ள அரங்கநாதர் வலது கரத்தினை நீட்டி தொங்க விட்டுள்ளார். இவ்வுருவம் பிற்காலத்தில் சிற்பிகளால் செப்பனிடப்பட்டதாகக் கூறப்படுகிறது. மண்டபத்தூண்களில் மகேந்திரவர்மன் காலத்து தாமரைப்பூ சிற்பங்கள் உள்ளன. கருவறை முன்பு இரு துவாரபாலகர் உருவங்களும் உள்ளன. மூலவரின் தொப்புள் வழி தாமரைப்பூவில் சதுர்முக பிரம்மா, மார்பில் மகாலட்சுமி, அருகில் பூதேவி, கருடன், ஜெயவிஜயர், நாரதர் ஆகிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மூலவர் சன்னதி அருகில் ரங்கநாயகி தாயார் சன்னதி உள்ளது.

சன்னதியின் பின்புறத்தில் நின்ற நிலையில் துர்க்கை செதுக்கப்பட்டுள்ளது. மூலவரும் துர்க்கையும் ஒரே நீண்டபாறையில் செதுக்கப்பட்டுள்ளது தனிச்சிறப்பு ஆகும். இக்கோயிலில் தமிழ், சமஸ்கிருத கல்வெட்டுகளும், பிராகிருத எழுத்துள்ள கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

### திருவிழாக்கள்:

வைகுண்ட ஏகாதசி, ஸ்ரீராமநவமி, அனுமத் ஜெயந்தி ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
| --- | --- |
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 11.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 7.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 7.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

செஞ்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

செஞ்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில்
சிங்கவரம், செஞ்சி வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9962560369

# 33. அருள்மிகு சித்தகிரி முருகன் திருக்கோயில்

அவலூர்பேட்டை, செஞ்சி வட்டம்.



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சுப்பிரமணிய சுவாமி |
| இறைவி | : | வள்ளி, தெய்வானை |
| தீர்த்தம் | : | பால்சுனை |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

*திருவண்ணாமலையிலிருந்து வந்தவாசி செல்லும் சாலையில் 22 கி.மீ. தொலைவிலும் மேல்மலையனூரில் இருந்து 10 கி.மீ. தொலைவிலும் உள்ள அவலூர்பேட்டை கிராமத்தில் மலையின் மீது அமைந்துள்ளது இத்திருக்கோயில்.*



## தலவரலாறு

சித்தகிரி (சித்த மாமலை) மலையின்மீது எண்ணற்ற சித்தர் பெருமக்கள் வாழ்ந்து தவம் செய்து இங்குள்ள தேவசேனாதிபதியை, வள்ளிமணவாளனை வழிபட்டுள்ளார். நக்கினார் எனும் சித்தர் பல்லாண்டுகள் சித்தகிரி முருகனை வழிபட்டு வாழ்ந்து மலையடிவாரத்தில் உள்ள குகையில் ஜீவசமாதியாக அமர்ந்தார். அவ்விடமே தற்போது குகைக்கோயில் என அழைக்கப்படுகிறது. மிளகு சாமியார் எனும் சித்தர் தன்னிடம் வருவோர்க்கு 2 மிளகுகளை தந்து உண்ணச்செய்து அனைத்து நோய்களையும் தீர்த்துள்ளார்.

## திருக்கோயில் அமைப்பு

மலையடிவாரத்தை அடைந்தால் எதிரே தீர்த்தக்குளம் வலப்புறம் நக்கினார் சித்தரின் ஜீவசமாதி. இடப்புறம் பாலாம்பிகை சன்னதி. இருவரையும் வணங்கி மலைக்குச் செல்லும் படிகளில் ஏறிச் சென்றால் முதலில் எதிர்ப்படுவது இடும்பன் சன்னதி பிறகு, இடப்புறத்தில் மிளகு சாமியார் எனும் சித்தர் தவம் செய்த மேடை, தொட்டு வணங்கி திருக்கோயிலின் தெற்கு திசைவாயிலின் வழியே திருமதிலைத்



தாண்டி பிரகாரத்துக்குள் நுழைந்து கிழக்கு திசை நோக்கி இறைவனைக் காணச் சென்று அர்த்தமண்டபம் வழியே சன்னதிக்குள் நுழைந்தால் இடப்புறம் விநாயகப்பெருமான் வீற்றிருக்கிறார். முழுமுதற் கடவுளான அவரை வணங்கிய பின் வலப்புறத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் லிங்க வடிவ மூர்த்தத்தையும் தெற்கு முகம்காட்டி அருளும் மகேஸ்வரியையும் வணங்கி அருள் பெறலாம். பின் கர்ப்பகிரகத்தினுள் சென்று மூலவர் வள்ளி தேவசேனா சமேத திருமுருகப் பெருமானின் திருவுருவத்தினை வணங்கி அருள் பெறலாம்.

## தனிச்சிறப்பு

முருகப்பெருமான் அழகிய வடிவில் எழுந்தருளி இருக்கிறார். வேறெங்கும் இல்லாத வகையில் முருகனின் வாகனமான மயில் வலப்புறத்திற்குப்பதிலாக இடப்புறம் திரும்பி இருப்பது சிறப்பான ஒன்றாகும். பங்குனி உத்திரத்தில் இறைவனின் திருக்கல்யாண வைபவத்தில் கலந்து கொண்டு வேண்டிக்கொள்ளும் கன்னிப்பெண்களுக்கு விரைவில் திருமணம் கைகூடும், திருமணமான தம்பதியினருக்கு மகப்பேறு வரம் கிடைக்கும் என்பது வளம் பெற்றவர்களின் வாக்கு.

மேலும் சித்தகிரி மாமலையின் மீது பால்சுனை என அழைக்கப்படும் வற்றாத நீர்சுனை ஒன்று உள்ளது. இதில்தான் தினசரி அபிஷேகத்திற்கு நீர் எடுத்துச் செல்லப்படுகிறது. உடலில் ஏற்படும் மரு நீங்க இறைவனை வேண்டிக்கொண்டு அதனால் குணமடைவோர் நன்றிக்கடனாக வெல்லம், மிளகு ஆகியவற்றை இச்சுனையில் போட்டு பிரார்த்தனையை நிறைவேற்றுவார்கள்.

"வீழலாம் கண்டீரில் வையத்தே நும்வினைகள்
தாழலாம் கண்டீர் தருணமிதே குழுவளூர்
சித்தர் கிரிவாழும் சீர் சுப்பிரமணியைச்
சித்த மதிர் கொண்டாற் சிறந்தது."

என்று சித்தகிரி அந்தாதி (25) இத்தல முருகனைப்பற்றி குறிப்பிடுகிறது.

### திருவிழாக்கள்

இத்திருக்கோயில் வைகாசி விசாகம், ஆடிக்கிருத்திகை, கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம், தைக்கிருத்திகை ஆகிய உற்சவங்களும் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தை முன்னிட்டு தெப்போற்சவத்துடன் கூடிய 14 நாள் பிரம்மோற்சவ திருவிழாவும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 7.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திருவண்ணாமலை, செஞ்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருவண்ணாமலை, செஞ்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

**அருள்மிகு சித்தகிரி முருகன் திருக்கோயில்,**

அவலூர்பேட்டை, செஞ்சி வட்டம்

**விழுப்புரம் மாவட்டம்.**

Mobile: 8903204670

# 34. அருள்மிகு ரிஷபபுரீஸ்வரர் திருக்கோயில்

மேல்சேவூர், செஞ்சி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | ரிஷபபுரீஸ்வரர் |
| இறைவி | : | மங்களாம்பிகை |
| தீர்த்தம் | : | சங்கராபரணி |
| தலவிருட்சம் | : | புன்னை |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*இத்திருக்கோயில் செஞ்சியிலிருந்து திண்டிவனம் செல்லும் சாலையில் நாட்டார்மங்கலம் என்ற கிராமத்திலிருந்து மொடையூர் வழியாக ரப்பானி கூட்ரோடு சென்று அங்கிருந்து கிழக்கில் 3 கி.மீ. தூரத்தில் உள்ள மேல்சேவூர் கிராமத்தில் அமைந்துள்ளது.*

## திருக்கோவில் அமைப்பு



இக்கோயில் 2–33 ஏக்கர் நிலப் பரப்பளவில், இராஜகோபுரம், இரண்டு பிரகாரங்களுடன் அமைந்துள்ளது. மூலவர் சுயம்புலிங்க வடிவில் அருள்மிகு ரிஷபபுரீஸ்வரர், அம்மன் மங்களாம்பிகை தனிச்சன்னதியில் அருள்பாலிக்கிறார்கள். உள்பிரகாரத்தில் விநாயகர், சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், நடராஜர், சுப்ரமணியர், மாணிக்கவாசகர் முதலிய சன்னதிகள் உள்ளன.

## தனிச்சிறப்பு

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தல இறைவனைப் போற்றி பதிகத்தில் குறிப்பிட்டுள்ளதால் இத்தலம் தேவார வைப்புத்தலமாக போற்றப்படுகிறது. பாண்டிய மன்னர்களால் திருப்பணி செய்யப்பட்ட தலம்.



## திருவிழாக்கள்

மார்கழி மாதத்தில் திருவாதிரை உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

**திருக்கோயில் தரிசன நேரம்**

காலை 6.00 மணி முதல் 10 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

**போக்குவரத்து வசதி**

செஞ்சி, திண்டிவனத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

**தங்கும் வசதி**

செஞ்சி, திண்டிவனத்தில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**ஆய்வாளர் / தக்கார்**

அருள்மிகு ரிஷபபுரீஸ்வரர் திருக்கோயில்,
மேல்சேவூர், செஞ்சி வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9629771564

# 35. அருள்மிகு பக்தஜனேஸ்வரர் திருக்கோயில்

திருநாவலூர், உளுந்தூர்பேட்டை வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | பக்தஜனேஸ்வரர் |
| இறைவி | : | மனோன்மணி, சுந்தராம்பிகை |
| தீர்த்தம் | : | கோமுகி, சூல, கருட தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | நாவல் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரம் – உளுந்தூர்பேட்டை நெடுஞ்சாலையில் கெடிலம் என்னும் ஊருக்குக் கிழக்கே 2 கி.மீ. தொலைவிலும் பண்ருட்டி – உளுந்தூர்பேட்டை சாலையில் 20 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. விழுப்புரம் – திருச்சி அகலப் பாதையில் இருந்தை என்னும் இரயில் நிலையத்திலிருந்து*

5 கி.மீ. தூரம் சென்றால் திருநாவலூரை அடையலாம்.



### தல வரலாறு:

சைவ சமய நாயன்மார்கள் நால்வருள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவதரித்தத் திருத்தலமாகும் நடுநாட்டுச் சிவத்தலங்களில் பாடல் பெற்ற எட்டாவது தலமாகும். இத்தலம் திருநாமநல்லூர் எனவும் அழைக்கப்படுகிறது. சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதியை நடுநாடு என்று அழைப்பர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தில் நரசிங்க முனையர் என்னும் சிற்றரசர் இந்நாட்டை ஆண்டு வந்ததாக பெரிய புராணம் கூறுகிறது.

“மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானால் நம்மளவோ? பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடி திறம்பாடும் சீர்ப்பாடு”

என்ற பெரிய புராண வரிகளிலிருந்து திருவாமூரும் திருநாவலூரும் இந்நாட்டைச் சேர்ந்தனவாகும் என்பதனையும் நாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரை சைவ உலகிற்கு தந்தருளியது இந்நாடு என்பதையும் அறியலாம்.

### புராண வரலாறு:

இத்தலத்தில் நாவல் மரங்கள் மிகுந்து காணப்பட்டதால் திருநாவலூர் எனப்பட்டது. உமையம்மை இத்தலத்துக்கு எழுந்தருளி வந்து சிவப்பெருமானைப்பூஜித்து அவர் மனம் மகிழ இறைவனை மணம் புரிந்தார். திருமால் இத்தலத்து இறைவனை வழிபட்டு, நரசிங்க அவதாரம் எடுத்து

இரணியனை வதம் செய்து தேவர்களையும், பக்தர்களையும் காக்கும் ஆற்றலைப் பெற்றார். சிவப்பிலியர் என்பார் சிவபிரானைப் பூஜித்து சண்டீசபதம் பெற்றார். ஆதிசேடன் விடவாதம்





நீக்கப்பெற்று வக்ர நிவர்த்தி அடைந்தான். இத்தலத்தில் சடையனாரும், இசைஞானியாரும் வாழ்ந்து முக்தி பெற்றனர். நரசிங்க முனையரையர் இவ்விறைவனை மிக்க பக்தி செய்து வழிபட்டதை சுந்தரர்,

"நாதனுக்கூர், நமக்கூர், நரசிங்க முனையரையன் ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யுமூர்" என்று கூறுகிறார்.

### சுந்தர மூர்த்தி சுவாமிகள் வரலாறு:

சுந்தரர் திருக்கயிலாயத்தில் ஆலாலசுந்தரர் என்ற திருநாமத்தோடு தொண்டு புரிந்து வந்தார். அநிந்திகை, கமலினி என்ற இருவர் மீது இச்சை கொண்டமையால் இறைவனது ஆணைப்படி நடுநாட்டில் உள்ள திருநாவலூரில் ஆதிசைவ குலத்தில் சடையனாருக்கும், இசைஞானியாருக்கும் மகவாய்த் தோன்றினார். திருமணபந்தத்தில் இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டவர். இறைவனைத் தோழராகப் பெற்றவர், திருவாரூரில் பரவையாரையும், திருவொற்றியூரில் சங்கிலி நாச்சியாரையும் மணந்து வாழ்ந்தவர். சேரமான் பெருமாள் நாயனாரைத் தமது தோழராகப் பெற்றவர். நாயன்மார்களின் வரலாற்றிற்கு மூலமான திருத்தொண்டத் தொகையை அருளிச் செய்தவர், முதலையுண்ட பாலகனை அழைத்தது போன்ற அற்புதங்கள் பல நிகழ்த்தி இறைவனின்



அறநெறியைப் பரவச் செய்தவர், சைவ சமயாசிரியர் நால்வரில் ஒருவர், ஒரு நூறு தேவார திருப்பதிகங்களை அருளிச் செய்தவர், இவரது குருபூஜை திருநாள் ஆடி சுவாதியாகும்.

சுந்தரர் திருவாரூரிலிருந்து புறப்பட்டு பல தலங்களை தரிசித்துக் கொண்டு தொண்டை நாடு நோக்கிச் செல்லும் பொழுது நடுநாட்டில் உள்ள தலங்களையும் வணங்கும்கால் தாம் அவதரித்தத்தலமாகிய திருநாவலூரை அடைந்து வணங்கி திருநாவலூர் திருப்பதிகத்தைப்பாடியுள்ளார்.

“அஞ்சுங் கொண்டு ஆடுவார் ஆவினில் சேவினை
ஆட்சி கொண்டார் தஞ்ச
கொண்டார் அடிச்சண்டியைத் தாமென வைத்துகந்தார்
நெஞ்சங்கொண்டார்
வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்டு
நஞ்சற் கொண்டார்க்கிடம் ஆவது நந் திருநாவலூரே”

## வரலாற்றுப் பின்னனி

ஊரின் பெயர் திருநாவலூர் ஆயினும் இங்கு உள்ள கோயிலுக்கு திருதொண்டிச்வரம் என்று பெயர். இக்கோயிலில் உள்ள முதலாம் பராந்தக சோழ தேவருடைய 29 ஆம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்றும், ஏனைய கல்வெட்டுகளும் இவ்வூரை முனைப்பாடி திருநாவலூர் திருத்தொண்டிஸ்வரமான இராஜதித்த ஈஸ்வரம் என்று குறிப்பிடுகின்றன. இந்த தொண்டிவரத்தை கி.பி. 935–ம் ஆண்டுக்கு முன்னதாகச் கற்றளியாகக் (கருங்கல்லால்) கட்டுவித்தவன், முதற்பராந்தக சோழனது முதல் மகனாகிய இராஜாதித்தன் ஆவான்.

இத்திருக்கோயிலில் திருவலகிடுவார் நால்வர், திருப்பளித்தாமம் தொடுப்பர் இருவர் நியமிக்கப்பட்டிருந்தனர், அவர்களுக்கு ஊதியம் வழங்க கோவிராச கேசரிவர்மரின் மூன்றாம் இராச்சிய ஆண்டில் வீரஸோக பண்டிதன் நாற்பது கழஞ்சு பொன்னை மூலதனமாக வைத்திருந்தான்.

திருத்தொண்டிச் சரமுடையார்க்கு மேலூர் நாட்டுத் திருநாவலூரும், இந்நாட்டுப்பெருக்கமும், மங்கலநாட்டு ஏகதீர சதுர்வேதிமங்கலமும் உரியவனாய் இருந்தன. இச்செய்தி முதலாம் இராசராச சோழனுடைய பதினெட்டாம் இராச்சிய ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டால் புலப்படுகின்றது.

இத்திருக்கோயில் கர்ப்பக்கிரகத்திற்கு முன் உள்ள மண்டபங்களைக்கட்டியவர் திருநாவலூர் வியாபாரி வேளூர் கிழார் பள்ளிபட்டணசுவாமி ஆவார். இராசாதித்தனுடைய தாயார் கோக்கிழானடிகள் பரிவாத்தாள் சித்திரகோமளம் என்பவர் ஒரு நந்தா விளக்கு தொண்ணூறு ஆடுகள் மற்றும் ஈழவிளக்கும் கொடுத்து உள்ளார். மேற்கண்ட செய்திகளையும் இத்திருக்கோயில் கல்வெட்டுக்களில் இருந்து அறிய முடிகிறது.



### திருக்கோயில் அமைப்பு:

கிழக்கு நோக்கிய சன்னதி, திருக்கோயிலின் வாயிலை ஐந்து நிலை ராஜகோபுரம் அணி செய்கிறது. இரண்டு திருச்சுற்றுகளுடன் கூடிய பெரிய கோயிலாக விளங்குகிறது. முதல் சுற்றில் வலதுபுறம் பரவையார், சங்கிலியார், ஆகியோருடன் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தனிக் கோயில் அமைந்துள்ளது. இச்சன்னதியின் உட்பிரகாரத்தில் தென்பகுதியில் அறுபத்து மூவரையும் தரிசிக்கலாம். தஷ்ணாமூர்த்தி இங்கு நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். தென்மேற்கில் தலவிநாயகர்

அமர்ந்து அருள்பாலிக்கிறார். மேற்கு பிரகாரத்தில் முருகன், கஜலட்சுமி ஆகியோர் காட்சி தருகின்றனர். வடக்குப் பிரகாரத்தில் சண்டேசுவரர் கோயில் உள்ளது. வலமாக வந்து சுவாமி சன்னதியை அடையலாம். கருவறையில் நாவலூர் பெருமான் பக்தஜனேஸ்வரர் என்ற திருநாமத்தோடு கண்களுக்கும் கருத்துக்கும் இனியவராய் காட்சி தருகின்றார். அர்த்த மண்டபத்தில் வடக்குப்பகுதியில் உற்சவ மூர்த்திகள் வீற்றிருக்கின்றனர். சுந்தரர் இங்கு அழகிய திருமேனியுடன் காட்சி தருகிறார். அருகில் சுந்தரரை அபிமானப்புதல்வராக வளர்த்த நரசிங்க முனையரையர் திருவுருவம் உள்ளது. அம்பாள் திருக்கோயில் வெளிபிரகாரத்தில் வடபகுதியில் தனியாக கிழக்கு நோக்கி விளங்குகிறது. சுவாமி மற்றும் அம்பாள் சன்னதிகளுக்கு இடையே தல மரமாகிய நாவல் தழைத்து வளர்ந்து காட்சி அளிக்கிறது. யுகத்திற்கு ஒன்றாக நான்கு நாவல் மரங்கள் இங்கு உள்ளன. இத்திருக்கோயிலில் சுவாமி மற்றும் அம்பாள் சன்னதிகளுக்கிடையில் திருமால் வழிபாடு செய்வதற்கு ஏற்ப வரதராஜப்பெருமானுக்கு தனி சன்னதி அமைந்திருப்பது சிறப்பாகும்.



### திருமால் கோயில்:

இவ்வூரில் திருமால் கோயில் ஒன்று இத்தொண்டிச்சரத்துக்கு மேற்கில் உள்ளது என்பதும், அத்திருமாலின் திருப்பெயர் திருமேற்றிளி மஹாவிஷ்ணு என்பதும், முதற் பராந்தக சோழனின் 32 ஆம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு கூறுகிறது.

### தனிச்சிறப்பு

ஆண்டுதோறும் பங்குனி 23ந்தேதி முதல் 27ம் தேதிவரை சூரியனின் ஒளிக்கதிர்கள் கருவறையில் நுழைந்து மூலவர் மீது படுகின்றன.

### திருவிழாக்கள்

ஆடி சுவாதி சுந்தரர் குருபூஜை திருநாள், ஆடிப்பூரம், ஆவணி உத்திரம் சுந்தரர் அவதாரத் திருநாள், புரட்டாசி சதயம், பங்குனி சூரிய பூஜை ஆகிய விழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் பிற்பகல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.30 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், உளுந்தூர்பேட்டை, பண்ருட்டியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரம், திண்டிவனம், பண்ருட்டி, உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு பக்தஜனேஸ்வரர் திருக்கோயில்,
திருநாவலூர், உளுந்தூர்பேட்டை வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.

Mobile:9944238917

# 36. அருள்மிகு சொர்ணகடேஸ்வரர் (எ) வெண்ணெயப்பர் திருக்கோயில்

நெய்வணை, உளுந்தூர்பேட்டை வட்டம்




| | | |
|---|---|---|
| இறைவன் | : | வெண்ணெயப்பர் |
| இறைவி | : | நீலமலர்க்கண்ணி |
| தீர்த்தம் | : | பெண்ணையாறு |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

உளுந்தூர்பேட்டையிலிருந்து திருவெண்ணெய் நல்லூர் செல்லும் சாலையில் பாண்டூர் அருகில் 8 கி.மீ தொலைவில் திருநெல்வெண்ணெய் எனப்படும் நெய்வணை உள்ளது.

## தலவரலாறு

தேவாரப் பதிகம் பெற்ற நடுநாட்டுத் தலங்களில் இத்தலம் 10ஆவது தலமாகும். திருஞானசம்பந்தர் அருளிய தேவார



திருப்பதிகம் கொண்ட தலம். இத்தலத்தை வழிபடுவோர் இடரிலர் என்றும், பழியிலர் என்றும் நெல்வெண்ணெய் இறைவனைக் காண்பவர் அச்சமும் அருவினையும் இலராவர் என்றும் அவரது புகழை விரிந்துரைப்போர் உயர்ந்தோர் என்றும், கற்றறிந்தோர் நெல்வெண்ணெய்ப் பரமரைப் பரவுதலே கடன் என்றும் இத்திருப்பதிகத்தில் ஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

“நல்வெணெய் விழுதுசெய் தாடுதிர் நாடொறும்
நெல்வெணெய் மேவிய நீரே
நெல்வெணெய் மேவிய நீருமை நாடொறும்
சொல்வண மிடுவது சொல்லே.”

## திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயில் 2 ஏக்கர் நிலப்பரப்பளவில் பிரகாரங்களுடன் அமைந்துள்ளது. மூலவர் சுயம்புலிங்கமாக அருள்மிகு வெண்ணெயப்பர், அம்மன் நீலமலர்க்கண்ணியுடன் அருள்பாலிக்கிறார்.

## தனிச்சிறப்பு



இத்திருக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் முதலாம் குலோத்துங்கன், விக்கிரம சோழன் பல்லவ மன்னரில் சகல புவன சக்கரவர்த்தி கோப்பெருஞ்சிங்க தேவர், விசயநகர பரம்பரையில் வீரப்பிரதாப கிருஷ்ணகேது மகாராயர் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளில் இறைவன் "பொற்குடங் கொடுத்தருளிய நாயனார்" என்ற பெயரில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூரை மிலாடு ஆகிய சனாதவள நாட்டுக் குறுக்கைக் கூற்றத்திற்கு உட்பட்ட ஊராகக் குறிக்கப்பட்டுள்ளது. சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகியோர் வழிபட்ட திருத்தலம்.

## திருவிழாக்கள்

மாசி மகம் முக்கிய உற்சவமாகக் கொண்டாடப்படுகிறது.



| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8 மணி | காலசந்தி |
| மாலை 6 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்
அருள்மிகு சொர்ணகடேஸ்வரர் திருக்கோயில்,
நெய்வணை, உளுந்தூர்பேட்டை வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9840975415

# 37. அருள்மிகு சிவலோக நாதசுவாமி திருக்கோயில்

கிராமம் (எ) திருமுண்டீச்சரம், உளுந்தூர்பேட்டை வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சிவலோக நாதர் |
| இறைவி | : | செல்வாம்பிகை |
| தலவிருட்சம் | : | வன்னி |
| தீர்த்தம் | : | முண்டக தீர்த்தம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*விழுப்புரம் – அரசூர் – திருவெண்ணெய் நல்லூர் சாலையில் அரசூரிலிருந்து 4 கி.மீ தொலைவில் கிராமம் என்கிற திருமுண்டீஸ்வரம் அமைந்துள்ளது.*

### தலவரலாறு

சிவபெருமான் உறையும் கயிலாயத்தில் வாயில் காவலர்களாக விளங்கிய திண்டி, முண்டி என்பாருள் திண்டி வழிபட்ட தலம் திண்டிச்சரம் எனவும், முண்டி வழிபட்ட தலம் முண்டிச்சரம் எனவும் பெயர் பெற்றன. முண்டிச்சரம் என்பதே இத்தலத்தின் பழம்பெயராக இருந்து பின்னர் திருமுண்டிச்சரம் என வழங்கப்பெற்றது எனவும் கல்வெட்டுகளால் அறியலாம். கிராமம் என்னும் பெயரும் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ள பழமையான பெயராகும்.

### திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயில் ராஜகோபுரம், பிரகாரத்துடன் அமைந்துள்ளது. மூலவர் சுயம்புலிங்க அருள்மிகு சிவலோகநாதர் அம்மன் காணார்குழலியுடன் அருள்பாலிக்கிறார். பிரகாரத்தில் பரிவார மூர்த்திகள் அமைந்துள்ளன. தட்ஷிணாமூர்த்தி கல்லால மரம் இல்லாமல் மலை மீது அமர்ந்து தேவரை வாகனமாகக் கொண்டு காட்சியளிக்கிறார்.

### தனிச்சிறப்பு

இத்தல இறைவன் இங்குள்ள திருக்குளத்தில் அழகிய தாமரை மலர் மீது வீற்றிருந்தார். சொக்கலிங்க மகாராஜா என்பவரால் பிரதிஷ்டை செய்யப்பெற்றவர் எனக்கூறப்படுகிறது. வீரபாண்டியனுக்குப் பொக்கணம் (திருநீற்றுப்பை) அளித்த மூர்த்தியாவர். பிரமன், தேவேந்திரன் வழிபட்ட தலம் தேவாரப்பதிகம் பெற்ற நடுநாட்டுத்தலங்களில் இத்தலம் 19ஆவது தலம் திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டகத் திருப்பதிகம் ஒன்றைப் பெற்றத் தலம்.

> “ஆர்த்தான்காண அழல்நாகம் அரைக்கு நாணா
> அடியவர்கட் கன்பன்காண் ஆனைத்தோலைப்
> போர்த்தான்கான் புரிசடைமேல் புனலேற்றான் காண்
> புறங்காட்டி லாடல் புரிந்தான் தான்காண்
> காத்தான்காண் உலகேழுங் கலங்கா வண்ணங்

*கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத்துள்ளே*
*சேர்த்தான்காண் திருமுண்டீச்சரத்து மேய*
*சிவலோகன் காண் அவனென் சிந்தை யானே"*

*கல்வெட்டுக்களில், இறைவன் ஆற்றுத்தளி மூலஸ்தானம் உடையார். பொக்கணம் கொடுத்தருளிய நாயனார் என்றும் இவ்வூரை முடியூர் நாட்டுக் கிராமம் எனவும் குறிக்கப்பட்டுள்ளது.*

## திருவிழாக்கள்

*சித்திரை மாதத்தில் அப்பர் திருவிழா நடைபெறுகிறது.*

| நேரம் | காலபூஜை |
|---|---|
| *காலை 8 மணி* | *காலசந்தி* |
| *மாலை 6 மணி* | *சாயரட்சை* |

## திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

## போக்குவரத்து வசதி

*விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோவிலூர் நகர்களில் இருந்து பேருந்து வசதி உள்ளது.*

## தங்கும் வசதி

*விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோவிலூரில் பல தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**

அருள்மிகு சிவலோக நாதசுவாமி திருக்கோயில்,
கிராமம் (எ) திருமுண்டீச்சரம்.
உளுந்தூர்பேட்டை வட்டம். விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9655513252

# 38. அருள்மிகு ஆபத்சகாயீஸ்வரர் திருக்கோயில்

சேந்தமங்கலம், உளுந்தூர்பேட்டை வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | ஆபத்சகாயீஸ்வரர் |
| இறைவி | : | பிரகன் நாயகி |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

விழுப்புரம் – திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் கெடிலம் பேருந்து நிறுத்தத்திலிருந்து சுமார் 1 கி.மீ தொலைவில் “சேந்தமங்கலம்” என்னும் கிராமத்தில் உள்ளது.

## வரலாற்றுப்பின்னனி

கி.பி. 13–ம் நூற்றாண்டில் சேந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு காடவராயர் வம்சத்தைச் சேர்ந்த காடவராயன் கோப்பெருஞ்சிங்கன் என்ற மன்னன் நடுநாட்டை ஆண்டுவந்தான். போரில் தான் பெற்ற வெற்றியை முன்னிட்டு அவன் தன்னுடைய தலைநகரில் கோட்டை போன்ற

அமைப்பில் பெரிய மதில் சுவர் சூழ பிரம்மாண்டமான இந்த சிவன் கோவிலை அமைத்தான். இந்த கோட்டைச் சுவரின் நான்கு புறங்களிலும் காவலாளிகள் நிற்க பெரிய மேடைகள் அமைக்கப்பட்டுள்ளது.





இறைப்பணி, அறப்பணிகள் செய்தும், நீதி தவறாமல் ஆட்சி புரிந்தும் புகழ் பெற்றுத் திகழ்ந்த கோப்பெருஞ்சிங்கன் கி.பி 1231–ல் வந்தவாசி என்னுமிடத்தில் நடந்த போரில் சோழமன்னன் மூன்றாம் ராஜராஜனைத் தோல்வியுறச் செய்து. அவனை 6 ஆண்டுக்காலம் சேந்தமங்கலம் கோட்டையில் அடைத்து வைத்தான். சோழனுக்கு பெண்கொடுத்த சாளுக்கிய மன்னன் போசள ராஜன் தன் மருமகன் கைது செய்து வைக்கப்பட்டிருப்பதை அறிந்து பாண்டியரின் துணையோடு கோப்பெருஞ்சிங்கன் மீது போர் தொடுத்து சோழனை மீட்டுச்



சென்றான். அந்த போரில் கோப்பெருஞ்சிங்கனின் தலைநகர் முற்றிலும் அழிந்து சின்னாபின்னமானது என்பது வரலாறு.

இக்கோயிலின் கர்ப்பக்கிரகத்தைச் சுற்றியுள்ள சுவரில் கோப்பெருஞ்சிங்கனின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. பிற்காலத்து விஜயநகர அரசராகிய இரண்டாம் அரிகரன் கல்வெட்டுக்களும் இங்கே அமைந்துள்ளன. கோயிலின் பகுதிகள் பலவற்றில், பிற்காலச் சோழ மன்னர்களின் கட்டிடக்கலைத்திறன் சிறப்பாக விளங்குகிறது. பைரவர், சூரியன், கஜலட்சுமி, கணேசர், பாலசுப்ரமணியர், உமா சகிதர், பிரம்மா, லிங்கோற்பவர், தட்சிணாமூர்த்தி ஆகியோரின் அழகியசிலைகள், அவ்வற்றிற்குரிய சுவர்மாடங்கள் ஆகிய பஞ் சரங்களினின்று எடுத்துக் கோயிலுக்குள் தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன.

## தனிச்சிறப்பு

இறைவன் வானிலை கண்டீஸ்வரர், ஆபத்சகாயீஸ்வரர் என்றும் அழைக்கப்படுகிறார். கோப்பெருஞ்சிங்கனை பல ஆபத்துகளிலிருந்து காத்ததால் ஈசனுக்கு இப்பெயர் அமைந்ததென்பர். தற்போதும் தன்னை நாடிவரும் பக்தர்களின் ஆபத்துகளை நீக்கி திருவருள் புரிகிறார் இத்தலத்து சிவபெருமான். அம்மன் பிரகன் நாயகி என்னும் பெயரில் அருள்புரிகிறாள். 10 கரங்களுடன் இரண்டு பைரவ மூர்த்திகளை இத்திருக்கோவிலில் காணலாம். முற்காலத்தில் இங்கே மிகச் சிறப்பாக விழாக்கள் நடைபெறுமாம். போர்க்காலங்களிலும் ஆலயத் திருவிழா என்றென்றைக்கும் சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதற்காக பெத்தான் நாயக்கர் என்பவர் தன் தலையைத் தானே அறுத்து தன்னை பலியிட்டுக் கொண்டுள்ளார். இதையறிந்த அரசு அவரது குடும்பத்துக்கு விளைநிலங்களையும் பொன், பொருளையும் வழங்கியதை இங்குள்ள கல்வெட்டுகளில் ஒன்று குறிப்பிடுகிறது,

வரலாற்று சிறப்பு மிக்க இத்திருக்கோயிலுக்கு எதிரில் பெரிய திருக்குளம் உள்ளது, நான்கு புறங்களிலும் அழகிய படிகளை அமைத்து வட கரையில் நிழல் தருவதற்கென ஒரே கல்லில் செதுக்கப்பட்ட இரண்டு குதிரைகள் பூட்டிய தேர் போன்ற

வடிவமைப்பில் எழில் மிக்க கருங்கல் மண்டபத்தையும் கட்டியுள்ளனர். ஒரு குதிரைக்கும் மறு குதிரைக்கும் இருக்கும் இடைவெளியைப்பார்த்தாலே அன்று எவ்வளவு பெரிய மண்டபமாக இருந்திருக்கும் என்று யூகிக்க முடிகின்றது. இந்த மண்டபம் தற்போது முற்றிலும் அழிந்து இரண்டு குதிரைகள் மட்டும் எஞ்சியுள்ளன. சீறிப்பாய்வது போல் நின்றுகொண்டிருக்கும் இக்குதிரைகளின் மீது சிறு கல்லை எடுத்து எங்கெல்லாம் தட்டுகிறோமோ அங்கெல்லாம் பல வித ஒலிகளை எழுப்புகின்றது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8.00 மணி முதல் 10 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 7.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரம், உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

அருள்மிகு ஆபத்சகாயீஸ்வரர் திருக்கோயில்,

சேந்தமங்கலம், உளுந்தூர்பேட்டை வட்டம்.

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9442774505

# 39. அருள்மிகு லட்சுமிநரசிம்ம சுவாமி திருக்கோயில்

பரிக்கல், உளுந்தூர்பேட்டை வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | லட்சுமிநரசிம்மர் |
| இறைவி | : | கனகவல்லி தாயார் |
| ஆகமம் | : | வைகானசம் |

### *அமைவிடம்*

*விழுப்புரம்–உளுந்தூர்பேட்டை சாலையில் மடப்பட்டிலிருந்து 3 கி.மீ. தொலைவில் நெடுஞ் சாலையிலிருந்து மேற்கே 6 கி.மீ. தூரத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.*

### *தல வரலாறு:*

*ஆதிகாலத்தில் இவ்வூர் பெருங்காடாக இருந்ததாகவும் இக்காட்டில் 'கொண்டிய முனிவர்' என்பவர் கடும்*



தவஞ்செய்து வந்ததாகவும் அம்முனிவருக்குக் காட்சிக் கொடுத்து உய்விக்க இந்த ஊருக்கு வேட்டை மார்க்கமாகத் திருப்பதியிலிருந்து நேரடியாக ஏழுமலையான் இவ்வூர் வந்து முனிவருக்குக் காட்சி கொடுத்ததாகவும் இவ்வூர் பெருமாளுக்கு மிகவும் பிடித்துப் போனதாகவும் அதனால் அவர் இவ்வூரிலேயே தங்கி அருள்பாலித்து வருவதாகவும் கூறப்படுகிறது.

## வரலாற்றுப் பின்னனி

இக்கோயிலில் 6 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இதில் ஒன்று விஜய நகர அரசர் காலத்தியது. 2 சோழர் காலத்தியவை, 2 பிற்காலத்தியவை, ஆண்டாள் சன்னதி கருவறையின் வெளிப்புறத்தில் பதிக்கப்பட்டுள்ளது. இதில் துறைகிழான் திருஞானசம்பந்தர் பழந்திபராயன் என்பான். ஆண்டாள் சன்னதியையும், மண்டபத்தையும் கற்றளியாக எடுப்பித்தான் என்று குறிக்கிறது.



கனகவல்லி தாயார் சன்னதியின் முன் மண்டபத்தை



அடுத்து நுழைவாயிலில் வலதுபுறம் காணப்படும் கல்வெட்டு மன்மத ஆண்டு ஐப்பசி மாதம் நடுக்குப்பம் என்ற ஊரைச்சேர்ந்த வணிகர் குலத்தவனாகிய தேவரைச்செட்டி என்பான் கனகவல்லி தாயார் சன்னதியை எடுப்பித்த செய்தியும் சொல்லப்படுகிறது. கனகவல்லி தாயார் என்ற இன்றைய பெயர் முற்காலத்து கோமளவல்லி நாச்சியார் என்று வழங்கப்பட்டதாகக் கல்வெட்டால் அறியமுடிகிறது.

## திருக்கோயில் அமைப்பு

இரண்டாம் திருச்சுற்றுத் தென்மேற்குக் கோடியில் கனகவல்லி தாயார் சன்னதியின் கருவறை சமசதுரமுடையதாக அமைந்துள்ளது. கருவறையில் தாயார் அமர்ந்த நிலையில் அருள்பாலிக்கிறார். தாயாரின் மேலிருகரங்களில் தாமரை மலர்கள் உள்ளன. கீழ் இருகரங்கள் அபய வரத அஸ்தங்களாக உள்ளன.

திருவீதி உலா நாச்சியாருடைய திருஉருவ அமைப்பு கருவறையில் உள்ள அமைப்பைப் போலவே உள்ளது. முன் தலையில் சுருண்ட கூந்தலும் பின் தலையில் முடிந்த அழகும் எடுப்பான நீண்ட மூக்கும் எழில் நகை திகழும் உதடுகளும் வலது கையில் கருநெய்தல் மலரும் இடதுகையைத் தொங்கவிட்டு நிற்கும் அழகே அழகு. வடக்குச் சுற்றில் தெற்கு நோக்கியவாறு ஆழ்வார்களுக்கு என்று சிறு மண்டபமும்

உள்ளது. இம்மண்டபத்தில் விநாயகர், ஆழ்வார்கள் பன்னிருவரும் உள்ளனர். மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் இராமானுஜரும் வேதாந்த தேசிகரும் உள்ளனர். இவைகள் விஜயநகர காலத்துச் சிற்பக்கலையை நினைவூட்டுவதாக உள்ளது. யாகசாலை நெற்களஞ்சியம் யானை கொட்டடி ஆகியவை இரண்டாம் வாயில் கோபுரத்தின் வடது புறமாக அமைந்துள்ளது.

## தனிச்சிறப்பு

இறைவனை வாரந்தோறும் சனிக்கிழமைகளில் துளசியால் அர்ச்சனை செய்து வழிபட்டு வந்தால் மனச்சாந்தி, கஷ்டங்கள் தீர்வது, காரியத்தடங்கல், உத்தியோகச் சிக்கல் நவக்கிரகங்களால் பிடிக்கப்பட்டவர்கள் இறைவனை வழிபட்டால் கருணாமூர்த்தியின் அருள் பரிபூரணமாய் கிடைத்து நவக்கிரகங்களால் ஏற்படும் துன்பம் அனைத்தும் தீரும்.

## திருவிழாக்கள்

தேரோட்டத்துடன் கூடிய வைகாசி பிரம்மோற்சவம், மாதந்தோறும் ஆடி சுவாதி, ஆடி பூரம், நவராத்திரி ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

## அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*விழுப்புரம், உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*விழுப்புரம், உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்,
பரிக்கல், உளுந்தூர்பேட்டை வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.

E-mail: parikkalgroup@gmail.com

Website: www.parikkallakshminarasimhar.tnhrce.in

Mobile: 9944238917

# 40. அருள்மிகு கூத்தாண்டவர் திருக்கோயில்

கூவாகம், உளுந்தூர்பேட்டை வட்டம்



| இறைவன் | : | கூத்தாண்டவா் (எ) அரவான் |
|---|---|---|

## அமைவிடம்

*விழுப்புரம் உளுந்தூர்பேட்டை சாலையில் மடப்பட்டிலிருந்து 3 கி.மீ. தொலைவில் நெடுஞ்சாலையிலிருந்து பிரிந்து பரிக்கல் வழியில் மேற்கே 11 கி.மீ. தூரத்தில் உள்ள கூவாகத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## புராண வரலாறு

*மகாபாரதத்தில் சகுனியின் சூழ்ச்சி காரணமாக பாண்டவர்கள் தங்களது நாடு நகரம் சொத்து உட்பட அனைத்தையும் சூதாட்டத்தில் இழக்கின்றனர்.*



இறுதியில் தருமர் பணயமாக திரௌபதியை வைத்து சூதாடுகிறார். அதிலும் தோற்கிறார். வெற்றிக்களிப்பில் கர்வம் அடைந்த துரியோதனன், முன்பு ஒரு முறை இந்திரபிரஸ்தம் சென்றிருந்தபோது தன்னைப்பார்த்து கேலியாகச் சிரித்த திரௌபதியை அவமானப்படுத்தத்துடிக்கிறான். அதனால் தன் தம்பி துச்சாதனன் மூலம் அவளை சபைக்கு அழைத்து வந்து பாண்டவர்கள், துரோணர், பீஷ்மர் உள்பட அனைவர் மத்தியிலும் துகிலுரியச்செய்தான். அப்போது கிருஷ்ண பரமாத்வாவின் துணையால் அவர் மானம் காக்கப்படுகிறது. பாண்டவர் தாங்கள் இழந்த நாடு நகரம் ஆகியவற்றை மீண்டும் பெற வேண்டுமானால் 14 வருடம் வனவாசமும், ஒரு வருடம் அஞ்ஞான வாசமும் செய்ய வேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப்படுகிறது. அதன்படியே பாண்டவர்கள் வனவாசமும், அஞ்ஞாதவாசமும் முடித்து கௌரவர்களிடம் வருகின்றனர்.

ஆனால் துரியோதனன் அவர்களிடம் நாட்டை ஒப்படைக்க மறுக்கிறான். இறுதியாக பாண்டவர்களின் சார்பில் கிருஷ்ண பரமாத்மா துரியோதனனிடம் தூது செல்கிறார். அதையும் அவன் ஏற்கவில்லை. எனவே போர் புரிவது தான் ஒரே வழி என்று பாண்டவர்கள் முடிவு செய்கிறார்கள். அதன்படி இரு தரப்பிலும் போர் தொடங்குவதற்கு முன்பு போர்க் களத்திற்கு



‘களபலி’ கொடுப்பது வழக்கம். அப்படிச் செய்தால் வெற்றி கிட்டும் என்பது ஐதீகமாக இருந்தது. அப்படி களபலி கொடுக்கப்படும் நபர் சர்வ சாமுத்திரிகா லட்சணமும் பொருந்திய இளவரசனாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட இளவரசனை பாண்டவர்கள் தேடும் போது அர்ஜுனனுக்கும், நாககன்னிக்கும் பிறந்த “அரவான்” என்ற இளவரசன் அவர்களின் நினைவுக்கு வருகிறான். உடனே அரவானை அழைத்து ‘களபலி’க்காக அவனது சம்மதத்தை கேட்கிறார்கள். அதற்கு அவனும் சம்மதிக்கிறான். இருப்பினும் வாழ்ந்து அனுபவிக்க வேண்டிய வயதில் இப்படி ஒரு மகாதியாகத்தை செய்யப்போகும் அவனிடம் இறுதி ஆசை ஏதேனும் இருந்தால் தெரிவிக்கலாம் என்று கிருஷ்ணர் தெரிவித்தார். அதற்கு அரவான் தான் திருமணம் செய்துகொள்ள விரும்புவதாக கூறுகிறான்.

இன்று மணம் நாளை மரணம் என்ற நிலையில் இருக்கும் மாப்பிள்ளைக்கு யாராவது பெண் கொடுப்பார்களா? அதனால் கிருஷ்ணபரமாத்மாவே அழகிய பெண்ணாக (மோகினி) வடிவம் கொண்டு அரவானை திருமணம் செய்து கொள்கிறார். அவர்களது முதல் இரவு கழிந்தது. மறுநாள் காலையில் அரவான் களபலி செய்யப்படுகிறார். உடனே மோகினி வடிவில் இருக்கும் கிருஷ்ணர் கணவனை இழந்த ஒரு பெண்ணுக்கு செய்யும் சடங்குகளான வெள்ளை



சேலை உடுத்தி தாலியை அறுத்து, விதவைக்கோலம் பூண்டு நெற்றிப்பொட்டை அழித்து, கை வளையல்களை உடைத்து அரவானுக்காக கைம்பெண் நோன்பு இருந்தார், இப்படி அளப்பரிய தியாகம் செய்த அரவான் குடிகொண்டிருக்கும் திருத்தலம் இது.



தனிச் சிறப்பு:

மகாபாரத புராணத்துடன் தொடர்புடைய இத்திருக்கோயில் ஒரு பிரார்த்தனை ஸ்தலமாகும். இத்திருக்கோயிலில் ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் “அரவாணிகள் திருவிழா” கொண்டாடப்படுகிறது.

மனிதப் பிறவியில் ஆண் என்றோ பெண் என்றோ பகுத்துக் கூற முடியாத அரவாணிகள், கிருஷ்ண பரமாத்மா செய்தது போல அரவானையே தங்களது மானசீகக்கணவனாக நினைத்து தாலிகட்டி நேர்த்திகடன் செலுத்துகிறார்கள். இதற்காக நாட்டின் பல பகுதிகளிலிருந்து திரளாக அரவாணிகள் வந்து வண்ண வண்ணச் சேலைகள் அணிந்து பூச்சூடி பொட்டு வைத்து தங்களை மணப்பெண் போல சிங்காரித்துக்கொள்வார்கள். அப்போது ஆட்டம் பாட்டம் கும்மிப்பாட்டு, குலவை என ஆர்ப்பாட்டமாக இருக்கும். பின்னர் கோயில் பூசாரிகள் முன்னிலையில் தாலிக் கட்டிக்கொள்வார்கள். அரவான் களபலிக்குச் செல்லும் போது தங்களது தாலியை அறுத்தும், பொட்டை அழித்தும் கை வளையல்களை உடைத்தும், வெள்ளைச் சேலை அணிந்து விதவைக்கோலம்



பூண்டும் ஒப்பாரி வைத்தும் அழுவார்கள். அவர்களது அழுகைக்குரல் பார்ப்பவர்கள் கல் நெஞ்சையும் கரைத்து நெஞ்சை நெகிழ்விப்பதாக இருக்கும்.

### திருவிழாக்கள்

வருடந்தோறும் சித்திரைப் பெருவிழா வெகு விமர்சையாக கொண்டாடப்படுகிறது. சாகை வார்த்தல் தொடங்கி தர்மர் பட்டாபிஷேகம் முடிய 18 நாட்கள் சிறப்பாக உற்சவம் நடைபெறுகிறது. பிரம்மோற்சவத்தின்போது திருத்தேர் ஓட்டமும் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 8 மணி முதல் 10 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரம், உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு கூத்தாண்டவர் திருக்கோயில்,

கூவாகம், உளுந்தூர்பேட்டை வட்டம்,

விழுப்புரம் மாவட்டம்.

Website: www.koothandavartemple.tnhrce.in

Mobile: 9944238917

# 41. அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்

எலவனாசூர்கோட்டை, உளுந்தூர்பேட்டை வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அர்த்தநாரீஸ்வரர் |
| இறைவி | : | பெரியநாயகி |
| தீர்த்தம் | : | தண்ட தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | பலா |
| ஆகமம் | : | காமிகம் |

## *அமைவிடம்:*

*உளுந்தூர்பேட்டையிலிருந்து கள்ளக்குறிச்சி செல்லும் சாலையில் சுமார் 11 கி.மீ. தொலைவில் எலவனாசூர்கோட்டை அமைந்துள்ளது. திருக்கோயிலூரிலிருந்து ஆசனூர் செல்லும் சாலையில் 30 கி.மீ. சென்றும் இத்தலத்தை அடையலாம்.*

## தலவரலாறு



இறையானரையூர் இறைசை என மருவியது. இவ்வூர் தலபுராணம் இறைசைப்புராணம் என்பதையே பெயராகக் கொண்டுள்ளது. பிற்காலத்தில் இறைவாசநல்லூர் என்பது மக்கள் நாவில் சிறிதாக மருவி இலவானாசூர் என்றாகி பின் எலவனாசூர் என மருவியது.

தெய்வீக மன்னன் என்பான் இப்பெருமானுக்கு முதன்முறையாக கோயில் எழுப்பித்தான் எனத் தெரிகிறது. பிற்காலத்தில் சோழ மன்னர்கள், பாண்டிய மன்னர்கள் பிற சிற்றரசர்கள் சிலரும் இக்கோயில் வளர்ச்சிக்கு காரணர்களாயினர். இங்கு உள்ள சோழர்காலத்து சிற்பங்கள் முதன்மையானவை.

இராம, இராவணப் போர் முடிந்து இராமன் இவ்வூரின் வழியாக வந்தபோது, அனுமனைப்பார்த்து 'ஏலே! வானசூரா! என்று அழைத்தாராம். அவ்விளிப்பெயரே எலவானசூர் என்றாயிற்று என செவி வழி செய்திகள் கூறுகின்றன. மூலவரை நோக்கி அமைய வேண்டிய நந்தி அதற்கு மாறாக மேற்கு நோக்கி அமைந்துள்ளது.





நடுநாட்டை ஆண்ட தெய்வீக மன்னனுக்கும் காருண்டன் என்ற அரக்கனுக்கும் நடந்த யுத்தத்தை காண்பதற்காக நந்தியெம்பெருமான் மேற்கு நோக்கித் திரும்பினார் என்றும் சொல்லப்படுகிறது.

## திருக்கோயில் அமைப்பு

இக்கோயில் மாடக் கோயில் ஆகும். மாடக்கோயிலின் அமைப்புக்குரிய இலக்கணம், யானை ஏறமுடியாத மேடைப்பகுதியை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பெறுவதாகும். மேலும், சிறிய வேலைப்பாடுகள் செறிந்த மாடிகள் கொண்டதாகவும் மாடக்கோயில் அமைதல் வேண்டும். இவ்வகையில் சிவாகம இலக்கண முறைப்படி இத்திருக்கோயில் அமைந்துள்ளது.





இத்தலத்தின் மூலவர் சன்னதி மேற்கு நோக்கியது. இறைவன் பெயர் அர்த்தநாரீஸ்வரர். ஊர்பாகம் கொண்டருளிய நாயனார் எனவும் பெயர் உண்டு.



அம்பாள் சன்னதி கிழக்கு நோக்கியுள்ளது. இறைவி பெயர் பெரிய நாயகி. பலா மரம் இத்தலத்தின் ஸ்தல விருட்சமாகும். ‘சிலா தல தீர்த்தம்’ ‘தண்ட தீர்த்தம்’ என்பது தீர்த்தங்களின் பெயர்கள். ஆறு அடுக்குகள் கொண்ட இராஜகோபுரம் கோயிலின் முகப்பில் அணி செய்கின்றது.

கோவிற்கட்டடத்தின் கீழ்ப்பகுதி கருங்கல்லும், மேற்பகுதி செங்கல்லும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் மாடியில் அலங்கார மண்டபம் எழில்பெற அமைந்துள்ளது. இம்மண்டபக் கற்றூண்களில் இத்தல வரலாற்றைத் தெரிவிக்கும் சிற்பங்கள் பல மிளிர்கின்றன. இக்கோயிலுக்கு ஐந்துதிருச்சுற்றுகள் (பிரகாரங்கள்) அமைந்துள்ளன. இதனை பஞ்ச பிரகார கோயில் என்பர்.

இக்கோயிலுக்குக் கீழ்பால் ஒரு மலையின்மீது ஆஞ்சநேயர் உருவம் 15 அடி உயர அளவில் செதுக்கப்பட்டுள்ளது. அதனருகில் ஒரு வேலி நில அளவில் குளம் ஒன்று நம்பி மகாராசன் என்பவனால் வெட்டப்பட்டது என சொல்லப்படுகிறது.

### திருவிழாக்கள்

மகாசிவராத்திரி, ஆருத்ரா தரிசனம், கார்த்திகை தீபம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 8.00 மணி முதல் 11.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


**தொடர்பு முகவரி**

**தக்கார் /ஆய்வாளர்,**
அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்,
எலவனாசூர் கோட்டை, உளுந்தூர்பேட்டை வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9842503363

# 42. அருள்மிகு திருவிக்ரமசுவாமி திருக்கோயில்

திருக்கோயிலூர் நகர்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | உலகளந்த பெருமாள் |
| இறைவி | : | பூங்கோவல் நாச்சியார், புஷ்பவல்லி தாயார் |
| தீர்த்தம் | : | கிருஷ்ண தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | புன்னை மரம் |
| ஆகமம் | : | வைகானசம் |

### *அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து 36 கி.மீ தொலைவிலும் திருவண்ணாமலையிலிருந்து 36 கி.மீ தொலைவிலும் இத்திருக்கோயில் திருக்கோயிலூர் நகரில் உள்ளது.*

### *தலவரலாறு:*

*பத்ம புராணம், பிரம்மாண்ட புராணம் இவ்விரண்டும் இத்தலம் பற்றி விவரித்து பேசுகிறது. பகவான் தனது*



வாமன அவதாரத்தில் தம்மைக் குறித்து தவமிருந்த முனிவர்களுக்காக இத்தலத்தில் மீண்டும் ஒருமுறை வாமன அவதாரத்தைக் காட்டியதாக ஐதீகம், பஞ்ச கிருஷ்ணக் ஷேத்திரங்களில் இதுவும் ஒன்று. வாமன திருவிக்ரம அவதார ஸ்தலம் என்றும் இது அழைக்கப்படுகிறது. கிருஷ்ணர் கோயில் என்றே வடமொழி நூல்கள் குறிக்கின்றன. ஆழ்வார்களால் முதல்முதலாக பாடப்பெற்ற திவ்ய தேசம் இதுதான்.

பெருமாள் வாமன அவதாரம் எடுக்கும் முன்பே கிருஷ்ணர் கோயில் என்று பிரதானமாக வழங்கப்பட்ட இத்தலத்தில் தொன்மை பல சதுர் யுகங்கட்கு முந்தியதாகும். கோபாலன் என்னும் சொல்லே கோவாலன் என்று திரிந்தது. அந்த ஆயனான கோபாலன் எழுந்தருளியுள்ள ஸ்தலமே திருக்கோவலூர் ஆயிற்று தட்சிணபினாகினி எனப்படும் தென்பெண்ணயாற்றங்கரையில் இத்தலம் அமைந்துள்ளது.

நாரதரும் கின்னரர்களும், கிருஷ்ணக்ஷேத்திரத்தில் தவம் செய்தனரென்றும் தானும் இந்த க்ஷேத்தரத்தில் தவம் இயற்றியதாக கூறிய பிரம்மன், மார்க்கண்டேயரின் தந்தையான மிருகண்டு முனிவர் எம்பெருமானின் வாமன அவதாரத்தைக் காண விரும்பி தவமியற்றின ஸ்தலம் இதுதான் என்று பத்மபுராணத்தில் எட்டு அத்தியாயங்களில் (பிரம்மன் கூறியதாக) இத்தல வரலாறு பேசப்படுகிறது.

முன்னொரு காலத்தில் மகாபலி என்னும் மன்னன் தர்ம நியாயங்களுக்குக் கட்டுப்பட்டு ஆட்சி புரிந்து வந்தான்



இருப்பினும் இம்மன்னன் தேவர்களை துன்புறுத்தி அவர்கட்குத் தொடர்ந்து இன்னல்கள் இழைத்து வந்தான். அசுரர்களின் குருவான சுக்கிர பகவான் இம்மன்னனுக்கு குருவாக இருந்து சர்வ சக்திகளையும் அளித்து தேவர்களைத் துன்புறுத்த தூண்டி வந்தார். இந்தக்காலகட்டத்தில் புத்திரப்பேறில்லாத ரிஷி தம்பதியரான காசியபர், அதிதி ஆகிய இருவரும் திருமாலை வேண்டி புத்திர காமேஷ்டியாகம் செய்து வந்தனர்.

இந்நிலையில் மகாபலியின் துன்பம் பொறுக்க இயலாத தேவர்கள் திருமாலைத் துதித்து தம்மைக் காத்தருள வேண்டுமென விண்ணப்பிக்க, புத்திரப்பேறு வேண்டி மகாயாகம் செய்து கொண்டிருக்கும் காசியபர் அதிதி தம்பதிகட்குப் புத்திரனாக அவதாரமெடுத்து மகாபலியை ஒழித்து உங்கள் இன்னல்களைப் போக்குகிறேன் என்று அவர் வாக்களித்தார்.

ரிஷி தம்பதிகளின் யாகத்தை மெச்சிய விஷ்ணு அவர்களுக்கு மகவாக அவதரித்து குட்டையான வடிவம் கொண்ட வாமன மூர்த்தியாக வளர்ந்து பிரம்மச்சரியத்தை மேற்கொண்டார்.

பிரம்மச்சரியம் மேற்கொண்டதும் பூமிதானம் பெறுவதற்காக மாவலிச் சக்ரவர்த்தியிடம் வந்தார். குட்டையான வாமன ரூபத்தைக் கண்டு வியந்த மாவலி ஏளனங்கலந்த புன்னகையுடன் என்ன வேண்டுமென்று கேட்க, எனக்கு மூன்றடி மண் வேண்டுமென வாமனன் கூற இதென்ன பிரமாதம் இப்போதே தருகிறேன் என்று வாக்களித்து தாரை வார்த்து தானம் கொடுக்க ஆயத்தமானான்.



வந்திருப்பது ஸ்ரீமந் நாராயணன் என்றும், தனது சீடன் வீணாக வீழ்ந்து விடப்போகிறான் என்பதையும் உணர்ந்த சுக்ராச்சாரியார் மாவலியிடம் உண்மையை உணர்த்தி தானம் கொடுப்பதை நிறுத்தச் சொன்னார். கொடுத்த வாக்கை மீறாத குணம் படைத்த மாவலி தான் தானம் கொடுத்தே தீருவேன் என்றும் அவ்வாறு வந்திருப்பது ஸ்ரீமந் நாராயணனே எனில் அவருக்குத் தானம் கொடுப்பது தமக்குப் பெருமை தான் எனக்கூறி தாரை வார்க்கத் தொடங்கினான்.

இதைத்தடுக்க நினைத்த சுக்ராச்சாரியார் ஒரு சிறிய வண்டின் வடிவமாக உருவெடுத்து தாரை வார்த்துக் கொடுக்கும் கமண்டலத்தின் துவாரத்தை அடைத்து கொண்டார். கமண்டல துவாரத்தை ஏதோ அடைப்பதை அறிந்த வாமனர் ஒரு சிறிய நாணல் புல்லினையெடுத்து துவாரத்தின் வழியாகக் குத்த சுக்கிராச்சாரியார் ஒரு கண்ணை இழந்தார். மாவலி தாரை வார்த்துக்கொடுக்க தனது ஓரடியால் நிலவுலகு முழுவதையும் அளந்து இரண்டாம் அடியால் காலை விண்ணுயரத் தூக்கி விண்ணுலகம் முழுவதும் அளந்து, திருவிக்ரம அவதார கோலத்தில் நின்று தனது மூன்றாவது அடிக்கு இடம் எங்கே என்று கேட்டு நின்றார். வாமன வடிவத்தில் வந்தவர் நெடிதுயர்ந்த திருவிக்ரம அவதாரங்காட்டி நிற்பதை கண்ட மாவலி மனம் பதைத்து, தன் நிலை உணர்ந்து மன்னிப்பு

வேண்டி தங்களது மூன்றாவது திருவடிக்கு எனது சிரசே இடம் என்று சரணாகதி அடைந்தார். தமது திருவடியை மாவலியின் சிரசில் வைத்த மாத்திரத்தில் பாதாள உலகஞ்சென்று சேர்ந்தான் மாவலி. தேவர்கள் பூமாரி பொழிய பக்தர்களும், ஞானிகளும் ஆனந்த பஜனை செய்ய, அந்த ஒலி சத்திய லோகம் வரை செல்ல இதைக் கண்ட பிரம்மன் அரிதான எம்பெருமானின் திருவடி பாக்கியம் தனக்கு கிட்டியதை எண்ணி கமண்டல நீரால் பாத பூஜை செய்ய அதனின்றும் தெறித்த நீர்த்துளிகள் கங்கையாய் பெருகியது என்பர்.

இவ்விதம் ஒரே நேரத்தில் வாமன திருவிக்ரம அவதாரம் எடுத்த திருக்கோலக்காட்சியைக் கேள்விப்பட்ட மிருகண்டு முனிவர் தாமும் இவ்விரு திருக்கோலங்களையும் ஒரு சேரக் காண வேண்டுமென்று எம்பெருமானைக் குறித்து தவமிருந்ததாக ஐதீகம், அன்ன பானமின்றி கடும் விரதம் மேற்கொண்ட இம்முனிவரின் தவத்தை மெச்சிய பிரம்மன் நீர் வாமன, திருவிக்ரம திருக்கோலத்தைக் காண வேண்டுமாயின் கிருஷ்ண பத்திரா நதிக்கரையில் கிருஷ்ண ஷேத்திரத்தில் கிருஷ்ணன் என்ற பெயரில் பகவான் கோயில் கொண்டுள்ள இடமே நீர் தவம் செய்வதற்கு உகந்த இடமாகும். எனவே அங்கு கடுந்தவம் புரிவதுடன் ஏழையெளியவர்கட்கும் அன்னதானம் செய்ய வேண்டுமெனக்கூறினார்.

அதன்படி மிருகண்டு முனிவர் தமது துணைவியார் மித்ராவதியுடன் தென் புலத்துக் கிருஷ்ண ஷேத்திரத்தை அடைந்தார். பன்னெடுங்காலம் இவ்விதமே அன்னதானம் செய்து கடுந்தவமியற்றி வருங்காலை ஓர் நாள் மஹாவிஷ்ணு ஒரு வயோதிக பிராமணர் ரூபத்தில் வந்து அன்னம் கேட்க, அப்போது தானம் செய்யக்கூட அன்னம் இல்லாத நிலைமையிருக்க, தனது மனைவி மித்ராவதியை அணுகிய மிருகண்டு முனிவர் வந்திருக்கும் வேதியர்க்கு உடனடியாக அன்னம் படைக்க ஏதாவது செய்ய வேண்டுமென, கற்பிற் சிறந்த

அப்பெண்மணி நாராயணனை நினைத்துப் பாத்திரத்தைக் கையிலெடுத்த மாத்திரத்தில் அதில் அன்னம் நிரம்பிவந்தது.

அதைப் பெற்றுக் கொண்டு பெருமகிழ்வோடு முனிவர் வெளியே வர பகவான் சங்கு சக்ரதாரியாக காட்சி தந்தார். வீழ்ந்து பணிந்த மிருகண்டு முனிவர் வாமன திருவிக்ரம அவதாரத்தை தமக்கு காட்டியருள வேண்டுமென வேண்ட அவ்வண்ணமே திருமால் அருள்பாலித்த திருத்தலம் இத்திருக் கோவலூராகும்.

பூங்கோவல் நாச்சியார், புஷ்பவல்லி தாயார் என்னும் திருநாமங்கள், திருவிக்ரமன் ஒரு காலைத் தரையில் ஊன்றி ஒரு காலை விண்ணை நோக்கி தூக்கிய நிலை, கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

### புராண வரலாறு

முதலாழ்வார்கள் மூவரும் தனித்தனியே ஒருவரை ஒருவர் பார்க்காமல் இருந்து வந்தனர், இவர்கள் பல திவ்ய தேசங்களைக் கடந்து ஒரு நாள் இரவு திருக்கோவலூரையடைந்தனர். எம்பெருமான் இவர்களை ஒன்று சேர்க்க எண்ணிப் பெருமழையை அன்று இரவு பொழியச் செய்தார். முதலில் வந்த பொய்கையாழ்வார் மிருகண்டு முனிவரின் ஆசிரமத்தை அடைந்து இரவு தங்குவதற்கு இடமுண்டோ என்று வினவ, முனிவரும் ஓர் இடைக்கழியைக் காட்டி ஒருவர் படுக்கலாம் என்று சொல்லிச் சென்றார். பின்னர் பூதத்தாழ்வாரும் அங்கு வந்து இடம் வினவ முன்னவர் இருவர் இருக்கலாம் என்று தெரிவித்து உள்ளே அழைத்துக் கொண்டார். சிறிது தூரத்தில் பேயாழ்வாரும் வந்து இடம் வினவ, மூவர் நிற்கலாம் என்று முனிவர் காட்டிய சிறிது இடத்தில் மூவரும் நின்றுக் கொண்டு பகவானுடைய குணங்களை பற்றி நினைத்துக்கொண்டிருந்தனர். அந்த இருட்டில் நான்காவது நபராக பகவானும் இம்மூவருக்கும் நடுவில் புகுந்து நெருக்கவும், முதலாழ்வார்களும் நாலாவது நபர் யார் என்று தெரியாமல் திகைக்கவும் பகவான் தன்

பேரொளியால் தன் திருமேனியை இவர்களுக்கு காட்டியருள ஆழ்வார்களும் ஞானக் கண்ணால் கண்டு களித்து

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்யகதிரோன் விளக்காக – செய்ய
சுடராழியானடி சூட்டினேன் சொல்மாலை
இடராழி, நீக்குகவே யென்று

என்று பொய்கையாழ்வாரும்

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தையிடு திரியா –நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்.

என்று பூதத்தாழ்வாரும்

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன் – செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பாள் இன்று

என்று பேயாழ்வாரும்

பகவானை துதித்து பாடியுள்ளனர்.

இவ்வாறு முதலாழ்வார்கள் மூவரும் மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுத முதல் திவ்யதேசம் என்பது இந்த க்ஷேத்திரத்தின் மிகப் பெருமையாகும். பின்பு திருமங்கையாழ்வாரும் இந்த க்ஷேத்திரத்தையடைந்து தம் பாசுரங்களினால் மங்களாசாசனம் செய்தருளினார்.

## தனிச்சிறப்பு

கிருஷ்ண பத்திரா நதிதான் இங்கு ஓடும் பெண்ணையாறாகும். வெண்ணெய் உருகுமுன் பெண்ணை உருகும் என்று சிறப்பிக்கப்பட்ட நதியாகும். பிரம்ம புராணத்தின் பஞ்ச கிருஷ்ணாரண்ய ஷேத்திரங்களுள் ஒன்றாக இது குறிக்கப்படுகிறது.

இந்த க்ஷேத்திராதிபதி கண்ணனுடைய வைபவத்தை அறிந்து ஸ்ரீ துர்க்கை விந்திய மலையிலிருந்து வந்து இந்த எம்பெருமானுக்கு ரக்ஷகியாக எப்போதும் இருந்து வருகிறாள். இங்குள்ள ஸ்ரீ துர்க்கை மிக வரப்ரஸாதி பக்தர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வருகின்றாள்.

திருமங்கையாழ்வாரும் தம்முடைய பாசுரத்தில் இந்த துர்க்கையை "கற்புடைய மடக்கன்னி காவல் பூண்ட" என்று இந்த துர்க்கையைப் பாடுகிறார். ஆசார்யர்களும் "தம்பி விளக்காரி" என்று போற்றுகிறார்கள்.

### திருவிழாக்கள்

தேரோட்டத்துடன் கூடிய பங்குனி பிரம்மோற்சவம், வைகுண்ட ஏகாதசி, கிருஷ்ண ஜெயந்தி, ஆடிப்பூரம், நவராத்திரி ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 6.00 மணி | விஸ்வரூபம் |
| 8.00 மணி | காலசந்தி(நித்யபடி) |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | நித்தியாலசந்தானம் |
| 8.00 மணி | சாயரட்சை |
| 9.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 9.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*விழுப்புரம், திருவண்ணாமலை, உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*விழுப்புரம், திருவண்ணாமலை, உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*

**தொடர்பு முகவரி**

**பவர் ஏஜென்ட்**

அருள்மிகு திருவிக்ரம சுவாமி திருக்கோயில்,
திருக்கோயிலூர் நகர், விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9790101770

# 43. அருள்மிகு வீரட்டேஸ்வரர் திருக்கோயில்

கீழையூர், திருக்கோயிலூர் நகர்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வீரட்டானேஸ்வரர் |
| இறைவி | : | பிரகன் நாயகி |
| தீர்த்தம் | : | பெண்ணையாறு |
| தலவிருட்சம் | : | சரக்கொன்றை |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*விழுப்புரத்திலிருந்து 36 கி.மீ தொலைவிலும் திருவண்ணாமலையிலிருந்து 36 கி.மீ தொலைவிலும் இத்திருக்கோயில் திருக்கோயிலூர் நகரில் கீழையூர் எனும் பகுதியில் அமைந்துள்ளது.*

## தலவரலாறு

சிவபெருமான் தன் வீரச்செயலால் துஷ்டர்களை அழித்து, அன்பர்கட்கு அருள் செய்த எட்டு தலங்களில் இரண்டாவதாக உள்ளது இந்தத் திருக்கோவிலூராகும்.

திருக்கயிலாயத்தில் சிவபெருமானும் பார்வதியும் தனித்திருந்தனர் அம்பிகை, சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்றையும் மூன்று கண்களாக உடையவர் சிவபெருமான் என்று உண்மையை உலகம் உணரவேண்டித் தன்கரங்களால் விளையாட்டாகச் சிவபெருமானது கண்களைப் பொத்தினார். அந்த கணமே உலகமெங்கும் இருள் பரவியது. உயிர்கள் வருத்தமுற்றன. இதனால் பயந்து போன தேவர்கள் சிவனை வேண்ட சிவபெருமான் கண்களை விழித்தார். அதனால் அங்கு ஒளிவீசத் தொடங்கியது. அது வரை நிறைந்திருந்த இருளெல்லாம் திரண்டு ஓர் அரக்கன் உருவாக மாறியது. அந்தகாரணத்தால் தோன்றியவன் ஆகையால் அவன் அந்தகன் என்று அழைக்கப்பெற்றான்.

அந்தகன் சிவபெருமானை வேண்டி மக்களால் அழியாவரம் பெற்றான். அதனால் செருக்குற்ற அந்தகன் தேவர்கள்





அனைவருக்கும் துன்பம் விளைவிக்கலானான்.

இந்திரன் முதலிய தேவர்கள் அவன் செயலால் அஞ்சி சிவபெருமானிடம் முறையிட்டனர். அவர் பூதகணங்களை அவர்களுடன் அனுப்பி அந்தகனுடன் போர் செய்யச் செய்தார். அந்தகன் முன் சண்டை செய்ய முடியாமல் தேவர்களும், பூதகணங்களும் பின் வாங்கினர். அது தெரிந்த சிவபெருமான் தானே நேரில்சென்று அந்தகனுடன் போரிட்டு வென்று வீரநகை செய்து தன் திரிசூலத்தினால் குத்தி எடுத்து உயர்த்திப்பிடித்து திருநடம் புரிந்தார்.

அந்தகன் அறிவு வரப் பெற்று சிவனை துதித்து சிவகணத்தலைவனாக இருக்கும் வரம் வேண்டி பெற்றான்.

வீரநகையால் அந்தகனை வென்று அடியார்கட்கு அருள் செய்ததால் இத்தலத்திற்கு வீரஸ்தானம் அல்லது வீரட்டானம் என்னும் பெயர் வழங்கப்பட்டது.

## புராண வரலாறு

ஔவை பிராட்டியார், இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் விநாயகப் பெருமானை நாள்தோறும் மலர்களால் அர்ச்சித்து செந்தமிழ் பாடல்களால் துதி செய்வார். ஒருநாள் சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்கைலாயம் செல்லப்போவதை அறிந்தார். தாமும் உடன் செல்ல எண்ணினார். வழக்கம் போல் கணபதி பூசையை செய்தார். விநாயகப் பெருமான் ஔவையாரின் பதட்டத்தைக் கண்டு

என்ன அவசரம் என்று வினவ உண்மையைக் ஔவையார் கூறக்கேட்டு அவர்கட்கு முன் அனுப்பி வைக்கிறேன், நிதானமாக பூசை செய்க என்றார். மகிழ்ந்த ஔவையார், ‘சீதக்களப’ என்னும் அகவலை இயற்றிப் பூசை புரிந்தார். அதனால் மகிழ்வெய்திய விநாயகப் பெருமான்,



தமது துதிக்கையால் ஔவைப் பிராட்டியாரை எடுத்துக் கைலாயத்தில் விட்டார்.

சுந்தரமூர்த்தி நாயனாருடன் சென்ற சேரமான் பெருமாள் நாயனார், தங்கட்கு முன்னாள் கைலாயஞ்சென்று கோபுரவாயிலில் வீற்றிருந்த ஔவையாரை நோக்கி, பாட்டி தாங்கள் எவ்வாறு எங்கட்கு முன் வந்தீர்கள் என வினவினர். ஔவையார் நடந்ததைக் கூறினார்.

விநாயகப் பெருமான் ஔவையாரைக் கைலாயத்தில் வைக்கும் போது விசுவரூபமெடுத்தாராகையால் அன்று முதல் அப்பெருமானுக்குக் பெரியானைக் கணபதி என்னும் பெயர் வழங்குவதாயிற்று.

### திருக்கோயில் அமைப்பு

இங்கு சுயம்பு மூர்த்தியாய் வீரட்டேஸ்வரர் அம்பிகையுடன் மேற்கு நோக்கி அமர்ந்தருளிக் கொண்டிருக்கிறார். ஆலய பிரகாரத்தில் ஈசான்ய மூலையில் ஸ்ரீ பைரவர் சன்னதி நவக்ரஹங்கள் உற்சவ மூர்த்திகள் முதலிய மூர்த்திகள் உள்ளனர்.

### தனிச்சிறப்பு

சிவனுக்கு மிகப்பிடித்த புஷ்பம் சரக்கொன்றையாகும். இந்த புஷ்பம் சிவனுக்கே உரித்தான புஷ்பம். காரணம் இந்தப்பூவில் மேல் ஒருவளையமும் ஐந்து இதழ்களும் இருக்கும். கம்பி போன்ற மேலுள்ள வளையம் ஓங்காரத்தைக் குறிக்கின்றது. கீழுள்ள ஐந்து இதழ்களும் நமசிவாய என்ற பஞ்சாட்ஷரத்தைக் குறிக்கின்றன. இவ்வாறு சிவனுக்கு உகந்த சரக்கொன்றை மரம் ஸ்தல விருட்சமாய் இருப்பது ஒரு தனிச்சிறப்பாகும். கக்சியப்பரும் கந்த புராணத்தில் முருகன் திருவவதாரப்படலத்தில் கொன்றையை "வியன்கொன்றை" எனப் பாடியுள்ளார்.

இங்கு பகவான் பரமேஸ்வரன், தேவர்முனிவர் அனைவரையும் காக்க வடுக பைரவ மூர்த்தியாய் இருந்து அந்தகன் என்ற அசுரனை போரில் மதமாயச் செய்து அருள் வழங்கினார்.

அனந்தவல்லி (பெரிய நாயகி) ஸமேத ஸ்ரீமகாபைரவர் அந்தகாசுரன் மதத்தை அடக்கிய பெருமையுடையவர். அவர் அருட்கோலந்தாங்கி இங்கு அமர்ந்தருளிக் கொண்டிருப்பதே இத்தலத்திற்குச் சிறப்பை அளிக்கின்றது. மேலும் சம்மந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடப்பட்ட திருத்தலம் இது.

### திருவிழாக்கள்

தேரோட்டத்துடன் கூடிய மாசிமகம் பிரம்மோற்சவம், மெய்ப்பொருள் நாயனார் குருபூஜை, மகாசிவராத்திரி, ஆனித் திருமஞ்சனம், கார்த்திகை தீபம், ஆருத்ரா

தரிசனம், அன்னாபிஷேகம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், திருவண்ணாமலை, உளுந்தூர்பேட்டையிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

விழுப்புரம், திருவண்ணாமலை, உளுந்தூர்பேட்டையில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு வீரட்டானேஸ்வரர் திருக்கோயில்,
கீழையூர், திருக்கோயிலூர், விழுப்புரம் மாவட்டம்.

E-mail ID: veeratteshwrarkeezhaiyur@gmail.com
Mobile: 9025995248

# 44. அருள்மிகு அதுல்யநாதேஸ்வரர் சுவாமி திருக்கோயில்

அரகண்ட நல்லூர், திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அறையணிநாதர் |
| இறைவி | : | அருள்நாயகி |
| தீர்த்தம் | : | ஆரண்ய தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*திருக்கோயிலூரிலிருந்து விழுப்புரம் செல்லும் சாலையில் 2 கி.மீ தொலைவில் அரகண்டநல்லூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## தலவரலாறு

*அறைபாறை, அணிஅழகு, ஆதலில் இது பாறையின்*



மேல் அழகுற அமைந்த ஊர் திரு அறையணிநல்லூர் எனக் காரணப்பெயர் பெற்று விளங்குகிறது. தற்போது அறம்கண்ட நல்லூர் எனவும் அரகண்டநல்லூர் எனவும் வழங்கப்பெறுகிறது.

நீலகண்ட முனிவர் என்பவர் இங்கு வழிபட்டு பூஜித்த பிறகே இக்கோயில் உண்டாயிற்று என்று கூறுவர். இக்கோயில் வெளிச்சுற்றில் உள்ள நடன மண்டபத்தினை கட்டி முடிக்க வேண்டும் என்னும் நல்லெண்ணத்தால் “இளவெண்மதி சூடினான்” என்பவன் அதற்காகத் தன் உயிரைத் தியாகம் செய்வதாக அறிவிக்க பிற்காலத்தில் இந்நடன மண்டபம் கட்டி முடிக்கப்பட்ட பின் அவனும் தன் உயிரைத் தியாகம் செய்தான் என்று சொல்லப்படுகிறது.

### புராண வரலாறு:

ஒரு காலத்தில் இத்திருக்கோயிலின் மூலவாயிலைச் சமணர்கள் அடைத்து விட்டனர். அப்போது சம்பந்தர் இங்கு வந்து பதிகம் பாடிதிறந்து, வாயிலை அடைத்த சமணர்களைக் கழுவேற்றியதாகவும் அவ்விடமே தற்போது கழுவன்குளம் எனும் பெயரால் வழங்கப்படுகிறது எனவும் காந்தாரப்பண்ணில் “பீடினார் பெரியோர்களும்” எனத் தொடங்கும் பதிகமும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

### திருக்கோயில் அமைப்பு:

தென்பெண்ணை ஆற்றின் வடகரையில் உள்ள பாறையின் மீது அழகுமிகு ஆலயம் அமைந்துள்ளது.

மேற்கு நோக்கிய ஏழுநிலை இராஜகோபுரம், அகழி அமைப்புடைய கருவறை, சுவாமி மேற்கு நோக்கியும் அம்பாள் கிழக்கு நோக்கியும் காட்சி தருகிறார்கள். கோயிலுக்கு வெளியில் பாறையில் ஒரு பெருங்குளம் உள்ளது. இதற்கு அருகில் பஞ் சாண்டவர் குகை என ஐந்து அறைகளும், திரௌபதியிருந்தது ஒரு சிற்றறையும் அதற்கெதிரில் ஒரு சிறு சுனையும் உள்ளது. இச்சுனை வீமன் கதையால் உண்டாக்கப்பட்டதால் இதை வீமன் குளம் எனவும் அழைப்பர்.

### தனி சிறப்புகள்:

குன்றின்மேல் அமைந்துள்ள இக்கோயிலில் திருஞானசம்பந்தர் பாதம் அழகான பீடத்தின் உள்ளது. இங்கிருந்து நோக்க திருவண்ணாமலை உச்சி முதல் அடிவரை காணலாம். இலிங்கவடிவமான அண்ணாமலைக்குச் செல்ல அஞ்சி அறையணிநல்லூரில் இருந்தே பூவார்மலர் கொண்டு அடியர் தொழுவார் என்று தேவாரத்தில் திருஅண்ணாமலையைப் பற்றி கூறப்பட்டுள்ளது.



இத்தல முருகப்பெருமான் ஆறு கரங்கொண்டு ஒரு திருமுகத்துடன் உலகமுய்ய காட்சி தருகிறார்.

ஸ்ரீதுர்க்கை ஏனைய தலங்களைப்போல் அல்லாது தெற்கு நோக்கி அருள்பாலிக்கிறாள். திருக்கோயிலூர் ஸ்ரீஞானானந்தகிரி சுவாமிகள் அவர்கள் இங்குள்ள கோபுரத்தில் அமர்ந்து தவம் செய்து அருளைப்பெற்றார்.

நீலகண்ட முனிவர், கபிலர், பாண்டவர்கள் ஆகியோர் வழிபட்ட தலம்,

“தேவா இறைவா சிவனே எனுமுழக்கம்

ஓவா அறையணிநல்லூர் உயர்வே”

என இராமலிங்க வள்ளலார் இத்தலத்து இறைவனைப் போற்றி பாடியுள்ளார்.

சோழர் காலத்தில் இது இராஜராஜ வள நாட்டின் உட்பிரிவாகிய உடைகட்டு நாட்டில் இருந்தது எனவும் விஜயநகர வேந்தர் காலத்தில் வருதலம்பட்டு, காவடி, திருவடி இராஜ்ஜியம் பெண்ணை வடகரை திருக்கோயில் பற்றில் இருந்ததாகவும் சாசனங்கள் செப்புகின்றன. இராஜராஜன் காலத்தில் கி.பி.1169 ஆண்டு தோறும் ஐப்பசி மாதம் சதயநாளில் விழா நிகழ்த்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதற்கென கிளியூர் மலையமான் பெரிய உடையான் என்ற குறுநிலமன்னர் கொல்லூர் நிலங்களுக்கு புதுவரிகள் விதித்துள்ளமை அறிய முடிகிறது.

ஆலய ஏழுநிலை கோபுரத்தை கோப்பு நாயக்கர், விஜயநாயக்கர், பொம்மன்னர், பாப்புநாயக்கர், நாகம நாயக்கர் ஆகியோர் 15ஆம் நூற்றாண்டில் உருவாக்கியதாக கல்வெட்டுச் சான்று கூறுகிறது.

சோழர்கள் காலத்தில் தான் முதல் ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. விக்கிரம பாண்டியனின் 4வது ஆண்டில் கி.பி.1272 வடமொழி சுலோகத்தால் வரைந்த சாசனம் ஒன்று பாண்டிய நாட்டு திருக்கோட்டியூர் எனும் ஊரைச் சேர்ந்த ஆழ்வான் கூத்தன்ஜெயசிங்கதேவன் என்பவன் இத்திருக்கோயில் நடராஜப் பெருமானுக்குத் தனி ஆலயம் நிறுவியதைக் குறிப்பிடுகிறது.

### திருவிழாக்கள்

மகாசிவராத்திரி, ஆனித் திருமஞ்சனம், கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருக்கோயிலூரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு அதுல்யநாதேஸ்வரர் திருக்கோயில்,

அரகண்டநல்லூர் . விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9025995248

# 45. அருள்மிகு மருதீஸ்வரர் திருக்கோயில்

T. எடையாறு, திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | மருதீஸ்வரர் |
| இறைவி | : | ஞானாம்பிகை |
| தீர்த்தம் | : | அக்னி தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | மருதம் |
| ஆகமம் | : | காமிகம் |
| இசைக் கருவி | : | நாதஸ்வரம், மேளம் |

## அமைப்பு

*திருக்கோயிலூரில் இருந்து திருவெண்ணெய்நல்லூர் சாலையில் 16 கி.மீ தொலைவில் எடையாறு அமைந்துள்ளது. இது ஆறுகளுக்கு இடைப்பட்ட பகுதியாதலால் இடையாறு என அழைக்கப்படுகிறது.*

## தலவரலாறு



பார்வதிதேவியால் சாபமடைந்த ஒரு முனிவர் கிளி உருவத்தோடு கருதாசி என்னும் பெண் வயிற்றிலிருந்து பிறந்து இத்தலத்தின் மருதமரத்தடியில் தவமிருந்து மருதீசரை வழிபட்டு அருள் பெற்று முக்தியடைந்த தலம். அகத்திய முனிவர் இத்தலத்தில் ஒரு லிங்கம் ஸ்தாபித்து வழிபட்டு அருள்பெற்றார். அவர் வழிபட்ட சிவலிங்கம் அகத்தீசுவரர் என்ற பெயருடன் இங்கு உள்ளது. இத்தலத்தில் விநாயகர் கலியுகராமப் பிள்ளையார் எனப்படுகிறார்.

## திருக்கோவில் அமைப்பு

மேற்கு நோக்கிய மூன்று நிலை இராஜகோபுரம், ஒரு பிரகாரத்துடன் மூலவர் சுயம்புலிங்கமாக அருள்மிகு மருதீசர், இடையாற்றுநாதர் மேற்கு நோக்கியும், அம்மன் ஞானாம்பிகை சிற்றிடைநாயகி கிழக்கு நோக்கியும் காட்சியளிக்கின்றனர். தலமரம் மருதமரம், தீர்த்தம், சிற்றிடை தீர்த்தம், அம்மன் சன்னதியில் கிணறாக உள்ளது. உள்பிரகாரத்தில் மருத கணபதி, முருகன், துர்க்கை, அகத்தியர், சுக முனிவர் ஆகியோரின் சன்னதிகள் உள்ளன. சுகமுனிவர், பிரம்மன், அகத்தியர், சுந்தரர், திருஞானசம்பந்தர் முதலியோர் வழிபட்ட தலம்.

## தனிசிறப்பு

திருஞானசம்பந்தர் தேவாரத் திருப்பதிகம் பெற்ற நடுநாட்டில் இத்தலம் 12ஆவது. சுந்தரர் அருளிய தேவாரத் திருப்பதிகம் ஒன்றைப் பெற்றது.

"முற்கையூர் முதுகுன்றங் குரங்கணில் முட்டம்
சிந்தையூர் நன்று சென்றடைவான் திருவாரூர்
பந்தையூர் பழையாறு பழனம் பைஞ்ஞீலி
எந்தையூ ரெய்த மாவிடை யாறிடைமருதே"

...சுந்தரர்

இக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கல்வெட்டுகளில் இறைவத் திரு ...... உடைய நாயனார் எனவும் இவ்வூரை இராஜராஜவள நாட்டு திருமுனைப்பாடி இடையாற்று நாட்டு இறையாறு என்று குறிக்கப்பட்டுள்ளது.

## திருவிழாக்கள்

மகாசிவராத்திரி, ஆனித் திருமஞ்சனம், கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

## போக்குவரத்து வசதி

விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

## தங்கும் வசதி

திருக்கோயிலூரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**பரம்பரை அறங்காவலர்**

அருள்மிகு மருதீஸ்வரர் திருக்கோயில்,
இடையாறு, திருக்கோயிலூர் வட்டம்
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9486787201

# 46. அருள்மிகு கிருபாபுரீஸ்வரர் திருக்கோயில்

திருவெண்ணெய்நல்லூர், திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | கிருபாபுரீஸ்வரா் |
| இறைவி | : | மங்களாம்பிகை |
| தீர்த்தம் | : | தண்டு தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | மூங்கில் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

விழுப்புரத்திலிருந்து அரசூர் வழியாக 22 கி.மீ தொலைவிலும் திருக்கோயிலூரில் இருந்து 22 கி.மீ தொலைவிலும் இவ்வூர் அமைந்துள்ளது,

## தல வரலாறு

தன் கோர உருவம் நீங்க உமாதேவியார் பசுவெண்ணெய்



யினாற் கோட்டை கட்டி அதனிடையே பஞ் சாகினியை வளர்த்துத் தவம்புரிந்து மங்கள வடிவம் பெற்றார். இந்த காரணத்தால் இவ்வூர் 'திருவெண்ணெய்நல்லூர்' என வழங்கப்பெறுகிறது. மறைகள் மூங்கிலின் வடிவில் இறைவனை வணங்கியதால், வேணுவனம் என்று வழங்கலாயிற்று. விண்டு (திருமால்) வணங்கியதால், 'வைகுந்த புரி' எனப் பகர்வர். திருமாலின் உந்தியில் தோன்றிய பிரமன் துதித்ததால், 'வேதாபுரி' என உரைப்பர். சண்முகப்பெருமான் சிவபெருமானை வழிபட்டு அருள் பெற்றமையால் 'சண்முகபுரி' என்று கற்றோர் கூறுவர். சைவ சமய ஆச்சாயர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை சிவபெருமான் தடுத்தாட் கொண்டதால் ஆட்கொண்டபுரம் எனச்சொல்வர்.

பாண்டவர்களில் ஒருவனாகிய விசயன்பூஜித்து வரம் பெற்றதால் விஜயபுரி எனவும் கம்பன் வணங்கியதால் கம்பமாபுரி எனவும், மெய்கண்டார் ஞானோபதேசம் பெற்று, அருள்பெற்றதால் 'மெய்கண்டபுரி' எனவும் கூறுவர்.

இங்குள்ள ஆலயம் 'அருட்டுறை' எனப்படுகிறது.

சந்தானச்சாரியருள் முதல்வராகிய மெய்கண்டார் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் முதன்மையாகத்திகழும் சிவஞான போதத்தை அருளிச்செய்த தலம்.

## திருக்கோயில் அமைப்பு

திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறை ஆலயம் கிழக்கு நோக்கி அமைந்தது. சுவாமி அம்பாள் சன்னதிகள் கிழக்கு நோக்கிய நிலைகளிலேயே உள்ளன. இரண்டு பிரகாரங்கள் உள்ளன. வெளிப்பிரகார நுழைவில் இராஜகோபுரம் இல்லை. கிழக்கே உள்ள வாயிலின் வடபால் நூற்றுக்கால் மண்டபம்



உள்ளது. இறைவன் கிழவேதியர் வடிவில் வந்து வாதிட்டு தடுத்தாட் கொண்ட ஊர்ச்சபை, வழக்கு வென்ற அம்பலம் என்ற பெயரோடு போற்றப்படுகிறது.

கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் அருட்டுறை நாதர் சன்னதி நம்மைக் கவரும் நிலையில் அழகிய கருங்கல் திருப்பணிகளோடு கவினுறக்காட்சி தருகிறது.

சோமாஸ்கந்தர் மண்டபத்திற்கு எதிரே சுந்தரரின் திருமேனி உள்ளது. உள்பிரகாரத்தில் தெற்கே அறுபத்து மூவர் காட்சித் தருகின்றனர். வலம் வரும் போது கிழக்கு நோக்கியவராய்ப் பொல்லாப் பிள்ளையார் எழுந்தருளியுள்ளார்.

சித்தாந்த சாத்திரங்களின் முதல் நூலாகிய சிவஞானபோதத்தை மெய்கண்டார், பொல்லாப்பிள்ளையார் சன்னதியில் மாணவர்களுக்கு விரித்துரைத்தார். வலம்புரி விநாயகர் முதலியோரை வழிபட்டு வலமாக வரும்போது முருகப்பெருமான் சன்னதியை அடையலாம்.

முருகப்பெருமான், சிவபெருமான் எழுந்தருளிய தலங்களில் எல்லாம் வணங்கி, வரும் வழியில் திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறை இறைவனை வழிபட, நாதனும் ‘சூரனின் வெம்மை சேர் மாயமெல்லாம் விலகிடும், அம்மையை வேண்டிச் சக்திவேலை அடைவாய்’ என்றருளினார். செவ்வேட் பரமனும் சக்திவேல் பெற்று, சூரனை வென்று, வள்ளி, தெய்வானையோடு வெண்ணெய் நல்லூர் மீண்டும் வந்து வணங்கித் தன் வெற்றியைக் கூற, அம்மையும் அப்பனும் மகிழ்ந்தனர். தேவர்களின் வேண்டுகோளுக்கேற்ப, உமையாரும் வெல்வன் சித்திர மயில் மீதேறி திருநடனம் புரியலானார். அன்று தொட்டு இன்று காணும் அருட்டுறை ஆலயத்துள் முருகப்பெருமான் அன்பர்க்கெல்லாம்

குறைவிலாது அருள்புரிந்து நடனம் புரிகின்ற திருக்காட்சியைக் கண்டு மகிழலாம்.

### திருவிழாக்கள்

தேரோட்டத்துடன் கூடிய பங்குனி பிரம்மோற்சவம், ஆடிசுவாதி சுந்தரர் குருபூஜை, மகாசிவராத்திரி, ஆனித் திருமஞ் சனம், ஆவணி மூலம், கார்த்திகை சோமவாரம், ஆருத்ரா தரிசனம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8 மணி | காலசந்தி |
| 12 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6 மணி | சாயரட்சை |
| 8 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருக்கோயிலூரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

அருள்மிகு கிருபாபுரீஸ்வரர் திருக்கோயில்,

திருவெண்ணெய்நல்லூர், திருக்கோயிலூர் வட்டம்.

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9655513252

# 47. அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்

கூவனூர், திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அகத்தீசுவரர் |
| இறைவி | : | கற்பூராம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*திருக்கோயிலூரிலிருந்து மணலூர்பேட்டை வழியே ஜம்பையிலிருந்து அருகேயுள்ள திருவரங்கம் செல்லும் வழியில் 8வது கிலோ மீட்டரில் கூவனூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*தல வரலாறு*

*ஒரு சமயம் தென்பெண்ணையாற்றில் வெள்ளம் மிகுந்து ஊரில் புகும்போது அகத்திய முனிவர் நந்தி தேவரை*

வேண்ட நந்தி தேவரும் இந்த வெள்ளத்தைத் தடுக்க எண்ணி சுவாமியிடம் உத்தரவு பெற்று பின் திரும்பி ஊரின் பக்கம் தன் பார்வையைச் செலுத்தி வெள்ளத்தைத் தடுத்தார். இக்காரணந்தொட்டு இன்றளவும் சுவாமியும் சுவாமிக்கு முன்னால் உள்ள நந்தியம் பெருமானும் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் காட்சியளித்து அருள்பாலிக்கின்றனர். அகத்தியர் இங்கு சுவாமியை வழிபட்ட காரணத்தினால் சுவாமிக்கு அகத்தீசுவரர் என்ற திருநாமம் வழக்கத்தில் உள்ளது.

### திருக்கோயில் அமைப்பு:

கிழக்கு நோக்கிய திருமுக மண்டபம், சுவாமி சன்னதியும், அம்பாள் சன்னதியும், தனித்தனி சன்னதிகளாக விளங்குகின்றன. விநாயகர், வள்ளிதேவசேனா, சுப்ரமண்யர், காசி விஸ்வநாதர், சண்டேசுவரர் ஆகியோர் பரிவாரமூர்த்திகளாக விளங்குகின்றனர். திருக்கோயிலூர் வட்டத்தில் அறுபத்து மூவர் உள்ள திருக்கோயில்கள் மூன்றில் இதுவும் ஒன்று.

### திருவிழாக்கள்

ஆனித்திருமஞ்சனம், ஆடி வெள்ளி, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, தீபாவளி உற்சவம், திருகார்த்திகை தீபம், தனுர்மாதம், திருவாதிரை திருநாள், மஹாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்றவை இங்கு நடைபெறும் முக்கிய உற்சவங்களாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

மணலூர்பேட்டை, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருக்கோயிலூரில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்,

கூவனூர், திருக்கோயிலூர் வட்டம்

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9486787201

# 48. அருள்மிகு அருணாச்சலேசுவரர் சுவாமி மற்றும் லஷ்மி நாராயணப்பெருமாள் திருக்கோயில்

விளந்தை, திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருணாச்சலேசுவரர் |
| இறைவி | : | உண்ணாமலையம்மன் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

திருக்கோயிலூரிலிருந்து மணலூர்பேட்டை வழியாக திருவண்ணாமலை செல்லும் சாலையில் 8வது கி.மீல் உள்ள நிறுத்தத்தில் இருந்து தெற்கே ஒரு கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

*தலவரலாறு*

திருக்கோயிலூரை ஆண்ட கடையேழு வள்ளல்களில் ஒருவராகிய திருமுடிக்காரி தினமும் மாலை தோறும்

உள்ளத்தைத் தைக்கக்கூடிய இயற்கை வனப்பு மிகுந்த இந்த ஊருக்கு ஓய்வு கருதி சென்று வருவார் உளம்+தை=உள்ளத்தைத் தைக்கக்கூடியது விளந்தை என மாறியது.

### திருக்கோயில் அமைப்பு

ஊரின் நடுவில் ஸ்ரீ அருணாச்சலேசுவரர் ஆலயமும் ஸ்ரீ லட்சுமிநாராயணப் பெருமாள் ஆலயமும் தனித்தனி கோயில்களாக விளங்குகின்றன. கிழக்கு நோக்கிய சிவாலயத்தில் விநாயகர், முருகர், அம்பாள், சண்டேசுவரர் ஆகியோருக்குத் தனி சன்னதிகள் உள்ளன. பெருமாள் கோயிலில் ஆஞ்சநேயருக்குச் சிறிய தனி சன்னதி உள்ளது.

### தனிச் சிறப்பு

திருவண்ணாமலையில் ஸ்ரீ அருணாச்சலேசுவரர் அருள்பாலிப்பதை கருத்தில் கொண்டு இவ்வூரிலும் ஸ்ரீ அருணாச்சலேசுவரரை பிரதிஷ்டை செய்ததாக வரலாறு, சோமவாரம் அமாவாசை இங்கு சிறப்பானது ஆகும்.

### திருவிழாக்கள்

சித்திரை மாதப்பிறப்பு, ஆனித்திருமஞ்சனம், ஆடிவெள்ளி, நவராத்திரி, அன்னாபிஷேகம், திருகார்த்திகை தீபம், தனுர் மாதம், திருவாதிரைத்திருநாள், தைத்திருநாள், மஹா சிவராத்திரி, கோகுலாஷ்டமி, வைகுண்ட ஏகாதசி, ஸ்ரீ ராம நவமி, பங்குனி உத்திரம் ஆகியவை சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*மணலூர்பேட்டை, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*திருக்கோயிலூரில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**

அருள்மிகு அருணாச்சலேசுவரர் திருக்கோயில்,
விளந்தை, திருக்கோயிலூர் வட்டம்
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9655513252

# 49. அருள்மிகு வியாக்ரபாதீஸ்வரர் திருக்கோயில்

சித்தலிங்கமடம், திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | வியாக்ரபாதீஸ்வரர் |
| இறைவி | : | நீலவிசாலாட்சி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*திருக்கோயிலூர் திருவெண்ணெய் நல்லூர் சாலையில் 10 கி.மீ தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*



## தலவரலாறு

இத்தலத்தில் வியாக்ரபாத முனிவருக்கு காட்சிதந்ததால் இறைவன் வியாக்ரபாதீஸ்வரர் என்று அழைக்கப்படுகிறார்.

## திருக்கோயில் அமைப்பு

மூலவர் சுயம்புலிங்கம் அருள்மிகு வியாக்ரபாதீஸ்வரர், அம்மன் நீலவிசாலாட்சியம்மன். உள்பிரகாரத்தில் பரிவார உற்சவ மூர்த்திகள் உள்ளன. இத்தலத்தில் விநாயகர் சுந்தரமூர்த்தி நாயனாருடன் வாதாடி பாடல் பெற்றதால் இத்தல விநாயகருக்கு வாதாடும் விநாயகர் என்று பெயர். சித்தீஸ்வரம் என்று குறிப்பிடுவதால் இத்தலம் தேவார வைப்புத் தலமாக போற்றப்படுகிறது.

## திருவிழாக்கள்

சித்திரை மாதத்தில் 10 நாட்கள் பிரம்மோற்சவம், ஆடி வெள்ளி, நவராத்திரி, கார்த்திகை, தீபம், ஆருத்திரா தரிசனம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
| --- | --- |
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

விழுப்புரம், பண்ருட்டி, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருக்கோயிலூரில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்**
அருள்மிகு வியாக்ரபாதீஸ்வரர் திருக்கோயில்,
சித்தலிங்கமடம், திருக்கோயிலூர் வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9025995248

# 50. அருள்மிகு சிதம்பரேசுவரர் திருக்கோயில்

கழுமரம், திருக்கோயிலூர் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சிதம்பரேசுவரர் |
| இறைவி | : | சிவகாமியம்மன் |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## *அமைவிடம்*

*திருக்கோயிலூர்–மணலூர்பேட்டை சாலையில் 10 கி.மீ தொலைவில் உள்ள சொரையப்பட்டு நிறுத்தத்திலிருந்து 3 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## *தலவரலாறு*

*பாணாசூரன் இத்தலத்தில் ஒரு லிங்கம் ஸ்தாபித்து வழிபட்ட தலம் ஆதலால் இத்தல மூலவர் பாணலிங்கம் என்றும் அழைக்கப்படுகிறது.*



## திருக்கோவில் அமைப்பு

இராஜகோபுரமும் பிரகாரங்களும் கொண்டு இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

மூலவர் அருள்மிகு சிதம்பரேசுவரர், அம்மன் சிவகாமி அம்மை.

## தனிச்சிறப்பு

சுந்தரர் இத்தலத்தைப்போற்றி பாடியுள்ளதால் இத்தலம் தேவார வைப்புத்தலமாக போற்றப்படுகிறது.

## திருவிழாக்கள்

ஆனித்திருமஞ்சனம், ஆடி வெள்ளி, நவராத்திரி, திருகார்த்திகை தீபம், தனுர்மாதம், திருவாதிரை திருநாள், மஹாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்றவை இங்கு நடைபெறும் முக்கிய உற்சவங்களாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

திருக்கோயிலூரியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு சிதம்பரேசுவரர் திருக்கோயில்,
கழுமரம், திருக்கோயிலூர் வட்டம்
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9486787201

# 51. அருள்மிகு அரங்கநாத சுவாமி திருக்கோயில்

திருவரங்கம், சங்கராபுரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அரங்கநாத சுவாமி |
| இறைவி | : | ரங்கநாயகி தாயார் |
| தீர்த்தம் | : | சந்திர தீர்த்தம், தென்பெண்ணை |
| தலவிருட்சம் | : | புந்நாக மரம் |
| ஆகமம் | : | வைகானசம் |

## அமைவிடம்

*மணலூர்பேட்டையிலிருந்து தியாகதுருகம் செல்லும் சாலையில் மேற்கே 5 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## தலவரலாறு

பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரத்தில், நடுநாடு என்று சொல்லப்பட்ட பகுதியில் திருவரங்கம் உள்ளது. கண்ணபிரானது பெயரினால் விளங்கும் காட்டில் அமைந்துள்ளதால் கிருஷ்ணாரண்யம் என்றும் பெயர் பெற்றது. தமிழ் இலக்கணம் இலக்கிய முறைப்படி காடும், காட்டைச் சார்ந்த பகுதியில் இத்தலம் உள்ளதால் இந்நிலம் முல்லை நிலம், காட்டைச் சார்ந்த பகுதியில் முழுமுதற் கடவுள் கண்ணன். அதனால் தான் இந்த தலத்தில் கண்ணனுக்காக ஒரு தனி சன்னதி முன் புறத்திலேயே பலி பீடத்திற்கு மேலே உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

## புராண வரலாறு

இந்த க்ஷேத்திரத்தின் மகிமை, ஸ்கந்த புராணம் உத்திராகாண்டத்தில் உமாமகேஸ்வரஸம்வாதத்தில் முன்னூற்று ஆறாவது அத்தியாயம் வரையில் "உத்திரரங்க மஹாத்மியம்" என்ற பெயரில் ஆறு அத்தியாயங்கள் வடமொழியில் கூறப்பட்டுள்ளன.





ஆதிகாலத்தில் சோமுகன் என்னும் அசுரன் தேவர்களை வெல்லக்கருதி வேதங்களை அபகரிக்க, கடலில் ஒளித்து வைத்தான். அதனால் தேவர்களும் முனிவர்களும் மிகுந்த வருத்தம் அடைந்து பிரம்மாவுடன் திருப்பாற்கடல் சென்று பகவானை பிரார்த்தித்து வேதத்தை மீட்டுக் கொடுக்குமாறு விண்ணப்பித்தனர்.

ஸ்ரீமந்நாராயணனும் தேவர்களின் வேண்டுதலை ஏற்று கூர்ம அவதாரம் எடுத்து சமுத்திரத்தில் ஒளிந்து கொண்டிருந்த சோமுகனை சம்ஹரித்து வேதங்களைக் கொண்டு வந்து மீளவும் இந்த க்ஷேத்திரத்தில் பிரம்மாவுக்கு உபதேசித்தார். கிருதயுகத்தில் சுரதகீர்த்தி என்னும் தொண்டை மன்னவன் எல்லா செல்வமும நிறைந்திருந்தும், புத்திர பாக்கியம் இல்லாமல் மிகவும் வருந்திய போது நாரத முனிவர் அறிவுரைகளுக்கு இணங்க உத்திரரங்கம் வந்து வேண்ட, பெருமானது அருளால் நான்கு குமாரர்களைப்பெற்று மகிழ்ந்தார். சந்திரன் ஒரு சமயம் தனது மனைவிகளின் சாபத்தால் கலைகள் குறைந்து ஒளிமயங்கியவனாய் சிலேசமடைந்து இருந்தபோது தேவர்களின் அறிவுரைப்படி இந்த உத்திரரங்கம் அடைந்து பகவானை வேண்ட மீளவும் அக்கலைகள் வளரப் பெற்றான். சந்திரன் ஆலயத்தின் தென்கிழக்கிலுள்ள புஷ்கரணியிலிருந்து தவம் செய்ததால் அக்குளத்திற்கு சந்திரபுஷ்கரணி என்று பெயர்

உண்டாயிற்று. சில காலம் பின் தேவர்கள் மீளவும், ஸ்வாமியை தமது திவ்யஸ்தானத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று வேண்ட, மற்றவர்களும் ஸ்வாமியை விட்டுப்பிரிய மனம் வராமல் பரிதவிக்க பெருமாளும் அவர்களிடத்து கருணை கூர்ந்து "விஸ்வர்கர்மா" என்ற தேவதச்சனை வரவழைத்து தம்மைப்போல் ஓர் திவ்ய மங்கள விக்கிரகத்தை நிருமாணிக்க உத்தரவிட்டு பகவானும் அந்த பிம்பத்தில் சாந்தித்தியமாகி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் சேவை சாதித்து வருகிறார்.

## திருக்கோயில் அமைப்பு

பெண்ணையாற்றின் தென்கரையோரம் மேட்டுப்பாங்கான பரப்பில் ஆலயம் அமைந்துள்ளது. இதன்தோற்றமும் இதை உராய்ந்தாற்போல வடக்கிலும், கிழக்கிலும் நீர் சுழித்தோடும் பெண்ணையாற்றின் அழகும், மனத்தைக்கவர்ந்து கண் கொள்ளாக்காட்சியாய் இன்பமளிக்கிறது. இதில் பெருமாள் சன்னதி, தாயார் சன்னதி, ஸ்ரீ வரதர் சன்னதி, ஆண்டாள் சன்னதி, ஊஞ்சல் மண்டபம், வாகன மண்டபம் ஆகியவை அடங்கியுள்ளன. கோயிலுக்கு நேர் கிழக்கே சிறிய திருவடி ஸ்ரீ ஆஞ்சநேயர் சன்னதி அமைந்துள்ளது.

ஸ்ரீ ரங்கநாதர் சுதைரூபமான திருமேனி கொண்ட சயனத்திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். சற்று கிழக்காக சாய்ந்த இளமுறுவர் பூத்து அருள் சுரந்த பரந்த திருமுக மண்டல நோக்கு, வடக்கே திருவடி, தெற்கே சிரசு, இடது பக்கம் ஸ்ரீதேவி வீற்றிருந்து உபசரிக்க, ஸ்ரீ பூமிதேவி தன் மடியிலேந்தி திருவடி வருட வலது புறம் கீழிருந்து கருடன் ஏவல் பணி கேட்க, அனந்தன் என்னும் சர்ப்பராஜனின் சரீரத்தினால் ஆன சயனத்தின் மீது, அந்த சர்ப்பராஜனே தன் படத்தால் குடைபிடிக்க சயனித்து, யோக நித்தரையில் வலது திருக்கையினை சிரசின் பக்கம் வைத்து அபய முத்திரையுடனும் காட்சி அளிக்கிறார்.

### தனிச்சிறப்பு

இத்திருத்தலத்தை ஆழ்வார் எவரும் மங்காளா சாசனம் செய்யவில்லை என்று பலர் பலகாலமாகக்கருதி வந்திருந்த போதிலும் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் “வொருவாதாள்” என்று தொடங்கும் பத்து பாசுரங்களிலும், திருவரங்கம் ஸ்ரீரங்கநாதனை மங்களாசாசனம் செய்துள்ளார் என்பதற்கு அப்பாசுரங்களிலிருந்தும், கோயில் கல்வெட்டுக்களிலிருந்தும் ஆதாரங்கள் நிறையவே உள்ளன. மேலும் வைணவ ஆச்சாரியார் ஸ்ரீவேதாந்த தேசிகனும் நிபாசதிலகத்தில் இப்பெருமாளை மங்களாசாசனம் செய்துள்ளார்.

### திருவிழாக்கள்

வைகுண்ட ஏகாதசி, கிருஷ்ண ஜெயந்தி, ஆடிப்பூரம், நவராத்திரி, கார்த்திகை தீபம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

### அன்னதானத்திட்டம்

இத்திருக்கோவிலில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் அன்னதானத்திட்டத்தின்படி தினசரி 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது. வாரந்தோறும் சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிக வகுப்பு நடைபெற்று வருகிறது.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 6.00 மணி | விஸ்வரூபம் |
| 8.00 மணி | காலசந்தி(நித்யப்படி) |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | நித்தியாலசந்தானம் |
| 8.00 மணி | சாயரட்சை |
| 9.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 9.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*மணலூர்பேட்டை, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*திருக்கோயிலூரில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில்,

திருவரங்கம், சங்கராபுரம் வட்டம்

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9025995248

# 52. அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்

ரிஷிவந்தியம், சங்கராபுரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அர்த்தநாரீஸ்வரர் |
| இறைவி | : | முத்தாம்பிகை |
| தீர்த்தம் | : | இந்திர தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | புன்னை |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*திருக்கோயிலூர் – கள்ளக்குறிச்சி சாலையில் 30 கி.மீ. தொலையில் ரிஷிவந்தியம் என்ற ஊரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இந்த ஊர் பண்டைய காலத்தில் இயற்கை*

வளம் பொருந்திய அடர்ந்த காடுகளாக, இருண்ட வனமாக இருந்ததால் இருண்ட வனம் எனவும் இருடிவனம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

### தலவரலாறு



"உமாமகேஸ்வரன் அகத்திய மாமுனிவருக்கு தம்பதி சமேதராய் திருமணக் கோலத்தில் காட்சி தந்த போது அய்யனின் திருமணக் கோலத்தை தரிசனம் செய்த மாமுனிவர், ஊழிக்காலத்தில் பிறக்கும் மானுடர்கள் யாவருக்கும் அய்யன் இதே கோலத்தில் காட்சியளிக்க வேண்டும்" என்று வரம் கேட்டார். அதன்படி எம்மை தேனாபிஷேகம் செய்யும் போது மக்களுக்கு தரிசனம் தந்தருளுவோம் என்று அய்யன் கூறிவிட்டு, அம்மையுடன் தம்பதி சமேதராய் அந்தரத்தில் மறைந்து விந்தைகள் செய்ததால் இத்தலத்திற்கு விந்தை மாநகர் எனவும் இந்த தலம் வனமாக இருந்த போது ரிஷிகள் பலர் வந்து தங்கி ஈசனை வழிபட்டதால் ரிஷிவந்த ஸ்தலம் என்பது ரிஷிவந்தியம் என மாறி உள்ளது.

### புராண வரலாறு

கோயிலின் மூல விக்கிரகமாக உள்ள சிவலிங்கம் சுயம்புவாக உருவானது. சுயம்புலிங்கத்திற்கு தேவேந்திரன் தினமும் 108 பால்குட அபிஷேகம் செய்து இறைவனை பூஜித்துவந்தார். ஈசனுக்கு மட்டும் தினமும் பாலாபிஷேகம் செய்கிறாரே, நமக்கு அபிஷேகம் செய்யவில்லையே என்று முத்தாம்பிகை அம்மன் கோபம் கொண்டு ஈசனுக்கு தேவேந்திரன் அபிஷேகம் செய்ய வைத்திருந்த பால் குடங்களை எடுத்து மறைத்து வைத்து விட்டார். வந்து பார்க்கும் போது பால் குடங்களை

காணவில்லையே என்று வருந்திய தேவேந்திரன், இனி உயிர் வாழத்தேவையில்லை என்று தேவாலய பீடத்திலேயே தலையை மோதி உயிர்விட முயற்சித்த போது, இறைவன் சிவபக்தர் வடிவில் தோன்றி, பக்தா! இனி நாள்தோறும் உமாபார்வதியுடன் அர்த்தபாக சமேதராக உமக்கு காட்சியளிக்கிறோம் என்று கூறி மறைந்தார். அதன்படி மறுநாள் தேவேந்திரன் பாலாபிஷேகம் செய்யும்போது சுயம்பு லிங்கத்தில் (ஆண் பாதி பெண் பாதியான) அர்த்தநாரீஸ்வரராகக் காட்சி அளித்தார்கள்.

யான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டும் என்று தேவேந்திரன் வேண்டிட, காலை தேனாபிஷேக காலத்தில், சகல மானிடர்களும் அறியும் பொருட்டு காட்சி கொடுப்பதாக ஈசன் வாக்கு கொடுத்து மறைந்தார். அதன்படி இன்றும் தேனால் அபிஷேகம் செய்யும்போது சுயம்புலிங்கத்தில் அர்த்தநாரீஸ்வரராக ஒளி வடிவில் உருவாகக் காட்சி கொடுத்து அருள் பாலித்து வருகிறார்.

## திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயிலின் உள்பாகத்தில் கோபுரத்தை ஒட்டி வடதிசையில் புன்னை மரம் தலவிருட்சமாக அமைந்துள்ளது. இத்திருக்கோயிலுக்கு ஐந்து தீர்த்தங்கள் சிறப்பு சேர்க்கின்றன. அவை அகஸ்திய தீர்த்தம், இந்திர தீர்த்தம், ஞானபோத புஷ்கரணி தீர்த்தம், அக்னி தீர்த்தம், சங்கர தீர்த்தம் என்பனவாகும்.

## திருவிழாக்கள்

பஞ்சமி திதியில் ஆனி மாதத்தில் ரத உற்சவம், கார்த்திகை மாதம் மூன்றாவது சோமவாரம் 108 சங்கு அபிஷேகம், ஐப்பசி மாதம் கந்தசஷ்டி சூரசம்ஹாரம், ஆடி வெள்ளி, நவராத்திரி, அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் நடைபெறுகின்றன. சனிப்பெயர்ச்சி விழா இங்கு பிரபலமானது. கோயிலின் உட்பிரகாரத்தில் சனிபகவானுக்குத் தனி கோயில் உண்டு.

சனிப்பெயர்ச்சியின் போது விசேஷமாக அபிஷேகம், பரிவார அர்ச்சனைகள் நடைபெறும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| 12.00 மணி | உச்சிக்காலம் |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கள்ளக்குறிச்சி, திருக்கோயிலூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சி, திருக்கோயிலூரில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்,

ரிஷிவந்தியம், சங்கராபுரம் வட்டம்

விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9025995248

# 53. அருள்மிகு சஞ்சீவிராயர் திருக்கோயில்

இராவுத்தநல்லூர், சங்கராபுரம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வரதராஜப்பெருமாள் |
| இறைவி | : | பெருந்தேவி தாயார் |
| தீர்த்தம் | : | பாச தீர்த்தம் |
| ஆகமம் | : | வைகானசம் |

*அமைவிடம்:*

*இத்திருக்கோவில், திருவண்ணாமலை–கள்ளக்குறிச்சி நெடுஞ்சாலையில் கள்ளக்குறிச்சி–சங்கராபுரத்திலிருந்து சுமார் 12 கி.மீ. தூரத்திலும் திருவண்ணாமலையிலிருந்து சுமார் 35 கி.மீ. தூரத்திலும் இராவுத்தநல்லூர் கிராமத்திலிருந்து 2 கி.மீ. உள்ளடங்கிய பகுதியில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு

மகரிஷி வியாசர் ஆஞ்சநேயருக்காக பல திருக்கோயில்களை பாரத தேசம் முழுவதும் எழுப்பினார். அவற்றில் ஒன்றுதான் இராவுத்தநல்லூர் என்று அழைக்கப்படும் இரவற்றநல்லூரில் எழுந்தருளியுள்ள அருள்மிகு சஞ்சீவிராயர் திருக்கோயில் ஆகும்,

## புராண வரலாறு

இராமருக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற போரில் இந்திரஜித்துவின் மாயக்கணையினால் இராமரும் இலட்சுமணரும் மயக்கமுற்றனர். அவர்களின் மயக்கத்தினைப்போக்க ஜாம்பவானின் ஆலோசனையின் படி சஞ்சீவி மூலிகையினைக் கொண்டுவர வேண்டி புயலாக புறப்பட்டார் அனுமன். சஞ் சீவி மூலிகையினை தேடி கிடைக்காமல் அயர்ந்து நின்ற அனுமன் முன் ஆராவமுதப்பெருமான் தோன்றினார். அங்கே வரதராஜனாக நின்ற பரம்பொருள் சஞ்சீவி மூலிகையினை அனுமனுக்குக் காட்டி, அனுமனே நீ இங்கே உன்னைத்தேடி வருபவர்களின் துயரங்களையும் துன்பங்களையும் துடைத்து அருள்புரிய வேண்டும் என்று கூற அனுமனும் ஒப்புக்கொண்டு சஞ்சீவிராயராக இத்தலத்தில் அருள்புரிகிறார். இரவு பகல் என்றில்லாமல் இங்கே சஞ் சீவி மூலிகைகளைத்தேடியதால் இவ்வூர் இரவற்றநல்லூர் என்று அழைக்கப்பட்டது. தற்போது மருவி இராவுத்தநல்லூர் என்று அழைக்கப்படுகிறது.



### திருக்கோயில் அமைப்பு

எளிமையான கட்டுமானத்துடன் கூடிய திருக்கோயில், கோயிலின் முன்புறம் வரிசையாக உள்ள ஏழு ஆஞ்சநேயர்களையும் தரிசித்துவிட்டு கோயிலின் உள்ளே சென்றால் பக்தர்களை வியக்க வைக்கும் வகையில் பட்டை வடிவ ஒரே கல்லினாலான புடைப்புச்சிற்பமாக பிரம்மாண்ட வடிவில் தென்திசை நோக்கி ஆஞ்சநேயர் காட்சி தருகிறார். வலக்கரத்தை அபயஹஸ்தமாகக் காட்டி பகைவர்கள் அஞ்சி நடுங்கும் வண்ணம் நீண்ட வாலில் மணியினை அணிந்து அருள்பாலிக்கும் ஆஞ்சநேயரை தரிசிக்கலாம். பின்னர் கிழக்கு நோக்கிய சன்னதியில் நின்ற திருக்கோலத்தில் சேவைசாதிக்கும் பெருந்தேவி தாயார் சமேத வரதராஜப்பெருமாளையும் தரிசித்து அருள்பெறலாம்.

### தனிச்சிறப்பு:

இத்திருக்கோயிலுக்கு வந்து சஞ்சீவிராயரை தரிசிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டுவது வேண்டியபடி நிறைவேறும். ஜாதகத்தில் நிலவும் தோஷங்கள் பரிகார நிவர்த்தி, மாங்கல்ய தோஷ நிவர்த்தி, பகைவர்கள் நிர்மூலம், திருடு போன பொருட்கள் திரும்ப கிடைத்தல், பேய் பிசாசு பில்லி சூனிய நிவர்த்தி ஆகிய பலன்கள் பக்தர்களுக்கு கிடைக்கப்பெறுகிறது. மேலும் தங்களது வேண்டுகோளை செப்புத்தகட்டில் எழுதி திருக்கோயிலில் கட்டிவைத்தால் சில நாட்களிலேயே வேண்டுதல் நிறைவேறும் என்பதும் உண்மையாகும்.

### திருவிழாக்கள்:

அனுமத் ஜெயந்தி, ஸ்ரீராமநவமி, தமிழ் வருடப்பிறப்பு லட்சதீபவிழா, மார்கழி – 2, தெப்ப உற்சவம் ஆகியவை சிறப்பாக நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கள்ளக்குறிச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி


**செயல் அலுவலர்**

**அருள்மிகு சஞ்சீவிராயர் திருக்கோயில்,**

இராவுத்தநல்லூர், சங்கராபுரம் வட்டம்

**விழுப்புரம் மாவட்டம்.**

Mobile: 9994987965

# 54. அருள்மிகு பசுபதீஸ்வரர் திருக்கோயில்

வரஞ்சரம், கள்ளக்குறிச்சி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | பசுபதீஸ்வரர் |
| இறைவி | : | பாலாம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

கள்ளக்குறிச்சியிலிருந்து கூத்தக்குடி சாலையில் 16 கி.மீ. தொலைவில் உள்ள கண்டாச்சி மங்கலத்திலிருந்து உள்ளே 2 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## தனிச் சிறப்புகள்:

மூலவர் சுயம்புலிங்கமாக அருள்பாலிக்கிறார். அம்மன் பாலாம்பிகை, காமதேனு வழிபட்ட தலம். இத்தலத்தில் உள்ள திருக்குளத்தில் தொழுநோய் உள்ளவர்கள் நீராடி இறைவனை வழிபட்டால் நோய் நீங்கும். சோழ அரசனுக்கு இருந்த தொழுநோய் இத்தலத்தில் நீங்கியதால் காணிக்கையாக சோழ மன்னன் இத்திருக்கோயிலை விரிவுபடுத்தி கட்டுவித்தான் என்பது வரலாறு.



### திருவிழாக்கள்

பங்குனி பூரம் அன்று சிறப்பாக உற்சவம் நடைபெறுகிறது. மேலும் சிவராத்திரி அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், ஆருத்ரா தரிசனம் ஆகிய விழாக்களும் நடைபெறுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 10 மணி வரையிலும், மாலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கள்ளக்குறிச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி

பரம்பரை அறங்காவலர்

அருள்மிகு பசுபதீஸ்வரர் திருக்கோயில்,

வரஞ்சரம், கள்ளக்குறிச்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம்.

Mobile: 9842995271

# 55. அருள்மிகு சொர்ணபுரீஸ்வரர் திருக்கோயில்

தென்பொன்பரப்பி, சின்னசேலம் வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சொர்ணபுரீஸ்வரர் |
| இறைவி | : | சொர்ணாம்பிகை |
| தலவிருட்சம் | : | அரசமரம் |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*சின்னசேலத்திலிருந்து ஆத்தூர் செல்லும் சாலையில் அம்மையகரம் ஊரிலிருந்து 1 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு

*சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதாக கருதப்படும் இந்த ஆலயத்தில் உள்ள சிவலிங்கமானது, சித்தர்களின் தலைமை குருவாகக்கருதப்படும் காகபுஜண்டர் என்பவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.*

## புராண வரலாறு



பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு தலைமை சித்தரான காகபுஜண்டர் சிவதரிசனம் வேண்டி கடுமையாக தவம் மேற்கொண்டதாகவும், அவரது தவத்தை மெச்சிய சிவபெருமான் பிரதோஷ நேரத்தில் 16 முகங்களைக் கொண்ட சோடஷலிங்கமாக காட்சித் தந்ததாகவும் கூறப்படுகிறது. காகபுஜண்டர் இங்கு கோயில் அமைந்த பொன்பரப்பி பகுதியிலேயே ஜீவசமாதி அடைந்ததைத் தொடர்ந்து அப்போதைய ஆட்சியாளராக இருந்த வானகோவரையன் மிகப்பெரிய சிவாலயத்தை எழுப்பினார். புகழ்பெற்ற கட்டிடக்கலை வல்லுநர்களைக் கொண்டு நுணுக்கம் வாய்ந்த வேலைப்பாடுகளுடன் ஆலயத்தை அமைத்த வானகோவரையன். மற்ற சிவாலங்களில் இல்லாத சிறப்புகள் பலவற்றை உள்ளடக்கியதாக உருவாக்கினார்.



இந்த சிவாலயம் எழுப்பப்பட்ட காலகட்டத்தில் இந்த ஊரில் செல்வம் செழித்து, பொன்னும் பொருளும் அளவற்றுப் புழங்கியதாகவும் அதனாலேயே இந்த ஊருக்கு பொன்பரப்பி என்று பெயர் ஏற்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது. இதனாலேயே இங்கு எழுந்தருளிய இறைவனுக்கு சொர்ணபுரீஸ்வரர் என்று பெயர் சூட்டப்பட்டது.

## திருக்கோயில் அமைப்பு



சொர்ணபுரீஸ்வரர் ஆலயத்தின் வெளிப்பிரகாரம் பல்வேறு பிரத்யேகச் சிறப்புகளுடன் வடிவமைக்கப்பட்டுள்ளது. அது போலவே வெளிப்பிரகாரத்தில் அமைந்த சன்னதிகளும் தனித்தன்மை கொண்டவைகளாக விளங்குகின்றன. ஆறுமுகமாக காட்சியளிக்கும் முருகன் வள்ளி தெய்வானையுடன் இருந்தாலும், பறக்கும் மயில்மேல் ஆசனத்தில் அமர்ந்திருக்குமாறு இருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும். மயில் மேல் ஆசனமிட்டு முருகன் அமர்ந்திருக்கும் காட்சி பல ஆலயங்களில் இருந்தாலும், இக்கோயிலில் சுமார் 8 அடி உயரத்திற்கு பிரம்மாண்டமாக அமைந்திருப்பது சிறப்பானது. அதுபோலவே ஸ்வர்ணாம்பிகை தாயார் சிலையும் வெகு நேர்த்தியாக, உயிரோட்டத்துடன் இருப்பதும் பக்தர்களைப்பரவசப்படுத்துவதாக உள்ளது.

## தனிச் சிறப்புகள்

சொர்ணபுரீஸ்வரராகக் காட்சியளிக்கும் ஈசன் 16 முகங்களைக் கொண்டு சோடஷலிங்கமாக இங்கு வீற்றிருக்கிறார். காந்தத்தன்மை கொண்ட ஒரே கல்லினால் செய்யப்பட்ட லிங்கமானது சுமார் 5.5 அடி உயரத்திற்கு விஷ்ணு மற்றும் பிரம்மபீடங்களின் மீது கம்பீரமாக அமைக்கப்பட்டுள்ளது. சோடஷலிங்கம் பல சிவாலயங்களில் இருந்தாலும் இங்கு லிங்கம் மட்டுமின்றி விஷ்ணு பிரம்ம பீடங்களும் 16 முகங்களைக் கொண்டதாக



வடிவமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. உலகையே கட்டியாளும் மும்மூர்த்திகளும் இவ்வாறு ஒரே வடிவமைப்பில் இணைந்திருப்பது இங்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பாகும்.

தன்னை வணங்கும் பக்தர்கள் பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டும் என்ற பொருளிலேயே இங்குள்ள ஈசன் சோடஷலிங்கமாகக் காட்சித் தருகிறார். சொர்ணபுரீஸ்வரரின் சிவலிங்கம் வடிவமைக்கப்பட்டுள்ள காந்தக் கல்லானது நவபாஷாணத்திற்கு ஒப்பானதாகும். இந்த கல்லை கைகளினால் தட்டிப்பார்த்தால் வெண்கலச்சத்தம் எழுவது இதன் பிரத்யேக சிறப்பிற்குச்சான்று.



இத்திருக்கோயிலானது வாயு ஸ்தலத்திற்கும், பஞ்சபூத ஸ்தலத்திற்கும், இணையானதாக இருப்பதால் இதன் கருவறையானது மிகவும் உக்கிரமானதாக இருக்கும் எனவும் காகபுஜண்டரின் நாடிச் சுவடியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கருவறையின் மையத்தில் அமைந்த தீபம் துடிப்புடன் எரிந்து கொண்டிருப்பது நாடிசுவடியின் பூரணத்துவத்தை நமக்கு உணர்த்துவதாக உள்ளது.

பெரும்பாலான சிவாலயங்களில் உள்ள நந்தி வயது முதிர்ந்தது போலவும், முகமோ அல்லது தலையோ ஏதேனும் ஒரு பக்கமாக சாய்ந்தோ காணப்படுவது இயல்பு. ஆனால் இங்குள்ள நந்தியானது இளங்கன்றாகவும் சொர்ணபுரீஸ்வரருக்கு நேர்கோட்டில் இருக்கும்படியும் வடிவமைக்கப்பட்டுள்ளது. பிரதான நிலைப்படியில் இருந்து சிவதரிசனம் செய்வதற்கு வசதியாக நந்தி அமைந்துள்ளது. பிரதோஷ வழிபாட்டிற்கு வரும் பக்தர்கள் சொர்ணபுரீஸ்வரரைத் தரிசிக்கவும் வசதியாக உள்ளது. இங்குள்ள நந்தீஸ்வரருக்கு அபிஷேகம் செய்யும் போது பால் உள்ளிட்ட அபிஷேகப்பொருட்கள் நீல நிறமாக மாறி காட்சியளிப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### திருவிழாக்கள்

ஆனித்திருமஞ்சனம், ஆடி வெள்ளி, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, தீபாவளி உற்சவம், திருக்கார்த்திகை தீபம், தனுர்மாதம், திருவாதிரை திருநாள், மஹாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்றவை இங்கு நடைபெறும் முக்கிய உற்சவங்களாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |
| 8.00 மணி | அர்த்தசாமம் |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

சின்ன சேலம், கள்ளக்குறிச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

அருள்மிகு சொர்ணபுரீஸ்வரர் திருக்கோயில்,

தென்பொன்பரப்பி, சின்ன சேலம் வட்டம்.

விழுப்புரம் மாவட்டம்.

Phone : 04151-257057  Mobile: 9443240127

# 56. அருள்மிகு சொர்ணபுரீஸ்வரர் திருக்கோயில்

கூகையூர், சின்னசேலம் வட்டம்.



| | | |
|---|---|---|
| இறைவன் | : | சொர்ணபுரீஸ்வரர் |
| இறைவி | : | பிரகன் நாயகி |
| தீர்த்தம் | : | வசிஷ்ட தீர்த்தம் (வெள்ளாறு) |
| தலவிருட்சம் | : | நெல்லி |
| ஆகமம் | : | காமிகம் |

## அமைவிடம்

*சின்ன சேலத்திலிருந்து 12 கி.மீ தொலைவில் சேலம்–ஆத்தூர்–விருத்தாசலம் சாலையில் சின்ன சேலம் கூட்டு சாலையில் 6 வது கி.மீ–ல் பிரிந்து தெற்கு நோக்கிச்செல்லும் சாலையில் 6 கி.மீ தொலைவில் கூகையூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## தல வரலாறு:

இத்தலம் சங்க இலக்கியங்கள் கூகை என்று குறிப்பிடும் குறுநில மன்னன் ஒருவன் வாழ்ந்திருந்ததால் அவன் பெயரால் கூகையூர் என்று அழைக்கப்பட்டது.

கூகையூர், குகையூர், சுவர்ணபூரி, மாலங்கபுரி, காரியாம்பரி, நெல்லிவனம் என்றும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பெயரால் வழங்கப்பட்டாலும் இன்றும் கூகையூர் என்பதே இவ்வூரின் பெயராக நிற்கிறது. இதனைப்பழங்கால கல்வெட்டுகளில் மிலாடாகிய ஜனநாயக வடநாட்டில் மகதை மண்டலத்தில் நிறையூர்க்கூற்றத்துக் கூகையூர் என்று குறிக்கின்றன.

பல சித்தர்களும், முனிவர்களும், ஞானிகளும் புலவர்களும் சான்றோர் பலரும் வாழ்ந்த ஊர்.

காலை கயிலை மலைக், கடிகை பத்தில் கஞ்
சமலை, மாலை திருவாரில் வந்திடுவார் – சோலை
சூழ் குகையூரில் மாயோகம் கொள்ள, நவ சித்தர்களும்
வகையாக வந்திருவார் தாம்.”

– எனும் பாடல்

நவசித்தர்களும் இந்த சோலைசூழ் குகையூரில் மாயோகம் கொள்ள கடமை தவறாமல் நள்ளிரவில் வந்து விடுவார்கள் என்பதைக்கூறுகிறது. இங்கே திருமூலச் சித்தர் யோக மடத்தைக்கட்டி சிவயோகம் புரிந்து வந்தார்.

இத்தலத்தில் ஐந்து சிவன் கோவில்களும் ஒரு பெருமாள் கோவிலும், பிள்ளையார் கோவிலும், அய்யனார் கோவிலும் உண்டு.

## திருக்கோயில் அமைப்பு:

கி.பி. 1178 முதல் 1258 வரை ஆரகழூரை ஆண்ட மன்னர்களின் பிரதிநிதிகளும், மன்னர்களில் சிலரும் இக்கோயில்களின் சில பகுதிகளைக் கட்டியதாகவும் ராஜ ராஜ தேவன் என்பான் இவ்வூர் ஏரியையும் பெருமாள் கோவிலையும் கட்டியதாகத் தெரிகிறது. மஹாமண்டபத்தைச்



சுற்றிலும் மற்றும் அம்மன் ஆலய வெளிப்புற சுவரிலும் பல கல்வெட்டுகள் உள்ளன.

இத்திருக்கோயில் மூன்று பிரகாரங்களுடன் அமைந்துள்ளது. அம்மன் சன்னதியும் சாமி சன்னதியும் தனித்தனி பிரகாரத்தில் உள்ளன. அம்மன் சன்னதி தெற்கு நோக்கியது. சாமி சன்னதி கிழக்கு நோக்கியது. அம்மன் சன்னதி கருவறை விமானம் வேலைப்பாடுகளுடன் கூடிய பதுமைகளுடன் அமைந்துள்ளது.

மதில் சுவரினைச் சுற்றி ‘அப்பம்ம சமுத்திரம்’ என்று அழைக்கப்பட்ட சுற்றுப்பாதை இருந்ததாகவும் விழாக்காலங்களில் உற்சவ மூர்த்திகள் திருவுலா வந்ததாகவும் கூறுகின்றனர்.

பக்தர்கள் அமர யாழிமுக கைப்பிடி கொண்ட, ஆறு படிக்கட்டுகளுடன் தரையிலிருந்து 4 அடி உயர மேடையுடன் கூடிய, விசாலமான 500 பேர் அமர்ந்து தரிசிக்கக்கூடிய 46 கால் வசந்த மண்டபம் உள்ளது. இம்மேடையில் விழாக்காலங்களில் உற்சவ மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெறும்.

கர்ப்பக்கிருகத்தின்மேல் அழகிய உயிரோட்டமிக்க பதுமைகளை தாங்கிநிற்கும் நெடிதுயர்ந்த கோபுரம் உள்ளது. கருவறை வாயிலில் வீரம் மிக்க துவாரபாலகிகள் அம்மன் கருவறை நடையின் கீழ் ஓர் நிலவறை இருக்கிறது.

*கருவறையின் தென்புறம் தட்சிணாமூர்த்தி, பிள்ளையார், கருவறையின் பின்புறம் அண்ணாமலையார் (லிங்கோத்பவர்), வடபுறம் பிரம்மா, துர்க்கைதேவி, சண்டிகேவரர் முதலான மூர்த்திகள் நிறுவப்பட்டுள்ளன.*

*கருவறையின் முன்பக்கமுள்ளது, வேலைப்பாடு மிக்க குபேர ஸ்தான மண்டபம், கூகையூர் குடங்கழகு என்று மக்களால் வியப்புடன் பாராட்டி பார்த்து மகிழும் இந்த குடங்கு மண்டபத்தை நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன.. இவை சிற்ப அழகுடன் கூடிய இசைத்தூண்கள். இதன் விதானத்தில் சுமார் 16 அடிக்கு 16 அடி சதுரத்தில் எழில்மிகு வண்ண சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. முக்கால் அடி சதுரங்களில் 72 சிற்பங்கள் காணப்படுகின்றன.*

*இதை குபேர ஸ்தானம் என்று ஞானிகள் கூறுகின்றனர். நடுவில் அழகிய தாமரை தொங்குகிறது. இதில் பாரத நாட்டின் பண்பாடுகளைக்காட்டுவதான இதிகாசத்தைச் சார்ந்த சிற்பங்கள் உள்ளன.*

*இரண்டாம் பிரகாரத்தில் அழகிய வேலைப்பாடுமிக்க பதுமைகள் நிறைந்த 3 நிலை நுழைவு கோபுரம் உள்ளது. உள்புறம் உயிரோட்டமிக்க 5 அடி உயர பைரவர் நிறுவப்பட்டுள்ளது. மற்றும் சூரியர், சந்திரர் சிலைகளும் மேற்கு பார்த்த வண்ணம் அமைந்துள்ளன.*

*அழகிய மூலவர் கருவறை, எழில்மிகு விமானத்தினைத் தாங்கிய துவாரபாலகர்களுடன் காட்சியளிக்கிறது. இதற்கு முன்புறம் நந்தியுடன் கூடிய, அர்த்த மண்டபமும், ஸ்தாபன மண்டபமும், மகாமண்டபமும் உள்ளன.*

*மகாமண்டபத்தின் வடமேற்கு மூலையில் நவக்கிரகங்கள் நிறுவப்பட்டுள்ளன. 17 தூண்கள் கொண்ட தெற்குப் பக்க மதில் மண்டபத்தில், ரிஷப வாகனம், நால்வர், 63 நாயன்மார்கள், வடக்கு நோக்கி நிறுவப்பட்டுள்ளது. இதேபோல் மேற்கு மதில் மண்டபத்தில் பிள்ளையார், ஆறுமுகம், வள்ளி தெய்வானை உடனுறை முருகன் முதலான மூர்த்திகள் உள்ளனர்.*

### தனிச்சிறப்பு:

வெள்ளாறு நதியில் நீராடி, சுவர்ணபுரீஸ்வரர் மற்றும் அம்மன் பெரியநாயகி இவர்களை பக்தியுடன் வழிபட, பாவங்கள் போகும், தொழுநோய் போன்ற பெருநோயும் நீங்கும்.

இந்த கோயிலில் இறைவனை அடைய கடும் தவம் இயற்றிய அம்பாளுக்கு அருள் பாலித்து எழுந்தருளிய எம்பெருமானை தேவியே வணங்கி வரவேற்பது சிறப்பு அம்சம் ஆகும்.

வசிட்டர், வியாழன் ஆகியோர் வழிபட்ட தலம். திருநாவுக்கரசர் இத்தல இறைவனைப் பாடியுள்ளார். தேவார வைப்புத்தலம், ஸ்தபதி மகனை பாம்பு கடித்து இறந்தும் இத்தல இறைவன் ஒரு சித்தர் வடிவில் வந்து இறந்த சிறுவனை மீண்டும் உயிர்ப்பித்த தலம்.

வியாழ பகவான் இத்தல இறைவனை வழிபட்டதன் காரணமாக இத்தலத்தில் குருப்பெயர்ச்சி காலங்களில் இறைவனை வழிபட்டால் எல்லா வளமும் பெறுவர்.

நடு நாட்டில் அமைந்த பஞ்சபூத தலங்கள் ஊருக்கு ஒன்றாக வெள்ளாற்றின் கரையில் அமைந்துள்ளன. அவற்றுள் ஆகாய தலம் இத்திருக்கோயிலாகும்.

### திருவிழாக்கள்

சித்ரா பௌர்ணமி, பங்குனி, உத்திரம், ஆடி 18 ஆகிய விழாக்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

*காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரையிலும், மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.*

### போக்குவரத்து வசதி

*சின்ன சேலத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.*

### தங்கும் வசதி

*கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.*


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**
அருள்மிகு சொர்ணபுரீஸ்வரர் திருக்கோயில்,
கூகையூர், சின்னசேலம் வட்டம், விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9994987965

# 57. அருள்மிகு திரௌபதி அம்மன் திருக்கோயில்

சின்னசேலம் நகர்



| | | |
|---|---|---|
| இறைவி | : | திரௌபதி அம்மன் |
| தலவிருட்சம் | : | வில்வம் |

## அமைவிடம்

*கள்ளக்குறிச்சியிலிருந்து சேலம் செல்லும் சாலையில் 14 கி.மீ தொலைவில் சின்னசேலம் நகரில் பேருந்து நிலையத்திற்கு அருகில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

## தலவரலாறு

*சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் சின்னசேலம் கிராமத்தைச் சுற்றியுள்ள 48 குக்கிராமங்களின் தலைநகரமாகக்கொண்டு பாளையப்பட்டு என்ற பெயரில் ஒரு அரசன் ஆட்சி செய்து வந்த காலத்தில் இங்கு ஒருநாள் மிகவும் வயதான பெரியவர் ஒருவர் வந்து தங்கினார். அப்போது இந்த இடமானது வெறும்*

கள்ளி முள்ளும், சப்பாத்திகள்ளி செடிகளும் அடர்ந்தக் காடாக விளங்கியது. அங்கு சில நாட்கள் தங்கி சாகும் தருவாயில் இருந்த அந்த பெரியவர், ஊர் பாளையக்காரரை சந்திக்க வேண்டி பாளையக்காரரின் இருப்பிடம் வந்து சேர்ந்தார். அந்த பெரியவரை நேரில் கண்டதும் எளிதில் எவரும் சந்திக்க முடியாத தன்னை சிலரின் உதவியினால் சந்தித்துள்ளாரே என்ற ஆச்சரியத்தில் தாங்கள் சந்திக்க வந்ததின் நோக்கம் என்ன என்று வினவினார். அதற்கு அந்த பெரியவர் தன்னை தன்னுடைய இருப்பிடத்திற்கு அழைத்துச்செல்லுமாறு கூறினார். சரி என பாளையக்காரரும் உடன் அழைத்துச்சென்றார். தன்னுடைய இருப்பிடத்தில் இறங்கியதும், இங்கிருந்து தென்கிழக்கு புறமாக சுமார் 30 மைல் தூரம் செல்லுங்கள், அங்குள்ள வில்வ மரத்தின் அருகில் ஒரு அம்மன் எனக்குப் பல நாட்கள் காட்சி தந்துள்ளார். நீங்கள் அம்மன் எழுந்தருளியுள்ள இடத்தில் திருக்கோயில் கட்டி வழிபட வேண்டும் அப்படிச்செய்தால் இந்த கிராமமும் கிராம மக்களும் நல்ல முறையில் வாழ்வார்கள் என்று கூறினார். சில நிமிடங்களில் அந்தப் பெரியவரின் ஆத்மா பிரிந்துவிட்டது. பாளையக்காரர் அவரது உடலை தகனம் செய்ய ஏற்பாடு செய்துவிட்டு மறுநாள் ஊரில் உள்ள பொது மக்களை அழைத்துக்கொண்டு அந்தப் பெரியவர் கூறிய வில்வமரத்தினருகில் சென்று பார்த்தார்.



பெரியவர் கூறியதுபோல் அங்கு ஒரு அம்மன் மரச்சிலையும் அதனடியில் சில ஓலைச்சுவடிகளும் இருந்தன. அந்த

ஓலைச்சுவடியை மட்டும் எடுத்து வந்து புரோகிதரிடம் கொடுத்து படிக்கச் சொன்னார். அந்த அம்மன் சிலையானது ஸ்ரீ திரௌபதியம்மன் என்றும் அம்மனை அந்த பெரியவர் வணங்கி வழிபட்டு வந்தார் என்பதையும், அம்மனின் அருள் நம் கிராம மக்களுக்கு கிடைத்து உள்ளதாகவும் அதில் எழுதப்பட்டு இருந்தது. உடனே அம்மனுக்கு ஆலயம் கட்ட ஏற்பாடு செய்தார்கள். அந்த ஓலைச் சுவடியில் கண்ட வரலாறுகளை சுற்றிலும் உள்ள 48 கிராமங்களும் நன்கு அறிய வேண்டும் என்பதற்காக, மக்கள் புரிந்துகொள்ள முடிகின்ற அளவில் 18 நாள் பாரதம் பாடி, அம்மனுக்குக் காப்பு கட்டி, அம்மன் மற்றும் அர்ச்சுனன், தர்மர், பீமன், நகுலன், சகாதேவன், கிருஷ்ணன் ஆகியோரின் வரலாற்றின் பெருமையை ஒற்றுமையை மக்கள் அறிய, அதே மக்களை வைத்து வேடமணிந்து, அக்னி குண்டம் வளர்த்து, தீமிதித்துத் திருவிழாவாகக்கொண்டாடி வணங்கி வழிபட்டு, மேற்படி அம்மனின் திருவருளைப் பெற ஏற்பாடு செய்தனர். அதுமுதல் இது நாள்வரை மக்கள் வழிவழியாக அம்மனை வணங்கி வருகின்றார்கள். அம்மனை நோய்தீர்த்த அம்மனாக கருதி வழிபட்டு வந்த முத்தால் ராவுத்தர் என்னும் முகமதியர் திருத்தலத்தில் சிலையாக மாறினார் என்றும் வரலாறு உள்ளது.

### தனிச்சிறப்பு

அம்மனை வணங்கியவர்கள் எல்லா நலமும் பெற்று, செல்வந்தர்களாகவும், நோயற்றவர்களாகவும் வாழ்ந்து வந்துள்ளார்கள் என்பது வரலாறு.

பரிசுத்தமான உள்ளத்துடன் பாஞ்சாலி அம்மனை முறையுடன் வழிபட நினைத்தது நடக்கும். மனதில் ஒன்றை நினைத்து 48 நாட்கள் விரதமிருந்து இல்லத்தரசிகள் ஒருவேளை உணவு உட்கொண்டு 48 நாட்களும் அம்மன் துதி பாடி 48வது நாள் திரௌபதியம்மனை ஆலயத்திற்கு வந்து வழிபட, நினைத்தது நடக்கும், கேட்டது கிடைக்கும், வெற்றி தேடி வரும், துயரம் தொலைதூரம் ஓடிப்போகும். பரிசுத்தமாக அம்மனை வழிபட்டால் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கும். குறையில்லா

நிலை உருவாகும். வெள்ளிக்கிழமைகளில் எலுமிச்சை தீபமிட்டு, பிரார்த்தனை செய்து வலம் வந்தால் நினைத்தது நிறைவேறும்.

### திருவிழாக்கள்:

சித்திரையில் காப்பு கட்டுதல், வைகாசியில் தேர் திருவிழா நடைபெறுதல் ஆகியவை முக்கிய திருவிழாக்கள்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கள்ளக்குறிச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.


**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்**

அருள்மிகு திரௌபதியம்மன் திருக்கோயில்,
சின்னசேலம் நகர், விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9994987965

# 58. அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்

வீரசோழபுரம், கள்ளக்குறிச்சி வட்டம்



| | | |
|---|---|---|
| இறைவன் | : | அர்த்தநாரீஸ்வரா் |
| இறைவி | : | அனுபாம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

*அமைவிடம்:*

*உளுந்தூர்பேட்டை, கள்ளக்குறிச்சி சாலையில் கள்ளக்குறிச்சிக்கு முன்பாக 4 கி.மீ. தொலைவில் கூட்டுச்சாலையில் வடக்கே 3 கி.மீ. ல் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.*

*தல வரலாறு:*

*சோழ மன்னன் ஒருவன் தனது தந்தையின் அஸ்தியை காசி உள்ளிட்ட பல்வேறு புண்ணிய தலங்களுக்குச் சென்று நதிகளில் கரைத்துவிட்டு மீதமுள்ள அஸ்தியை இங்குள்ள மணிமுத்தாற்றில் கரைப்பதற்காக வந்து ஆற்றுக்கு அருகில் இரவு தங்கினான். காலையில் எழுந்து பார்த்தபோது கலயத்தில்*



வைக்கப்பட்டிருந்த அஸ்தியானது மல்லிகை பூவாக மாறி இருப்பதைக் கண்டு அதிசயித்தான். இதனால் இக்கிராமத்திற்கு மல்லிகார்ஜுனோபுரம் என்று பெயர் வைத்து ஆற்றங்கரையில் கோயிலை அமைத்ததாக இத்திருக்கோயிலின் கல்வெட்டு கூறுகிறது.

## தனிச்சிறப்புகள்:

அவ்வையின் மீது கொண்ட பெருமதிப்பினால் அங்கவை.. சங்கவையின் திருமணத்திற்கு மூவேந்தர்களும் திருக்கோயிலூருக்கு ஒற்றுமையாக வந்து கலந்து கொண்டனர். அவர்களில் சோழமன்னன் தங்கியிருந்த இடம் வீரசோழபுரம் என்று ஆயிற்று. இங்குள்ள அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில் 1000 ஆண்டுகளுக்கு முன் சோழர்களால் கட்டப்பட்டது. மணிமுக்தா ஆற்றில் கரையில் அமைந்துள்ள இக்கோவிலில் வீற்றிருக்கும் சிவனை வழிபட்டால் பாவம் நீக்கி முக்தி தரும் தலமாக சிறப்பு பெற்றுள்ளது. ஆண்டு தோறும் பங்குனி மாதத்தில் பிரம்மோற்சவ விழாவில், தேரோட்டம் நடந்து வருகிறது. இத்திருக்கோயிலில் சூரிய நாராயணமூர்த்தி தனிச்சன்னதியில் எழுந்தருளி அருள்பாலிக்கிறார்.

## திருவிழாக்கள்

மாசி மகத்தில் தேரோட்டமும், ஆனித்திருமஞ்சனம், நவராத்திரி, தீபாவளி உற்சவம், திருக்கார்த்திகை தீபம், திருவாதிரை திருநாள், மஹாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்றவையும் இங்கு நடைபெறும் முக்கிய உற்சவங்களாகும்.

| நேரம் | காலபூஜை |
|---|---|
| காலை 8.00 மணி | காலசந்தி |
| மாலை 6.00 மணி | சாயரட்சை |

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7.00 மணி முதல் 10.00 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும்.

### போக்குவரத்து வசதி

கள்ளக்குறிச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

### தங்கும் வசதி

கள்ளக்குறிச்சியில் தனியார் தங்கும் விடுதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

ஆய்வாளர்/ தக்கார்,
அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயில்,
வீரசோழபுரம், கள்ளக்குறிச்சி வட்டம்.
விழுப்புரம் மாவட்டம்.
Mobile: 9842503363



ஓங்கி உலகளந்த உத்தமன்
(திருக்கோவிலூர் அருள்மிகு திருவிக்ரமசுவாமி
திருக்கோயில் இராஜகோபுர சிற்பம்)



திருத்தேர் சிற்பம்
(கீழையூர் அருள்மிகு வீரட்டேஸ்வரர்
திருக்கோயில் திருத்தேர்)



சம்மந்தருக்கு அருளும் உமா சிவன்
(அரகண்டநல்லூர் அருள்மிகு அதுல்யநாதேஸ்வரர் திருக்கோயில் கோபுர சிற்பம்)



நெற்களஞ்சியம்
(திருவரங்கம் அருள்மிகு அரங்கநாதசுவாமி
திருக்கோயில்)



ஔவையார். சுந்தரர் - சேரமான் பெருமாள்
நாயனார் திருக்கைலாய காட்சி
(கீழையூர் அருள்மிகு வீரட்டேஸ்வரர்
திருக்கோயில்)



அருவமில்லா உருவம்
(திருவக்கரை அருள்மிகு சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில்)



சண்டிகேஸ்வரர் வரலாறு
(திருநாவலூர் அருள்மிகு பக்தஜனேஸ்வரர் திருக்கோயில்)





இசைக் குதிரைகள்
(சேந்தமங்கலம் அருள்மிகு ஆபத் சகாயேஸ்வரர் திருக்கோயில் குளக்கரை)



எல்லா உயிர்க்கும் இறைவன் நீ
(பனையபுரம் அருள்மிகு நேத்ரோதாரகேஸ்வரர் திருக்கோயில்)



இராஜேந்திரசோழன் இலட்சினை
(எசாலம் அருள்மிகு இராமநாதீஸ்வரர் திருக்கோயில்)



கொற்றவை
(சிங்கவரம் அருள்மிகு ரங்கநாத சுவாமி
திருக்கோயில்)



குரு தட்சிணாமுர்த்தி
(சேந்தமங்கலம் அருள்மிகு ஆபத் சகாயேஸ்வரர்
திருக்கோயில்)




திருமகள் தலைவன்
(மரக்காணம் அருள்மிகு பூமீஸ்வரர் திருக்கோவில்)



"ஆருர் எம் பிச்சைத்தேவா, என் நான்
செய்கேன் பேசாயே"
(பிட்சாடனர் - மரக்காணம்
அருள்மிகு பூமீஸ்வரர் திருக்கோவில்)



நரசிம்மமூர்த்தி
(மரக்காணம் அருள்மிகு பூமீஸ்வரர் திருக்கோவில்)



கவிகையின் கீழ் துர்க்கை
(மரக்காணம் அருள்மிகு பூமீஸ்வரர் திருக்கோவில்)

## விழுப்புரம் மாவட்டத்தில் அன்னதானத்திட்டம் நடைபெறும் திருக்கோயில்கள்

| வ. எண் | அன்னதானம் நடைபெறும் திருக்கோயில் விவரம் | அன்னதானத் திட்டம் தொடங்கப் பட்ட நாள் | பயனாளிகள் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில் மேல்மலையனூர், செஞ்சி வட்டம் | 23.03.2002 | 100 |
| 2. | அருள்மிகு சந்திரமௌலீஸ்வரர் திருக்கோயில், திருவக்கரை, வானூர் வட்டம் | 23.03.2002 | 100 |
| 3. | அருள்மிகு ஆஞ்சநேயசுவாமி திருக்கோயில், விழுப்புரம் நகர் மற்றும் வட்டம் | 23.03.2002 | 50 |
| 4. | அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் (ஸ்ரீமத் சிவஞானபாலயசுவாமிகள் திருமடம்), மயிலம், திண்டிவனம் வட்டம் | 15.08.2002 | 100 |
| 5. | அருள்மிகு லட்சுமிநரசிம்மசுவாமி திருக்கோயில், பூவரசங்குப்பம், விழுப்புரம் வட்டம் மற்றும் மாவட்டம் | 06.11.2005 | 50 |
| 6. | அருள்மிகு லட்சுமிநரசிம்மசுவாமி திருக்கோயில், பரிக்கல், உளுந்தூர்பேட்டை வட்டம் | 14.01.2006 | 50 |
| 7. | அருள்மிகு முத்துவிநாயகர் (எ) மொட்டைவிநாயகர் திருக்கோயில், அவலூர்பேட்டை, செஞ்சி வட்டம் | 14.01.2006 | 50 |
| 8. | அருள்மிகு லட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில், திண்டிவனம் நகர் மற்றும் வட்டம் | 11.09.2011 | 50 |
| 9. | அருள்மிகு மஞ்சனீஸ்வரர் திருக்கோயில், கீழ்ப்புத்துப்பட்டு, திண்டிவனம் வட்டம் | 11.09.2011 | 50 |
| 10. | அருள்மிகு புத்துவாயம்மன் திருக்கோயில், கோலியனூர், விழுப்புரம் வட்டம் | 11.09.2011 | 50 |
| 11. | அருள்மிகு திருவிக்ரமசுவாமி திருக்கோயில், திருக்கோயிலூர் நகர் மற்றும் வட்டம் | 11.09.2011 | 50 |
| 12. | அருள்மிகு வீரட்டேஸ்வரர் திருக்கோயில், கீழையூர், திருக்கோயிலூர் வட்டம் | 11.09.2011 | 50 |
| 13. | அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில், திருவரங்கம், சங்கராபுரம் வட்டம் | 11.09.2011 | 50 |
| 14. | அருள்மிகு சிதம்பரேஸ்வரர் திருக்கோயில், கள்ளக்குறிச்சி நகர் மற்றும் வட்டம் | 15.10.2012 | 50 |

மேற்கண்ட திருக்கோயில்களில் பக்தர்கள் தங்களது பிறந்தநாள், திருமண நாள், குழந்தைகள் பிறந்தநாள் போன்ற முக்கிய தினங்களில் 100 பேருக்கு அன்னதானம் செய்வதற்கு ரூ. 2, 000/-ம் 50 பேருக்கு ரூ. 1, 000/-ம் செலுத்தினால் குறிப்பிட்ட அந்த நாளில் அன்னதானம் செய்யப்படும்.





## ஒரு கால பூஜை நிதியுதவித் திட்டம்

ஒரு காலத்திற்குக் கூட பூஜை செய்ய இயலாத நிலையில் உள்ள கோயில்களுக்கு ஒரு காலமாவது பூஜை நடைபெற வேண்டும் என்று மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் 2002 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இத்திட்டத்தின்படி அரசு பங்களிப்பு ரூ.90,000-ம் பொதுமக்கள் பங்களிப்பு ரூ.10,000 ஆக மொத்தம் ரூ. 1 லட்சம் முதலீடு செய்யப்பட்டு அதில் பெறப்படும் வட்டியைக்கொண்டு இத்திட்டம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

விழுப்புரம் மாவட்டத்தில் 560 திருக்கோயில்களில் ஒரு கால பூஜைத்திட்டம் செயல்படுத்தப்படுகிறது.

இத்திட்டத்தில் இணைய விரும்பும் திருக்கோயில்கள் ரூ.10,000-க்கான வரைவோலையை இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் பெயருக்கு எடுத்து, சரக ஆய்வர் பரிந்துரையுடன் உதவி ஆணையரிடம் சமர்ப்பிக்க வேண்டும்.

## கிராமப்புற திருப்பணி நிதியுதவித் திட்டம்.

இந்து சமய அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ள கிராமப்புறங்களில் அமைந்துள்ள ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் திருப்பணி செய்யும் பொருட்டு ரூ.50,000 வீதம் நிதியுதவி, மாண்புமிக தமிழக முதல்வர் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.

## ஆதிதிராவிடர், பழங்குடியினர் வசிக்கும் பகுதி திருக்கோயில்கள் திருப்பணி நிதியுதவித்திட்டம்

இந்து சமய அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் இல்லாத ஆதி திராவிட, பழங்குடியின மக்கள் வசிக்கும் பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில்களுக்கு திருப்பணி செய்யும் பொருட்டு ரூ.50,000 வீதம் நிதியுதவி, மாண்புமிகு தமிழக முதல்வர் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.

## கிராமக்கோயில் பூசாரிகள் ஓய்வூதியத்திட்டம்

அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் இல்லாத திருக்கோயில்களில் 10 வருடம் பணிபுரிந்து 60 வயது பூர்த்தி அடைந்திருக்கும் பூசாரிகளுக்கு மாதந்தோறும் ரூ. 1,000 ஓய்வூதியம் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.



KEY MAP
Not To Scale
A.P
KARNATAKA
TAMIL NADU
KERALA
Polur
TIRUVANNAMALAI
Idaippattu
33
Avalur
Chengam
TIRUVANNAMALAI
DHARMAPURI
T A M I L
Adanur
Irudaiyampattu
47
50
51
48
43
44
42
49
Viropandi
Kandachchipuram
Gudaram
Brahmakundam
Ponparappi
53
Sirpanandal
Attiyur
Ariyalur
SANKARAPURAM
Puttai
Madampundi
TIRUKKOVIL
Sankarapuram
Viriyur
Gudalur
Palangur
Cholavandipuram
Karadichittoor
Eduttavainattam
Murarbadu
Rashivandiyam
Parigan
Sulankurichchi
52
ULUNDURP
Iraiyur
Alattur
Kachchirayapalaiyam
58
Thiyagadurgam
Kalamarudur
Erukkampattu
Thorangur
Kallakkurichchi
Pidagam
36
41
Elavanur
Tiruvakkarai
Indali
Paitanthr
Kottalam
Nagalur
Vengavadi
Ulundurpet
Parindal
KALLAKKURICHCHI
55
57
54
Chinna Salem
Pukkiravari
Asanur
Attur
Mel Nariyappanur
Asakalattur
Nayinarpalayam
Kilkuppam
SALEM
58
Kugaiyur
CU
PERAMBALUR



Vandavasi
KANCHIPURAM
Cheyur
GINGEE
Gingee
TINDIVANAM
VANUR
VILUPPURAM
PUDUCHCHERI
(Pondicherry)
CUDDALORE
Panruti
BAY OF BENGAL
Vriddhachalam
DDDALORE
Auroville
Bommayapalayam
Kottakuppam
Marakkanam
Kaliveli Tank
Perumal Eri